First Edition : December, 1994



Copies : 1000

**ARANERIEA IRAINERI**

**Tamil**

**By**

**Dr. K. Jagadeeswaran, Phd.,**
**'MAANILAN'**

---

''அறநெறியே இறைநெறி''— எனும் இந்நூல்
திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின்
பொருளுதவியின் துணையோடு வெளிவருகிறது.

---

**விலை : ரூ. 25-00**

---

அச்சிட்டோர் :
துர்காதேவி பிரிண்டர்ஸ்,
13, குமரன் காலனி,
சைதை, சென்னை-15.

# அணிந்துரை

இறைவன், இறைநெறி, நிற்பார் எய்தும் பயன், நில்லார் உறும் கேடு; உயிர் நலம், உடல் வளம், சான்றோர் வாழ்வியல் சிந்தனைகள்— என இன்றைய மானுடத்துக்கு இன்றியமையாத வாழ்வியல் வழிமுறை களைத் தொகுத்தும் வகுத்தும் வழங்குகிறது இந்த நூல்.

எல்லாக் கலைகளையும் மனிதன் இன்று அறிந்துள் ளான்; பலவகை ஆற்றல்களை— விண்ணில் பறக்கவல்ல, கடலைக் கடக்கவல்ல, அண்டங்களுக்கு அப்பால் செல்லவல்ல, ஒரே நொடியில் உலகை அழிக்கவல்ல— ஆகிய ஆற்றல்களை மனிதன் இன்று பெற்றுள்ளான். ஆனால் அடிப்படையான வாழ்க்கைக் கலையை, ஒருவரோடு ஒட்டி, உணர்ந்து வாழும் வாழ்க்கைக் கலையைத்தான் அவன் கற்கவில்லை; கற்றுத் தருவாரும் இல்லை.

இதனை உணர்ந்த, நல்லுள்ளம் கொண்ட சமுதாய உணர்வுடைய எழுத்தாளர் சிலர், இன்றைய மனிதன் அன்போடு வாழ அமைதியாக வாழ, பண்போடு வாழத் தம் படைப்புக்களை எழுதி அளித்துள்ளனர். அத்தகைய சமுதாய உணர்வுடைய எழுத்தாளர்களுள் ஒருவரான டாக்டர் மாநிலன் இந்த நூலை படைத்தளித்துள்ளார்.

'கற்றதனால் ஆய பயன் கடவுட் காட்சி பெறுதல்' என்றும் திருவள்ளுவர் மனக்கோள் வழி இந்நூலை அவர் இயற்றியுள்ளமை கற்கும்போது புலப்படும்.

இவர் நடை, எளிய நடை- காரண காரிய விளக்கத்தோடு கூடிய தருக்க நடை என்றும் சொல்லலாம்.

எடுத்துக்காட்டு : பக். 12, பத்தி-2

''உலகில் மூழ்கி விடுதல் என்பது உலகில் உள்ள எல்லாவித பற்றுக்களையும் தொடர்வது— தொடர இயலாமையால் வருந்துவது— தொடர்ந்ததன் காரணமாகப் பீடிக்கப்படுவது. அது ஒரு நோய்— உள்ளம் ஆரோக்கியமாக உள்ளவரை மனிதனுக்கு எவ்வித தீங்கும் இல்லை."

''கூடாரத்தில் மூக்கை நுழைக்க இடங்கேட்டு கூடாரத்தையே அபகரித்துக் கொள்ளும் அரபுநாட்டு ஒட்டகக் கதை வழி காமத்தின் வஞ்ச ஆற்றலை 'பிரமச்சரியம்'— என்ற தம் கட்டுரையில் ஆசிரியர் புலப்படுத்துவது பொருத்தமாகவும் சிறப்பாகவும் அமைந்துள்ளது." கடமை, கருணை, சேவை என்ற போர்வையில், காமம் நுழைந்து பின் ஆன்மாவை அழிப்பதை ஆசிரியர் நன்கு தெளிவு செய்கிறார். மனத்தூய்மையும், மன ஆற்றலும், எளிய வாழ்வுமே— பிரமச்சரிய கற்பு வாழ்வைக் காக்க வல்லன என ஆசிரியர் நன்கு தெளிவு செய்கிறார்.

இறுதியில் புத்தர்பிரான் தொடங்கி, டாக்டர் இராதாகிருட்டிணன் வரை பதினான்கு ஆன்றோர்கள் கண்ட வாழ்க்கை நெறியினைக் கூறித் தம் நூலை நிறைவு செய்கிறார். இப்பகுதி அவரவர்க்கு ஏற்றவாறு ஞான, பக்தி, யோக, கர்ம, வழிபாட்டில் யார் யாருக்கு எஃதெஃது தேவையோ அவரவர் அந்தந்த நெறியைத் தெரிந்தெடுத்துக் கொள்ளப் பெரிதும் துணை செய்வது.

உடற்பிணி மருத்துவன் நோய்நாடி, நோய் முதல் நாடி, அதன் வாய் நாடி வாய்ப்பச் செய்தல் போல்— இந்த நூலாசிரியர் உள, உயிர்ப் பிணி மருத்துவனாய் அவற்றுக்கு வரும் ஊறுகளைப் புலப்படுத்தி, களையும் வகை கூறி வழியும் கூறிச் செயற்படுத்துகிறார்.

இவ்வகையில் இந்த நூல் தனிச் சிறப்பு வாய்ந்தது. நூலாசிரியர் வாழ்க ! நூல் பெற்று, கற்று, உலகம் உய்க !

**—டாக்டர் பொன். சௌரிராஜன்**
*பேராசிரியர் (ஓய்வு)*
**திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.**

# என்னுரை

"அறநெறியே இறைநெறி" எனும் இந்நூல் எழுது வதற்குக் காரணம்; இறைநெறியினை மட்டும் உணர்ந்து, அறிந்து, புரிந்து, என்றும் எப்போதும் இல்லறத்தை விட்டு துறவறம் பூண்டு "முக்காலும் அறிந்த இறைவா !" என்றும், நீயே துணை என்றும் தியானத்தில் இருந்து இறைவனை வழி படுவதால் மட்டும் பயன் இல்லை என்பதை அனைவருக்கும் விளக்குவதற்காகவே எழுதப் பட்டது.

இறைநெறி என்பது மனிதன் அன்றாட வாழ்க்கையில் எதிர்கொள்ளும் பிரச்சனைகட்கு இடையில் தனது உள்ளத்தைத் தீய வழிகளில் செலுத்தாது தனது கடமையி லிருந்தும் வழுவாது, இல்லறத்தையும் இனிதாக்கி நாட்டு நடப்போடு நாமும் வாழ அடுத்தவர்களும் வாழ யாருக்கும் எப்போதும் எந்த வழியிலும் தீங்கு விளை விக்காது நலமுடன் வளமுடன் வாழ நாம் கடைபிடிக்கும் அறநெறியே ஆகும்.

எனவேதான் அறநெறி சிறந்தால் தான் இறைநெறி சிறக்கும் என்பதும் உணர்தல் வேண்டும். அறநெறியே இறைநெறியாகும்.

ஆதிகாலம் தொட்டே மனிதன் வளர்ச்சியில் பல மாற்றங்களைக் கண்டவன். ஞானிகளாகவே அனைவரும்

வாழவேண்டும் என்பது இயலாத ஒன்று. இன்றைக்கு மனித வாழ்வில் வாழ்வதற்கே பல பிரச்சனைகள். கல்வி பயில மேலும் பிரச்சனை. படித்தபின் வேலை கிடைக்க பிரச்சனையே! இல்லறத்தில் பல பிரச்சனைகள், தொல்லைகள். இவைகளுக்கெல்லாம காரணம் நமது நாட்டின் வறுமை முழுமுதற் காரணம். இதன் காரணங் களே எப்படியாவது முன்னேறத் துடிக்கும் மக்களின் குறுக்கு வழி முயற்சிகள். இது அரசியல் சரிவர மக்களுக்கு அமையாத அமைப்பாக இருப்பதால் எழும் பிரச்சனைகள்.

எது எப்படியிருப்பினும் மனிதன் உள்ளத்தை உறுதியுடன் நெறி தவறாது வாழ முயல்வது அவசியம் ஆகிறது. எனவே மனிதன் முடிந்த வரை நல்ல குணங் களையும் நல்ல பயிற்சிகளையும் மேற்கொண்டு நல்ல வனாக வாழவேண்டும் என்பது முக்கியம்.

ஒரு நாட்டின் வளர்ச்சி முன்னேற்றம் மனிதனின் ஒழுக்கத்தால் தானே தெரிகிறது. எனவே ஒரு தனி மனிதன் ஒழுக்கம் கூட பலரின் முன்னேற்றத்துக்கு வழி காட்டுகிறது. பலரின் ஒழுக்கம் ஒரு நாட்டின் முன்னேற்றத்துக்கே பயன்படுகிறது.

எனவே தான் முதலில் அறநெறியில் மனிதன் வாழ்க்கை மாற்றப் பட்டால் அந்த நாடே முன்னேற அது பெரிதும் துணை நிற்கும். அதன் விளக்கங்கள் இந்நூலில் கண்டு அறிந்து கொள்ளலாம்.

அதுமட்டுமல்ல, பல ஆன்றோர்கள் வாழ்ந்து சிறப் பித்தது நமது நாடு அவர்களில் சிலர் மனித வாழ்வு சிறக்க அறநெறியையும் இறைநெறியையும் எப்படிக் கடைபிடித்தால் நல்லது என்று பகன்றனர் என்பதையும் நாம் அறிவது சாலச் சிறந்தது. அதனால் தான் சில ஆன்றோர்கள் காட்டிய அறநெறியையும் இந்த நூலில் இணைத்துள்ளேன்.

முடிந்தவரை இறைநெறியையும்- அறநெறியையும் எடுத்துச் சொல்லி, ஆன்றோர்கள் அறநெறியையும் இதில் அடக்கி, ஒரு நூலாக மக்களுக்குத் தர எண்ணினேன்.

இந்நூல் படித்துப் பயன் பெற வேண்டும் என்பதும் இதனால் பலர் பயன்களும், உள்ள அமைதியும் அடைவ தோடு தான் தன் இல்லத்தாருடனும், நட்புடனும், நாட்டு நடைமுறைகளில் இணைந்து இன்பம் பெறு வார்கள் என்று நம்பி எழுதி வெளியிடத் துணிந்தேன்.

இந்நூலுக்குக் காட்டும் அனைவரின் ஆதரவால் எனது முயற்சி பயன்படுவதோடு அனைவருமே பயன் அடைவார்கள் என்று நம்புகிறேன்.

**—டாக்டர் மாநிலன்**

# பொருளடக்கம்

## இறைநெறி



## அறநெறி

# 1. இறைவன் யார் ?

இறைவன் யார்? இறைவன் என்றால் என்ன? நமக்கு இறைவன் ஏன்? இறைவனே இல்லை என்றால் என்ன? இறைவனால் யாருக்கு என்ன பயன்? இறைவனை வணங்கா விட்டால் என்ன நட்டம்? "அவனின்றி அணுவும் அசையாது" எப்படி? இப்படியெல்லாம் கேள்விகள் கேட்ட வண்ணம் இருக்க முடியும். இவைகளுக்குச் சரியான பதில் பெற முயலும் போது நமக்குத் தோன்றும் விளக்கங்களும், அதனால் நாம் பெறுகின்ற மன அமைதியும் தான் நமக்குப் பெறும் பயன்.

அந்தப் பயன் அனைவரும் பெறவேண்டும் என்கின்ற நோக்கு அனைவருக்குமே இருத்தல் வேண்டும். நமது கடமையை மறந்து மணிக் கணக்கில் பூசைகள் செய்து விடுவது மட்டும் இறைவனை வணங்குவது ஆகாது. நமது நிலை உணராது கடன்பட்டு இறைவனுக்கு, காண்போர் களிக்கும் வகையில் விழா எடுப்பது அல்ல இறைவனுக்கு நாம் செய்யும் வணக்கம்.

தெள்ளத் தெளிவான உள்ளத் தூய்மையோடு வாழ முயலுவதே இறைவன் குணம். இறைவனுக்கு உருவமில்லை உணர முடியும். இறைவனை என்றும் தீயவைகட்கு ஒப்பிடுதல் இல்லை. இறைவன் என்றாலே உண்மை.

அன்பு, அறிவு, ஆற்றல், உண்மை, உழைப்பு இவை கள் எல்லாமே இறை குணங்களே.

நலமோடு, வளமோடு வாழவேண்டும் என வாழ்த்தும் குணம்தான் இறை குணம். ஒருவர் மிகவும் துன்புற்றச் சூழ்நிலையில் இருக்கும்போது மற்றொருவர் எதிர்பாராது வந்து துன்புறும் நபருக்கு உற்ற துணையாக இருந்து அவர் துயரத்தைப் போக்கி விடுகிறார் என்றால் அவரைப் பார்த்து 'கடவுள் போல் வந்து காப்பாற்றினார்' என்று சொல்லி வாழ்த்துகிறோம். அங்கே அந்த நபர் உருவில் இறைவனைக் காண்கிறோம்.

என்வே இறைவன் என்று தனியாக ஒரு வேடம் அணிந்து கொண்டு யாரும் எங்கும் இருப்பதில்லை. இறைவன் எல்லாருடைய உள்ளத்திலும் இருப்பவன் தான். நலம் பயக்க நல்லது செய்யும்போது இறை குணம் வெளிப்படுகிறது. சுயநலம் மட்டும் கருதி வாழுகின்ற போது மனிதனாகத் தெரிகிறான். இழி குணத்துடன் அலைந்து திரியும்போது மிருகமாக மாறி விடுகிறான். மனிதன் மனித குலத்துக்கும் சற்று மேலான குணத்தோடு வாழ எண்ணும்போது இறைவனாகின்றான். என்றாலும் எல்லா மனிதர்களுக்கும் நல்ல குணம், நல்ல எண்ணம் ஏற்பட வேண்டும் என்றால் அது இயலாதது. காரணம் உலகச் சூழ்நிலை. எனவே சூழ்நிலையை மாற்ற வேண்டி தான் மனிதன் ஒரு தனி இடத்துக்குச் சென்று நின்று அவனுக்குத் துணிவைத் தர— துணையாக இருக்க— நலம் பெற— வேண்டுதல் தேவைப்பட்டது.

இப்படி அவன் தனிமையாக ஓர் இடத்தைத் தேர்ந் தெடுத்ததால் அவனையும் அறியாது அந்த இடம் புனித மாயிற்று. அதுவே அவன் வணங்கும் இறைவன் குடி கொண்டுள்ள கோயிலாக மாறியது.

ஆதிமனிதன் தனக்கும் மீறிய ஆற்றலைக் கண்டு அஞ்சினான். என்ன செய்வது எனப் புரியாமல் விழித்

தான். இயற்கை தான் இறைவன் என்றும், அதன் ஆற்றல் மிக உயர்ந்தது என்றும் உணர்ந்தான். காட்டில் வாழ்ந்த நேரத்தில் கோடையில் திடீரென தீ பற்றி எரிவதை கண்ட போதும் ; கடலில் நீரலை பேரலையாய் உருவெடுத்த போதும் ; மழைக்காலத்தில் பெருமழையாகி வெள்ளமாக உருவெடுத்து அனைத்துப் பொருட்களும் அடித்துக் கொண்டு செல்லுவதைக் காணும் போதும் ; அஞ்சி அஞ்சி வாழ வேண்டியவனானான்.

இப்படி அவன் அஞ்சுதலே அவனையும் மீறிய ஏதோ ஒரு இயற்கையான ஆற்றல் உள்ளது என்பதை உணர்ந்தான். அவன் வாழ்க்கை முறை மாறிக்கொண்டு வரும் போது இவைகளெல்லாம் தான் இறைவன் என்பதை எண்ணி கலங்கிய நெஞ்சத்தால் 'இந்த இடுக்கண்கள் களைய இறைவா எங்களைக் காப்பாற்று' என அவன் கண்ணீர் விட்டு வேண்டுபவனாக மாறினான். அந்த இயற்கை இடுக்கண்களில் இருந்து விடுபட இறைவனை வணங்கத் துவங்கிய மனிதன் தான் இன்று எல்லாவித குறைபாடுகளுக்கும் இறைவனையே நம்பும் ஆற்றலிழந்தவனாக மாறிவிட்டான்.

நீதி— நேர்மை— இல்லாதவன் கூட இறைவனை வணங்குகிறான். கொலை, கொள்ளை இவைகளையே தொழிலாகக் கொண்டவன் கூட இறைவனை வணங்குகிறான். இப்படி எல்லோரும் இறைவனை வணங்கி வழிபடுதலால், இறைவன் யாருக்குத் துணையிருப்பான். நல்லவனுக்கா ? தீயவனுக்கா ? துணிவுள்ளவனுக்கா ? கோழை குணம் உள்ளவனுக்கா ? இதில் யாரோ ஒருவன் நலம் பெறுகிறான், மற்றவர்கள் இடுக்கண்களில் அவதியுறுகிறார்கள்.

உழவன் உழுது பயிரிடுவதற்குச் செல்லும்போது 'இறைவா இன்றைக்கு மழை பெய்து எனது நிலம் ஈரமாக்கப்பட்டால் நான் நன்றியுடையவனாக இருப்

பேன்' என வணங்குகிறான். அதே இறைவனிடம் அந்த இரவு வீதி நாடகம் போடும் குழுவினர் 'இறைவா இன்று மழையே பெய்யக்கூடாது அப்படி மழை பெய்யாது தடுத்து எங்களுக்கு அருள் புரிந்தால் நாங்கள் வாழ் நாளெல்லாம் உம்மை போற்றி வணங்குவோம்' என இறைவனை யெண்ணி இறைஞ்சுகின்றார்கள்.

இப்படி மனிதர்கள் அவரவர் போக்கிற்கு ஏற்றபடி இறைவனை வணங்கி வழிபடுகின்றனர். இறைவன் ஒருவர் இருப்பின் என்ன செய்வார்? யாருக்கு என்ன பயன் என்று நிர்ணயிப்பார்? இப்படிப்பட்ட இக்கட்டான சூழ்நிலையை இறைவனுக்கே தந்து வேடிக்கைப் பார்ப்பது தான் மனிதன் வழக்கம்.

பொதுவாக மனிதனுக்கு சுயநலம் தான் பெரிதாகப் புலப்படும். யார் எக்கேடாவது கெடட்டும், தான் நலமாக இருக்கவேண்டும் என்பதே மனித குணம். எனவே தான் மனிதனுக்கு இறைகுணம் தேவை என்கிறோம். இறை குணம் மெல்ல மெல்ல அதே நேரத்தில் உறுதியாக வருமா யின் மேற்படி குழப்பங்கள் வருவதைத் தவிர்க்கலாம்.

உலகில் உள்ள எல்லோருமே ஞானிகள் அல்ல. சாதாரண குடிமகன். அவன் அன்றாட வாழ்க்கைக்கே அவதியுறுபவன். அவன் கூட நலமாக இருத்தல் வேண்டாமா? எனவே தான் யாராக இருப்பினும் தனது உள்ளத்தில் உறுதியான உழைப்பும்— உண்மை கலந்த தெளிவான வாழ்க்கையையும் பின்பற்றி நடக்க வேண்டு மென கருதுகிறோம்.

நமது எண்ணங்கள் எல்லாமே நடைபெறுவதில்லை. சில நேரங்களில் முயன்றாலும் முடிவதில்லை. அதுவே நாம் எண்ணிப் பார்க்காத நேரத்தில் நடைபெற்று நம்மை ஆச்சரியத்தில் மூழ்கடிக்கும். அதுவே விந்தை! விஞ்ஞானம் கூட கண்டுகொள்ள முடியாத விந்தை!

நாம் இன்றைக்கு நல்லபடியாக கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டு விட்டோம், எனவே நமக்கு எந்தக் - குறையும் வராது என்று நம்புவது கூட மூடநம்பிக்கையே

கோயிலுக்குச் சென்று வழிபடுதல் இறை குணத்தைப் பெருக்கிக் கொள்ள பயன்படுமே அன்றி தனது குறைகள் எல்லாவற்றையும் இறைவனே முன்னின்று களையப் பயன் படாது. ஆடம்பர பூசை செய்பவன் அதிக பலனும் சுமாரான பூசை செய்தவனுக்குச் சுமாரான பலனும், பூசையே செய்யாதவனுக்கு எந்தவிதமான நன்மை இல்லாமையும் நிகழ்வதில்லை.

'எந்தவித பூசையும் செய்யமாட்டான், அவன் நன்றாக இருக்கின்றான். நான் தினமும் இறைவனை யெண்ணி பூசிக்கிறேன், கடன்பட்டாவது இறைவனுக்கு ஆடம்பர மாக விழா எடுக்கின்றேன். ஆனால் எனக்கு எப்போதும் துயரம் சூழ்ந்த சூழ்நிலையினையே இறைவன் தருகின் றாரே' என மனம் குன்றி வேதனைப்படுவோர் பலரை பார்த்திருக்கின்றோம். அப்படிப்பட்டோருக்கு என்ன ஆறுதல் சொல்ல முடியும்? 'நடக்க வேண்டியவை நடக்க வேண்டிய நேரத்தில் நடக்கும்' இது பொதுவாக அனைவரும் சொல்லுகின்ற வேதாந்தம். அப்படியென் றால் தேவையற்ற பூசைகள் ஏன்? இறைவன் ஏன்? இறைவனுக்கு ஆறுகால பூசை ஏன்? இறைவன் குடியிருக்க கோயில் ஏன்? அதற்கு கும்பாபிஷேகம் ஏன்? தினம் தினம் வரிசையில் வந்து பூசிக்கக் கூட்டம்தான் ஏன்?

இவைகள் நாத்திகன் கேட்கும் கேள்விகள் அல்ல. நாமும் தெரிந்து கொள்ள வேண்டிய கேள்விகள் தான். எனவேதான் மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறோம்; மனித வாழ்க்கையை மட்டும் வகைப் படுத்திப் பார்த்துப் பலன் அளிப்பது அல்ல இறைவன் வேலை.

இறைவன் இந்த உலகம் - சூரியன் - சந்திரன் - போன்ற அனைத்து கோளங்கள்; காற்று - நீர் - நிலம் -

இவைகள் போன்ற இயற்கையினைப் பாதுகாக்கும் ஓர் ஆக்கப்பூர்வ ஆற்றல். இதையே சக்தியென அழைக்கின்றோம்.

இயற்கையே கூட சில நேரங்களில் நிலை தடுமாறி பூகம்பம், புயல் என்று உருவெடுத்து தனது மீறிய ஆற்றலை வெளிப்படுத்துகிறது. அதில் சிக்கித் தினறி பல நட்டங்களுக்கு உட்பட்டு வேதனையில் உழல்வது கூட மனிதன் தான். இயற்கை இடுக்கண் என்பது பூச்சிகள், பறவைகள், மிருகங்கள், மனிதர்கள் அத்தனைக்கும் பொது தான். என்றாலும் இறைவனை நிந்திக்கும் குணம் கூட மனிதனுக்கு மட்டும் தான் உண்டு. மற்றவைகள் எங்கே சொல்வது? எப்படிச் சொல்வது? அந்த சிறப்பான சிந்தனை அறிவு மனிதனுக்கு மட்டும் தானே உள்ளது!

எனவேதான், மற்ற உயிரினங்களை விட உயர்வானது மனிதப்பிறவி. இப்படிப்பட்ட உயர்வான உயிரினத்தின் மூலம் மனிதனாக உருவெடுக்கும் வாய்ப்பைப் பெற்றதின் பயனுக்காகவாவது இறைவனுக்கு நாம் நன்றி சொல்ல வேண்டாமா? இது இயற்கைக்கு நாம் செலுத்தும் நன்றி என்று கூட எண்ணி மகிழ்வோம்.

எது எப்படியாயினும் சிந்திக்கும் ஆற்றல் நமக்கு உள்ளது. என்வேதான் எதையும் ஏன்? எப்படி? என்று சித்திக்கும் சிறப்பு நம்மிடம் மட்டுமே உள்ளது. அப்படிப் பட்ட சிறப்பு நம்மிடம் இருந்தும் உண்மையை அறிந்து கொள்ள முயலாமை தவறன்றோ?

அந்த முயற்சியின் ஆரம்பம்தான் இறைவன் என்றால் என்ன? என்பது. நமது ஐம்புலன்களையும் அடக்கி ஒரு நிலைப்படுத்தி, உள்ளத் தூய்மை பெற நாம் அமைதியாக சிறிது நேரம் ஆழ்ந்து அமர்ந்து இருப்போமானால் உள்ளத்தில் ஏற்படும் குழப்பங்கள், உளைச்சல்கள் நீங்கி மன அமைதி பெறுவோம்.

மன அமைதி பெற்றாலே மற்ற இன்னல்கள் நமக்கு பெரியதாக தெரியமாட்டா. மன அமைதி பெற்றாலே முக மலர்ச்சி பெறும். முகமலர்ச்சியிலே உள்ளத்துத் தூய்மை புலப்படும். அதனால் நமக்கு பொய், பொறாமை போன்ற எண்ணங்கள் ஏற்படுவதில்லை. இவைகளைக் களைந்தாலே வாழ்க்கையில் நாம் வெற்றி பெற்றவர் களாகி விடுவோம். இறை குணம் முழுமையாக பெறுவ தற்கு மன அமைதி மிக மிகத் தேவை.

# 2. இறைகுணம் என்றால் என்ன ?

உலகம் இயற்கையின் வடிவம். இது கோடிக்கணக்கான ஆண்டுகளாகவே இருந்து செயல்பட்டு இருக்க வேண்டும் என்பது விஞ்ஞான ஆராய்ச்சி. இயற்கையின் வினோதங்களில் பல நாம் எண்ணிப் பார்க்க இயலாதது. இப்படித்தான் மனித உருவில் உலா வரும், நாமும்! எப்படியோ மனிதர்களாக உருவெடுக்கும் படைப்பில் உருவாகி உலா வருகிறோம்.

ஆறறிவு படைத்த மனிதனுக்கும் மற்ற பிறவிகளுக்கும் மிக முக்கிய வேறுபாடு சிந்தனை— பேச்சாற்றல். எனவே தான் ஒருவன் எண்ணுகிறான், என்ன சொல்லுகிறான் என்பதை உணர முடிகிறது. அவன் சொல்லும் செயலும் ஒன்றாக இருப்பின் பாராட்டப்படுகிறான். சொல்லும் செயலும் வேறாக, தான் நடந்து செல்லும் பாதை தவறாக இருப்பின் அவன் இழிவாகக் கருதப் படுகிறான்.

அறிவிற் சிறந்த மனிதரில் அறிஞர், கலைஞர், கவிஞர் என பலர் தோன்றுகின்றனர். ஒரு மனிதனுக்கு இருக்க வேண்டிய சராசரி அறிவினும் சற்று கூடுதலாக சிந்தனையும், எழுத்தாற்றலும், எடுத்துரைக்கும் பேச்சாற்றலும் உள்ளவரை நாம் மனதாரப் பாராட்டுகிறோம். அவர்களின் எழுத்துக்களை மனமுவந்து படிக்கின்றோம், பாராட்டுகின்றோம், அதனால் பயனடைகின்றோம்.

புலவர்கள் பலர் தனது கவிதைகளில் நாட்டைப் பற்றியும், நாட்டு விடுதலையைப் பற்றியும், மொழியைப் பற்றியும், மக்களைப் பற்றியும், மக்களின் உயர்வு தாழ்வினைப் பற்றியும் பல கவிதைகள் எழுதியுள்ளனர்.

ஆனால் அவைகள் அனைத்துமே பக்தியோடு எழுதப் பட்டதாகவே தெரிகிறது. பக்தியைப் பலவாறாக பிரித்துப் பார்க்க இயலும். நாட்டு பக்தியென்றும், மொழி பக்தியென்றும், தாய்— தந்தை— குரு— பக்தி யென்றும், இறை பக்தியென்றும் பிரிக்க முடியும். ஆனால் பக்தி எங்கே எப்படி மாறினாலும் உள்ளத்தில் தோன்று வது என்பதால் மனிதன் உள்ளத்தால் தூய்மையுள்ளவ னாக இல்லாது இருப்பின் எந்த பக்தியும் இருக்க இயலாது.

ஒருவேளை மிக மிகத் தீயவனாக உள்ள ஒருவனை நல்ல பக்தியாளன் என்று யாரேனும் சொல்லுவார்களா யின் அது ஒருக்காலும் உண்மையாக இருக்க முடியாது. பொய்மை கலந்த— ஊரை ஏமாற்றும் பக்தியென்றே **கொள்ளுதல்** வேண்டும்.

நமது நாட்டில் பலர் மூட பக்தியில் மூழ்கியவர். இவர்களுக்கெல்லாம் பக்தி யென்றால் என்ன என்பதே தெரியாது. அடுத்தவர் சொன்னதை அப்படியே நம்பி, அடுத்தவர் செய்வதை அப்படியே செய்யும் ஆடுகள் போன்றவர். ஆராயும் திறனும் அதில் உண்மை எந்த அளவு உள்ளது என்று அறியும் திறனும் அற்றவர்கள்.

இப்படிப்பட்ட அப்பாவிகளுக்கு மட்டும் அல்லாமல் அறிவு நிரம்பிய ஆன்றோர்களுக்கும்— சான்றோர்களுக் கும் சாமான்யர்களுக்கும் இருக்க வேண்டியது உண்மை யான பக்தி.

பக்தி யென்றால் பற்று இருக்க வேண்டும். பற்று அற்ற பக்தி, பக்தியாக இருக்க முடியாது.

**''பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு''** **(350)**

என்றார் வள்ளுவப் பெருந்தகை. பற்றற்றான் பற்றை பற்றுக என்றால், எப்போதும் எதையும் யாரிடமும் எதிர்

பார்க்காத இறைவனைப் பற்றுக என்று பொருள். இறைவன் மீது பக்தி கொள்பவனுக்கு எந்தவித வேண்டுதலோ எந்தவித வேடமோ, நடை, உடை, பாவனை மாற்றங்களோ தேவையில்லை.

உள்ளத்தில் உறுதியும், வீர வாழ்வும், எண்ணியதை எண்ணியது போல் எடுத்துரைக்கும் ஆற்றலும், யாருக்கும் அஞ்சாத திறனும் இருத்தல் வேண்டும். அப்படிப்பட்ட துணிவு மிக்க வாழ்வு அமைய வேண்டும் என்றால் மனித வாழ்வு உண்மை கலந்த, உழைப்பை மட்டும் நம்பியதாக இருத்தல் வேண்டும்.

இறைவனை யெண்ணி எங்கும் நாம் போகத் தேவையில்லை. நமது அன்றாட வாழ்வில் நாம் கொள்ளும் கொள்கை உறுதியில் இறையாற்றல் நம்மிடம் தானாக வரும்.

உறுதியில், உண்மையில், உழைப்பில், உயர்வான எண்ணத்தில் இறைவன் குடியிருப்பான். அந்த குணங்கள் எந்த மனிதனுக்கு உள்ளத்தில் குடியிருக்கிறதோ அங்கு இறைவனும் குடியிருப்பான் என்பது உறுதி.

மனிதனுக்கு வாழ்வில் குறிக்கோள் ஒன்று வேண்டும். குறிக்கோள் இல்லாத மனிதன் வாழ்ந்தும் வாழாதவனாகின்றான். வாழ்வின் உயர்ந்த குறிக்கோள் இறைவனை விட வேறு ஒன்றும் இருக்க முடியாது. ஏனெனில் தன்னுடைய வாழ்வில் அவன் மகிழத்தக்க எல்லாத் துறையிலும் தனது சிந்தனையைச் செலுத்தி அனுபவித்த பின், அந்த அனுபவம், அதில் கிடைக்கும் மகிழ்ச்சி நிலையாக நிற்க வேண்டும் என்று கவலைப்பட ஆரம்பிக்கின்றான். அப்போது அவனுக்கு ஓர் துணை தேவைப்படுகிறது. அந்தத் துணை அவன் மகிழ்வைக் கட்டிக் காக்கும் பொறுப்பு உடையதாகவும், காப்பாற்றும் சக்தி உடையதாகவும் தேவைப்படுகிறது. இந்த நிலையில் அவன் அவனை அறியாமலேயே இறைவனைத் தேடு

கின்றான். இது சுயநலம் என்று கூட எண்ணத் தோன்றும். தான் நலமாக வாழவேண்டும் என்பதே சுயநலம்தான். எது எப்படியாயினும், யார் எந்த நிலையில் தனது மகிழ்வைப் பெற்றாலும் அவரவர் அந்த மகிழ்வு நிரந்தரமாக இருக்க வேண்டும் என்கின்ற காரணத்தால் இறைவனை நாடாது இருக்க முடியாது.

மனிதனுக்கு பகையே கவலைதான். அதனைப் போக்குதல் மிக மிக அவசியம். அந்தக் கவலையிலிருந்து அவன் விடுபட வேண்டுமாயின் இறைவன் அருள் வேண்டும். அதனையே 'முன்னோன் அருள்' என்கிறார்கள். அந்த அருளையே துணையாக்கிக் கொள்ளுதல் பயிற்சியால் விளைதல் வேண்டும். அதற்கு நெஞ்சம் வலிவாக அதனை ஏற்றுக் கொள்ளும் உடலையும் உறுதியாக்கிக் கொள்ளுதல் வேண்டும். ஓர் எதிர்பாராத இழப்பு மரணம். தாய், தந்தை, துணை, அல்லது தனது படைப்புகளாகக் கருதும் பிள்ளைகள், தனது உடன் பிறப்புகள் இவர்களில் யாரையாவது இழக்க நேரும்போது மனிதன் நிலை தடுமாற்றம் கொள்ளும். தான் எது செய்வது எனப் புரியாமல் புலம்பும். விதியென்று!சொல்லிப் பிறர் தேற்றுவர். அப்படிப்பட்ட இழப்பு நேரும்போது உடலும் உள்ளமும் உறுதியாக்கிக் கொள்ளுதல் வேண்டும். அமைதியாக இருக்க முயல வேண்டும். அந்த நேரத்தில் இறையருள் வேண்டி மன அமைதிப் பெற முனைவது மிக மிக நல்லது.

நாம் யாரும் ஒன்றாகப் பிறப்பதில்லை. தனித்தனியே பிறந்து, இடத்திற்கேற்ப வளர்ந்து, உறவிற்கேற்ப உறவு முறை வைத்துக் கொள்ளுகின்றோம். தனி மனிதன் இத்தனை நாட்கள் வாழ முடியும் என்பது உறுதியும் இல்லை. எனவே காலத்தை வென்று பலகாலம் வாழ வேண்டும் என எண்ணுவதை விட ஞாலத்தோடு வாழ்ந்தால் போதும் என்பதே சிறப்பு.

படகு நீரில் மிதக்கலாம். ஆனால் நிலத்தில் போவதற்குப் பயன்படாது. நீரில் போவதற்குப் படகு உதவும். ஆனால் படகுக்குள் நீர் புகுந்து விட்டால் அது மிதப்பதற்குப் பதிலாக நீருக்குள் மூழ்கிப் போய்விடும். படகு நீரில் இருப்பது போன்று நாம் உலகில் இருக்கலாம். படகுக்குள் நீர் புக அனுமதிக்கக் கூடாது. அங்ஙனம் உலகப்பற்று உள்ளத்தில் புகுந்து விட்டால் உலகில் மூழ்கி விடுவோம்.

உலகில் மூழ்கி விடுவது என்பது உலகில் உள்ள எல்லா வித பற்றுகளையும் தொடர்வது-தொடர இயலாமையால் வருந்துவது-தொடர்ந்ததின் காரணமாக பீடிக்கப்படுவது. அது ஒரு நோய். உடலுக்கு வந்த நோய் உள்ளத்தைத் தாக்காத அளவு வாழ வேண்டும். உள்ளம் ஆரோக்கிய மாக உள்ளவரை மனிதனுக்கு எந்தவித தீங்கும் இல்லை.

'ஆசையை அடக்கு' என்று புத்தர் சொன்னார் என்றால், தேவையற்ற ஆசைகளை என்று பொருள். அன்றாடத் தேவைகளைக் கூட அடக்கு என்பது அல்ல. மனித வாழ்க்கைக்குத் தேவையானவற்றைத் தேடித்தேடி உழைத்தாலும் பலருக்குக் கிட்டுவதில்லை. ஆனால் இங்கு கவனிக்கத்தக்கது என்னவென்றால், அது போன்ற நிலைகளில் உள்ளபோதும் நமக்கும் மீறிய— தேவையற்ற ஆசைகளை உள்ளத்தில் சேர்த்து அது களைய வழியில்லையே என ஆதங்கப்படுதல் தேவையற்றது. தேவைக்கு தேவையான நேரம் உழைத்து ஊதியம் பெற்று மனித தேவையைப் பூர்த்தி செய்தல் நியாயமான தேவையே.

# 3. இறைவன் ஏன் வேண்டும்?

இறைவன் நமக்கு ஏன் வேண்டும் என்றால் நமது உள்ளத்தை நாமே கட்டிப் போட்டு ஓர் ஒழுங்கான பாதையை தேர்ந்தெடுத்து அதில் ஒரு கொள்கையோடு— நன்றி உணர்வோடு— முன்னெச்சரிக்கையோடு— பேராசையின்றி வாழ மிகவும் துணையாக இருக்கிறது, இந்த இறைவன் என்கின்ற சொல்.

இறைவன் என்பது அனைவருக்கும் நிரந்தரமான ஒரு துணை. வேறு எதைப் பின்பற்றி நடக்க முயன்றாலும் அது நிரந்தரம் அல்ல. இயற்கையின் விதியினையே மாற்றி அமைக்கும் மிக உயர்ந்த ஆற்றல் கொண்ட இறை மனித வாழ்க்கைக்கு ஏன் தேவைப்படாது!

எதற்குமே ஓர் குறிக்கோள் வேண்டும். "நான் நல்லதையே எண்ணுகிறேன், எனக்கு நலமே செய் இறைவா!" என்று எண்ணும்போது அவனையறியாது ஓர் மன மகிழ்வு, மன அமைதி. அந்த அளவு மன மகிழ்வும் மன அமைதியும் தீயவை செய்ய முற்படும்போது ஏற்படுவதில்லை. அவன் இறைவனுக்கு அஞ்சுகின்றான். இறைவனுக்கு இது தெரியாதது அல்ல என்று உள்ளத்தில் எண்ணி குமுறுகின்றான். இதற்காகவாவது இறைவன் தேவைப்படுகின்றான். நாம் செய்வது எல்லாம் யாருக்கோ தெரிகிறது என்று எண்ணும்போது அவன் உண்மையிலேயே அஞ்சுகின்றான்.

இப்படிப் போகக் கூடாது. போனால் தண்டிக்கப் படுவார்கள் என்று தெரிந்தால் அன்றோ அப்படிப்

போகாமல் இருப்பார்கள். யாரோ ஒரு சிலர் அப்படிச் சொல்லியும் மீறி சென்றால் அதற்குரிய தண்டனையைப் பெறுகின்றனர். எதிலும் ஒரு கட்டுப்பாடு தேவையன்றோ?

சட்டம்— நீதி இவைகள் உருவாவதற்குமுன் மனிதன் தனது உள்ளத்திலேயே எது நீதி? எது சட்டம்? என உணர பயன்படுவதே இறைவனுக்கு அஞ்சுவது.

இப்படித் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவும் அநீதிகளுக்கு ஆட்படாமல் இருக்கவும்— சட்டத்தை மீறாது வாழவும்—அவன் உள்ளத்தில் வழிபடும் இறைவன் எங்கே தன்னை தண்டிப்பானோ என்கின்ற அச்சம் ஓரளவு அவனை நல்லவனாக்கப் பயன்படுகிறது. இத்தனை மதங்களும், இத்தனை சமயங்களும், இத்தனை இறைவழிபாடுகளும் இருந்தபோதும் அன்றாட வழக்கு மன்றங்களில் குற்றம் புரிந்தோர் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டுதான் உள்ளன எந்தக் கட்டுப் பாடும் இல்லையென்றால் காட்டுமிராண்டி காலத்துக்கே நாம் நம்மை கொண்டு நிறுத்தி விடுவோம் என்பது மட்டும் உண்மை.

எனவே கட்டுப்பாடு என்பது மிகவும் மனிதனுக்குத் தேவையாகும்.

மனிதன் எதிலும் எப்போதும் மன நிறைவு பெறுவ தில்லை. எனவேதான் பல மதங்கள், பல சமயங்கள், பல இறை உருவங்கள், பல கதைகள் தோன்றல் ஆயின. 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பது உள்ளத்தால் புரிந்தாலும் நடைமுறையில் அவன் பல உருவங்களையே நாடிச் சென்றான். எனவே மனிதன் நாகரிகத்தால் எவ்வளவு உயர்ந்தாலும், விஞ்ஞான வசதியினை எவ்வளவுப் பெற்றாலும் உள்ளத்தால் இன்னும் உயர வில்லை என்பது மட்டும் உண்மை.

மனிதனுக்கு வாழ்வில் எழுகின்ற— நேர்கின்ற துன்பங்கள் பல வகையின. நாளெல்லாம் உழைத்து உழைத்து உண்டான அலுப்பு ஒருவகைத் துன்பம். உழைத்தும் வாழ்வில் வளம் காண முடியவில்லையே என்ற கவலை ஒருவகைத் துன்பம். நோய்த்துன்பம், மூப்புத் துன்பம், பிறப்பு இறப்புத் துன்பம் இவை போன்று மற்றும் பல துன்பங்கட்கு மனிதன் இலக்காகின்றான் ; வேதனைப் பட்டு உழல்கின்றான். இவனுடைய உள்ளம் துன்பத்தை யறுத்து இன்பத்தைப் பெறுதற்குப் பேராவல் கொண்டு உழல்கின்றது. மனிதன் மட்டுமன்றி மற்ற உயிர்களும் கூடத் தமது துன்பத்தைப் போக்கி இன்பத்தை ஆக்கிக் கொள்ளவே முயல்கின்றன.

இவற்றினின்று உயிர்கள் அனைத்துமே துன்பக் கயிற்றால் பிணிக்கப்பட்டுள்ளன என்பது விளங்கும்'

அப்படிப் பிணிக்கப்பட்ட கயிற்றை அறுக்கவும் இன்பத்தைப் பெருக்கவும், துன்பத்தினின்று தம்மை விடுவித்து இன்பத்தை ஊட்டவல்ல முழு முதல் இறைவன் உதவியை நாடிச் செல்கின்றன. துன்பங்களை உடையோர் எவ்வளவு உயர்வினை வேறுவகையில் பெற்றிருப்பினும், அவர்கள் அதனை உயர்வாகக் கருதி இறைவனாக மாற மாட்டார்கள்.

இத்துன்ப உயிர்களையெல்லாம் துன்பக் கடலினின்று மீட்டு இவற்றிற்கு இன்பத்தை வழங்கியருளும் இறைவன் ஒருவரே எவ்வகைத் துன்பமும் இல்லாதவர், எல்லா இன்பமும் ஒருங்கே உடையவர்.

எனவேதான் மனித சக்திக்கு மீறிய சக்தி மட்டுமே எதையும் தாங்கவல்லது. அதைத்தான் இறைவன் எனப் பெயரிட்டு நாம் தினம் தினம் நம்மை எதிர்நோக்கி, நம்மை பயமுறுத்தும் பிரச்சனைகளுக்கெல்லாம் வழி தெரியாமல் இறைவனையே வேண்டி தொழுகின்ற நிலை உருவாகின்றது.

உறுதியானவன் அமைதியாக உள்ளத்தில் தொழுகின்றான், உறுதியில்லா உலக நடப்புக்கு அஞ்சும் மனோநிலை கொண்டவன், எங்கெல்லாம் அலைந்து திரிந்து அவன் வேண்டுதலை நிறைவேற்ற முடியுமோ அங்கெல்லாம் சென்று பைத்தியமாக அலைகிறான்.

இது மனித மனோநிலையைப் பொருத்தது. இங்கேதான் மனிதனுக்கு மனஉறுதி தேவைப்படுகிறது.

# 4. மனித உயிர்

விவேகானந்த சுவாமிகள் "Expansion is Life and Contraction is death" என்று மனித வாழ்க்கையைப் பற்றி சொல்லியிருக்கிறார். இதன் பொருள் 'விரிதலே வாழ்வு, சுருங்குதலே மரணம்' என்பதாகும். விதை ஒன்று உயரற்றது போன்று இருக்கிறது. அதைப் பூமியில் நட்டால் முளைக்க ஆரம்பிக்கிறது. அது படிப்படியாக பெரியது ஆகிக் கொண்டே வருகிறது. மிகப்பெரிய மரமாகிறது. பல பேர்களுக்கு நிழல் தந்து உதவுகிறது. இனிய கனிகளைத் தருகிறது. ஆண்டுதோறும் தருகிறது. பல ஆண்டுகள் தருகிறது. பின்பு ஒரு கட்டத்தில் அதன் சுருக்கம், தேய்மானம் ஆரம்பிக்கிறது. கனிகள் குறைகின்றன. கிளைகள் பட்டுப் போகிறது. கடைசியில் மரம் பட்டுப் போகிறது, மரணமடைந்து விடுகிறது. இந்த நடைமுறை எல்லா உயிர்களிடத்தும், ஓர் அறிவு முதல் ஆறு அறிவு படைத்த மனிதர்கள் வரை இருக்கிறது.

மனித உயிர் விந்து நிலையிலிருந்து ஒவ்வோர் அவயமாகப் பெற்று மானுடக் குழந்தையாக ஆகிறது. அதன் உடல் படிப்படியாக வளர்ந்து குழந்தை, சிறுவன், மாணாக்கன், யுவன், வாலிபன் வயோதிகன் ஆகிறது. இப்படி அவன் உடல் மட்டும் வளரவில்லை, அவனது அறிவும் மனமும் இப்படியே வளர்கின்றன.

ஓர் அறிவு முதல் ஐந்து அறிவு வரை உள்ள சிற்றுயிர்களிடத்தில் உடல் வளர்ச்சி தான் முக்கியமாக இருக்கிறது.

அறிவு, மனம் இவற்றின் வளர்ச்சி மிக மிக மெதுவாய் இருக்கிறது. மனிதப் பிறப்பில் தான் உடல் வளர்ச்சியை விட அறிவு, மனம் ஆகிய இரண்டின் வளர்ச்சி அதிகமாக சிறப்பாக இருக்கிறது. அறிவு, மனம் என்பது உடலை விட சிறப்பானது. ஓர் அமைப்பு அதன் செயல்களுக்கு ஏற்ப மனம், புத்தி, சித்தி, அகங்காரம் என்று அது நான்கு பெயர்களைப் பெற்று இருக்கிறது.

சரீரம் என்கின்ற உடலும் ஜீவன் என்கின்ற உள்ளமும் அமைப்பில் முக்கியமான, உயர்வான பகுதியாகும். உடலமைப்பின் ஆராய்ச்சி விஞ்ஞானம் உடலுக்கு மருத்துவம், பாதுகாப்பு அழகூட்டுதல், உணவுகள் இதர வாழ்க்கை வசதிகள் முதலிய விஞ்ஞானப் பகுதிகள்.

அது போலவே ஜீவன் என்கின்ற உள்ளம் வளர்ச்சி பெற— அமைதி பெற— மனம் எப்படி உருவாகிறது. அது எப்படி செயல்படுகிறது. அது எப்படி நல்லதாக அல்லது கெட்டதாக ஆகிறது, அதன் சிறப்பான ஆற்றல்கள் அதைத் தூயதாக்கி இறைவனை அடைவது எப்படி என்கின்ற ஆராய்ச்சியும் தேவைப்படுகிறது.

உடல் இன்றி உயிர் செயல்படத் தன்னை விளக்க முடியாது. உயிர் இன்றி உடலும் செயல்பட முடியாது. இரண்டின் வளர்ச்சியும் சேர்ந்துதான் வாழ்க்கையை அனுபவிக்கச் செய்கின்றன. மனம் அறிவின் வளர்ச்சி வாழ்க்கையை மேலானதாக, தெய்வீகமாக மாற்று கின்றன.

ஒரு குளத்தின் மத்தியில் ஓர் அலை உண்டாயிற்று. அது பெரிதாகிக் கொண்டே வந்து கரையில் மோதி தன் உருவத்தையும் பெயரையும் இழந்து விடுகிறது. ஒரு குழந்தை பலூன் ஒன்றை ஊதிக் கொண்டே இருக்கிறது. அது பெரிதாகிக் கொண்டே வருகிறது. அது பட்டென்று வெடிக்கிறது. குழந்தை சிரிக்கிறது அல்லது அழுகிறது. அதற்குள்ளிருந்த காற்று தன் வியக்தியை இழந்து

அடைபட்டுக் கிடந்ததிலிருந்து விடுபட்டு எங்கும் நிறைந்துள்ள காற்றில் கலந்து விடுகிறது.

இங்கே தான் உண்மையான தத்துவத்தை உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். அறிவுபூர்வ சிந்தனை வேண்டும். பலூனில் இருந்த காற்று வெளி மண்டலத்தில் உள்ள காற்றோடு கலந்து விடுகிறது. இதைத்தான் மனிதன் இறைவனோடு கலந்து விட்டான் என்று எண்ணிக் கொள்கிறான். பலூனில் காற்று இருக்கும் வரை மனிதனைப் போல் இருந்த தனி உயிர், காற்று வெளியேறிய பிறகு வெறும் தோலாகி கீழே விழுந்து விடுகிறது. காற்று மட்டும் காற்றில் கலந்து விடுகிறது. இங்கே காற்றை உருவாக்கியவன் இயற்கை அல்லது இறைவன் என்கிறோம். எனவே காற்றை இறைவன் என்று நாம் உணரும் போது காற்றில் காற்று கலந்து விடுவதை இறைவனோடு கலந்து விட்டான் என்பதில் பொருள் இருக்கிறது என்பதை உணர்வோமாக. இது விஞ்ஞான அடிப்படையிலும் உண்மையே.

மேலை நாட்டில் ஒருமுறை மனிதனுக்கு உயிர் பிரியும் போது அவனுள் இருந்து ஏதேனும் காற்று வெளியேறுகிறதா ? இல்லையா ? என்கின்ற வினா எழுந்து அதைப் பரிசோதித்துப் பார்த்தனர். உயிர் போகும் தருவாயில் உள்ள ஒருவரை ஒரு கண்ணாடி அறையில் வைத்து அடைத்தார்கள். அதனுள் காற்று அற்று சூனியமாக்கினார்கள். காற்றே இல்லாத அந்தக் கண்ணாடி அறையினுள் வைக்கப்பட்டவன் உயிர் பிரியும்போது கண்ணாடி அறையும் உடைந்தது ! காற்றே இல்லாத அறை யென்பதால் அந்த உயிரும் வாழ முடியவில்லை. எனவே உயிர் வாழக் காற்றுத் தேவை, உயிர்பிரியும் போதும் காற்றில் கலந்து விடுகிறது.

காற்றோடு காற்றாக கலந்துவிடும் இந்த உயிர் உடலில் உள்ள போதுதான் எத்துனை ஆடுகிறது ? தனக்கு நிகர் தானே என்று வீராப்பு பேசுகிறது. தான்

யாருக்கும் அஞ்சத் தேவையில்லை என்று துணிந்து போராடுகிறது. ஏமாற்ற நினைக்கிறது— ஏமாறியும் விடுகிறது. அந்த நேரத்தில் தனது வாழ்க்கையில் தான் செய்து சேர்த்து வைத்துக் கொள்ளும் நல்ல பெயர்களும், புகழும் தான் நிலைத்து நிற்கின்றன. மற்றவைகள் அதாவது அனுபவித்த எல்லா தீய பலன்களும் மறைந்து விடுகின்றன. முன்னதை புண்ணியம் என்றும் பின்னதை பாவம் என்றும் முன்னோர்கள் பிரித்து வைத்தனர். பொதுவாக மனிதனுக்கு எதையும் நேரிடையாக சொன்னால் புரிவதில்லை. ஏதேனும் ஒரு பயத்தையும் அல்லது பலனையும் சொன்னால் அது புரிகிறது. நூறு ரூபாய்க்கு ஒரு புடவை வாங்கினால் ஒரு ஜாக்கட் இனாம் என்றால் உடனே அதை எல்லாப் பெண்களும் வாங்குவது போல.

**'Expansion is Life'** என்கின்ற கோட்பாடு அதாவது விரிதல் வெறும் எண்ணிக்கையைப் பெருக்குவதன்று. மனிதனை உருவத்தில் மட்டுமல்லாது உண்மையான மனிதனாக, உயர்ந்த மனிதத்தன்மை வாய்ந்தவனாக ஆக்க வேண்டும். அதில் வெற்றி அடைதல், பண்பாளர்களின் எண்ணிக்கையைப் பெருக்குவதுதான் உண்மையான விரிவு ஆகும்.

பள்ளியில் ஒரு குழந்தையைச் சேர்த்தார்கள். அது ஆண்டுதோறும் மேல் வகுப்பிற்கு மாற்றப்பட்டு வந்தது. அவன் பட்டதாரி ஆனான். அவன் படித்தது மட்டும் தான் அவனுக்குத் தெரிகிறது. படிப்பின் மூலம் அறிவு வேலை செய்யத் தூண்டப்பட்டுள்ளது. சுறுசுறுப்பு ஆக்கப் பட்டுள்ளது. விழித்தெழச் செய்யப் பட்டுள்ளது. அது எதில் திருப்பப் பட்டாலும் அது நன்கு வேலை செய்ய வேண்டும், புரிந்து கொள்ள வேண்டும். மன ஒருமைப் பாடு, ஒழுக்கம், பண்பாடு, பக்தி உயர்ந்த இலட்சியம் தரப்படாததால் அவனுக்குப் பிரியமான சில கீழான தன்மைகளே அவனுக்குத் தெரிகின்றன. தன்னம்பிக்கை,

சிந்தனை அறிவு வளர்க்கப்படாததால் அறிவு மந்தமாக உள்ளது. பள்ளிப் படிப்பு, எழுத்தறிவு இயக்கம் முக்கியத் துவம் பெற்று வெகுவாகத் தீவிரப் படுத்தப்பட்டது. ஆனால் பண்பைப் பற்றிச் சிந்திக்கும் ஆளையே காணோம். கல்வியின் உண்மையான பலன் கிட்டவில்லை. கல்வித்துறையில் இது விரிதல் முன்னேற்றம் ஆகுமா? கல்வியின் பயன் மனம் பண்பட வேண்டும். உண்மையான நல்வாழ்வில் ஈடுபட வேண்டும். சேவை, தியாகம், பக்தி வளர வேண்டும். சுயநலம் உலகப் பற்றுகள் குறைய வேண்டும். இதுவே **'Expansion is Life'** விரிதல் முன்னேற்றம்.

மனித வடிவம் அதாவது உடல் அழகு, ஆடை அழகு வெகுவாக முன்னேறி வருகிறது. ஆனால் மனம் சுருங்கி வருகிறது. விகாரமடைந்து வருகிறது. மனித குணம் இப்போது சுயநலம் கலந்த வெறியும் ஆர்பாட்டமும் பகட்டுமே உள்ளன. முன்னேற்றம் அடைந்த நாகரிகமான காலம் என்று இன்று மிகவும் பகட்டாகப் பேசப்படுகிறது. ஆனால் பண்புள்ளவர்களுக்கு, சான்றோர்களுக்கு இது இருண்ட காலமாகப் படுகிறது. மனிதனை மேன்மைப் படுத்த வேண்டிய மதமே சீர்கெட்டு மனிதனை வெறியன் ஆக்குகிறது. இது விரிதலா சுருங்குதலா என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

வாழ்வில் எந்த நிலையில் மனிதன் இருந்தாலும் அவரவர் செய்யும் தொழிலுக்கு தலை வணங்கி மரியாதைத் தர வேண்டும். 'செய்யும் தொழிலே தெய்வம்' என்பது சிறப்பானதொன்று. இன்பங்களை அனுப விப்பதே சிறந்த வாழ்வாக எண்ணக் கூடாது. அந்த எண்ணத்தில் உள்ளம் விரிவடைவது தேவையற்றது. மனிதனை மனிதனாக மதித்து— மற்றவர்களையும் நேசித்து— பண்பை வளர்த்துக் கொள்ளுதலே உண்மை யான விரிதல். அதுவே மனித வாழ்வை உயர்த்தும்.

உயர்ந்த பண்பாளனாக இருப்பதை விட வாழ்வில் உயர்ந்த நிலை வேறு ஒன்றும் இல்லை.

பண்பின் குறைதல் வாழ்வின் சுறுக்கமாகும். இளங்கோவடிகள் தனது சிலப்பதிகாரத்தில், கோவலனைத் தவறுதலாகக் கொன்றுவிடச் சொன்னதை உணர்ந்த பிறகு உடனேயே தன் சிம்மாசனத்திலிருந்து இறங்கினான். இரண்டு படிகள் இறங்கு முன்னே பாண்டியன் நெடுஞ்செழியன் இறந்து விட்டான் அல்லவா? 'உயிரினும் மானமே பெரிது.'

# 5. இறைநெறி

அவனின்றி ஓர் அணுவும் அசையாது. மின் சக்தி இல்லாது விசிறி சுழலாது, விளக்கு எரியாது, ஒலி பெருக்கி ஒலிக்காது. விசிறி, மின் விளக்கு, ஒலிபெருக்கியின் மூலமாக மின் சக்தியின் செயல் விளங்குகின்றது. அவ்வாறு இறைவன் இல்லாது இயற்கையில் எச்செயலும் நிகழாது. விசிறியைச் சுழலுமாறு இயக்குகின்றனர். விளக்கினை ஒளி தருமாறும், ஒலிபெருக்கியை ஓசை இடுமாறும் இயக்கு கின்றனர். மனிதனுடைய வினைக்கு ஏற்ப இறைவன் அவனை இயக்குகின்றார். நெருப்பை அடுப்பில் வைத்தால் உணவு சமைக்கப் பயன்படும். அதே நெருப்பைக் கூரையில் வைத்தால் கூரை எரிந்து சாம்பல் ஆகிவிடும். மனிதனுடைய வினை நல்வினையாக இருந்தால் அது இன்பத்தைக் கொடுக்கும். தீவினையாக இருந்தால் அது அவனுக்குத் துன்பத்தைத் தரும். ஜீவன் செய்கின்ற நல்வினை தீவினைக்கு ஏற்ற பயன்களை ஜீவன் அனுபவிக்கச் செய்யுமாறு இறைவன் அருளுகின்றார்.

பசு ஒன்று கயிற்றினால் கட்டி வைக்கப்படுகிறது. அது கட்டுண்டு இருக்கின்ற கயிற்றின் நீளத்துக்கு ஏற்ப புல்தரையில் சுதந்திரமாக மேயும். அந்தச் சுதந்திரம் மனிதன் அதற்குக் கொடுத்த சுதந்திரமாகும். அந்தச் சுதந்திரத்தை முறையாகப் பயன்படுத்தி தான் செல்லு மிடத்திலுள்ள புல்லையெல்லாம் மேய்ந்தான பிறகு இன்னும் அப்பால் சென்று மேய்வதற்கு நீளமான கயிறு ஒன்று கட்டி அதற்கு மனிதன் சுதந்திரம் அளிக்கின்றான்.

மனிதனை இறைவன் புத்தி என்ற கயிற்றைக் கொண்டு உலகத்தில் கட்டி வைத்திருக்கின்றார். புத்தியை முறையாகப் பயன்படுத்தி உலக அறிவைப் பெற்ற பிறகு இவ்வுலகையும் அப்பால் கடந்து செல்வதற்குரிய புத்தியைத் தருகின்றார்.

இறைவனை மறந்து இறைவனுடைய மாயா சக்தி தரும் மயக்கத்தில் மயங்கிப் புலன் வழிவரும் இன்பத்தில் புத்தியைச் செலுத்தி ஜீவன் செயல்படுகிற பொழுது பொல்லாத ஆசைக்கு வசப்படுகிறான். ஆசைக்கு அடிமைப்பட்ட ஜீவன் இறைவன் வகுத்துள்ள அறநெறியை மறந்து அதிலிருந்து தவறி அடாத செயல் களைச் செய்கின்றான். அதன் விளைவாக அல்லலுற்று அவதிப்படுகின்றான். இறையுணர்வோடு இறைவனுக்குப் பணி செய்யும் கருவியாக இருந்து யாதும் அவனால் நிகழ் கிறது என்பதை அறிகின்ற நிலைதான் தெளிந்த நிலை யாகும். இந்த தெளிந்த நிலை உண்டாகவில்லையே என்பதை மனிதன் இறைநெறியை உணர்ந்தால்தான் வரும்.

மாயையும் அதன் செயலும் இறைவன் ஆணையால் ஜீவன்களை உய்விக்க ஏற்பட்டவையே ஆகும். மாயை என்பது மிகப் பெரிய சக்தி வாய்ந்தது. இது உலகம் தோன்றிய நாள் முதல் இருந்து வருவது. இயற்கை யினையே மாற்றவல்லது. இதனை நாம் மாயை என்கிறோம். பைபிளில் இதனை சாத்தான் என்று வர்ணிக்கப் படுகின்றது.

அதனோடு போராடுவதற்கு இறைவனுடைய துணையைக் கொள்ள வேண்டும். அதனால்தான் அற நெறியைப் பின்பற்ற அழுத்தந் திருத்தமாக சொல்ல வேண்டியுள்ளது. நன்மையை விட தீமைக்கு எப்போதுமே வலிவும் பொலிவும் அதிகம்.

ஆசைக்கு உட்பட்டவர்கள் இறைவனுடைய கொள்கைக்கு மாறாக நடப்பர். இறைவன் கொள்கை என்கின்ற இறைநெறி உணர்ந்தவர்கள் ஆசையை வென்று அதன் மூலம் பெறுகின்ற இன்பமே உயர்ந்தது எனக் கருதுகின்றனர். பழ வினையின் தூண்டுதலினாலும், சூழ்நிலையின் தூண்டுதலினாலும் ஜீவன் ஒருநாளும் விவேகத்தை இழந்து விடக்கூடாது. அறநெறியில் செல்வது கூரிய கத்தி முனையில் நடப்பதற்கு நிகராகும். சிறிது கவனக் குறைவு ஏற்பட்டாலும் அசட்டுத்தனமாக இருந்து விட்டாலும் ஆசை புகுந்து வேலை செய்ய ஆரம் பித்து விடும்.

பெருக்கெடுத்து வருகின்ற வெள்ளம் கண்ட கண்ட இடங்களிலெல்லாம் புகுந்து சேதத்தை உண்டு பண்ணு கின்றது. வெள்ளம் வருவதற்கு முன்பே அணை கட்டித் தேக்கி வைத்து அதைக் கட்டுப்பாட்டுக்குள் செலுத்தும் பொழுது அது ஆக்கச் செயலுக்குப் பயன்படுகிறது. மனிதன் அறநெறியிலிருந்து வழுவுகிற பொழுது ஆசை யென்னும் பெருவெள்ளம் உள்ளத்தைப் புலன் வழிச் செலுத்தி அதன் ஆற்றலையெல்லாம் சிதறடிக்கிறது.

அஞ்ஞானத்தில் இருக்கும் உயிர்கள் ஆசையின் காரண மாக பாபத் தொழிலை மிகுதியாகச் செய்கின்றது. அற்ப ஆசையின் தூண்டுதலுக்கு ஆசைப்படாது இறைவனிடம் தன்னை ஒப்படைக்கின்றவன் பாபச் செயலைச் செய்வ தில்லை. செயலுக்குத் தன்னைக் கர்த்தாவென்று நினைப் பவன், இறைவன் செயலைத் தன் செயலாக எண்ணி இன்ப துன்பத்துக்கு ஆளாகின்றான். நான் செய்கின்றேன் என்ற எண்ணத்தை அகற்றி, யாவும் இறைவன் செயல் என்று உணர்கின்றவன் உண்மையை அறிந்தவனாகின்றான். அவனுக்கு இன்பமும் இல்லை, துன்பமும் இல்லை. அவன் எந்தச் செயலாலும் பாதிக்கப்படுவதில்லை. அவனிடம் கெட்ட எண்ணமும் இச்சையும் உண்டாவ

இல்லை. அவன் செயலுக்கு அப்பாற்பட்டவனாகின்றான். அவன் இறைவனுக்கு ஒப்பாகிறான்.

முழுமுதற் பொருள் என்றும், பரம் பொருள் என்றும், கடவுள் என்றும் போற்றப் பெறுபவர் இறைவன். உலகங்கட்கும், உலகத்து உயிர்கட்கும் முதலானவன்— மூலமானவன் என்ற பொருளை முழுமுதற் பொருள் என்பதும் உலகிலுள்ள பொருள்கள் அனைத்தையும் விட மேலானவன் என்பதைப் பரம்பொருள் என்பதும்; உலகையும் உலகப் பொருள்களையும் மனம், மொழி, மெய்களையும் கடந்து உள்ளவன் என்பதைக் கடவுள் என்பதும் உணர்த்துகின்றன.

உலகம் என்பது உயிர்ப்பொருள்கள், உயிரில்லாப் பொருள்கள் ஆகியவற்றின் சேர்க்கையே.

இத்தகைய உலகிற்கு மூலமானவன்— மூல காரணமானவன். எனவே, உயிர்ப் பொருட்களுக்கும் உயிரில்லாப் பொருட்களுக்கும் மூலமானவன் என்பது விளங்கும். பொதுவாகப் பொருள் எதுவாயினும் அது பல அணுக்களின் சேர்க்கை வடிவம். அந்தப் பொருளின் மூலமாகவும், அந்தப் பொருளினைக் கடந்தும், அந்தப் பொருளை விட மேம்பட்டும் இறைவன் இலங்குகின்றார். எனவே உலகில் உள்ள பொருள்கள் எல்லாம் அந்த இறைவனையே மூல காரணமாகக் கொண்டுள்ளன என்பதும், உயிர்ப் பொருள்களும் உயிரில் லாப் பொருள்களும் சேர்ந்த சேர்க்கையின் வடிவமாகிய உலகமும் இறைவனையே மூல காரணமாகக் கொண்டுள்ளது என்பதும் விளங்கும்.

இந்த உலகச் சுழற்சியும், உலகப் பொருள்களின் இயக்கமும்— அசைவும் இறைவனாலேயே நிகழ்கின்றன. மூலப்பொருள் இல்லையெனில் உலகில் எந்தப் பொருளும் இயங்காது என்பது புலனாகிறது. இறைவன் இல்லையெனில் எந்தப் பொருள் மட்டுமல்ல எந்தப் பொருளிலு

முள்ள அணுவும் கூட அசைய— இயங்க இயலாது. இயக்கு பவன் இயங்கும் பொருளோடு தொடர்பு கொண்டு இருந்தாலன்றி இயக்கவியலாது. உலகையும் உலகப் பொருள்களையும் இயக்கும் இறைவன் அவற்றோடு பொருந்தி— அவற்றில் தங்கி யாண்டும் எதிலும் நீக்கமற நிறைந்து இலங்குகின்றார் என்பது தத்துவம். இந்தத் தத்துவத்தைத் தான், **"அவனின்றி ஓர் அணுவும் அசையாது"** என்று தத்துவ வித்தகர்கள் விளக்குகின்றார்கள்.

# 6. நம்பிக்கையே இறைவன்

நாம் நமக்கும் மேலான ஆற்றல் உள்ளது என்பதை எப்போது உணர்ந்து கொண்டு செயல்படத் துவங்கு கிறோமோ அப்போதே நம்பிக்கையுணர்வு வந்துவிட வேண்டும். முழுமையான நம்பிக்கைக்கு என்றும் ஏமாற்றம் இருக்காது. 'நான் முழுமையாக நம்பியும் ஏமாந்தேன்' என்று சிலர் சில நேரங்களில் சொல்லக் கேட்கிறோம். அந்த நம்பிக்கையில் எங்கோ தவறு நடந்து இருக்கும். இரண்டு பேரில் ஒருவர் துரோக சிந்தனையில் செயல்பட்டால் எங்ஙனம் அந்த நம்பிக்கை வெற்றி பெறும்? எனவே அனைவருக்குமே நம்பிக்கை வேண்டும், நல்ல குணம் வேண்டும்.

ஒரு வேலையைச் செய்யும்போது மனப்பூர்வமாகச் செய்ய வேண்டும். நமது மனம், உள்ளம், உள்ளுணர்வு ஆகிய அனைத்தையும் அதில் முழுமையாக ஈடுபடுத்த வேண்டும். அதே நேரத்தில் அதன் பயனையே கருத்தில் கொண்டு அதனால் கிடைக்கும் இலாபத்தை மட்டும் எதிர்பார்க்காதீர்கள். அத்தகைய ஆசை இலாபத்துக் கான ஆவல் நமது மன அமைதியை குலைத்து விடுகின் றன. செய்யும் தொழிலுக்காகவே தொழில் செய்கிறோம் என்ற நினைவுடன் வேலையைச் செய்வோமாயின் முழு மன அமைதி கிட்டுகிறது. மனநிறைவும் ஏற்படும்.

'நான்,' 'எனது' என்ற எண்ணமே பந்தத்தின்பாற் பட்டது. அதாவது சுயநலம் கூடிய தொடர்பு என்ப தாகும். அந்த பந்தபாச எண்ணத்தால் உண்டாவதே தோற்றம். இத்தகைய எண்ணந்தான் பெருத்த நரக

மாகிறது. இதனால் ஏற்படுவதே பாசமும், சொல்லொணாத் துயரங்களுமாம். 'நான்' என்னுடையது என்ற இந்த ஒரே உவ்கையின் அடித்தளத்தை அமைத்துக் கொண்டு தான் மனிதன் அவனுக்காக மிகப் பெரிய சாம்ராஜ்யத்தையே இவ்வுலகில் உருவாக்கிக் கொள்கிறான்.

'என்னுடையது' எனும் மனப்பான்மை ஒருவனிடம் இருப்பதால்தான் அகந்தை எனும் அழுக்கு நிரந்தரமாய்க் குடிகொண்டு விடுகிறது. அதனால்தான் இந்தப் பிறவியிலேயே அவன் வேதனையை அனுபவிக்கிறான். 'நான்,' 'எனது' என்ற எண்ணமே எல்லா வகைத் துன்பங்களுக்கும், வேதனைகளுக்கும், பாபங்களுக்கும், பந்தங்களுக்கும் மூல காரணமாக உள்ளது. தீமைகள் அனைத்துக்கும் ஆணிவேராக இருப்பதும் 'நான்,' 'எனது' என்ற எண்ணமே.

ஒரு மனிதனுக்கு முதன் முதல் சுயநலம், காமம், பேராசை, குரோதம் (காழ்ப்புணர்ச்சி), பொறாமை போன்ற குணங்கள் 'நான்,' 'எனது' என்ற எண்ணத்திலிருந்துதான் பிறக்கிறது. இத்தகைய எண்ணம் உள்ள வரைக்கும் விடுதலைப் பேற்றை எட்டிப் பிடிக்க முடியாத தூரத்துக்குத் தள்ளப்படுகிறான். அவனுக்கு நல்லவனாக வாழும் நம்பிக்கையே அற்றுப் போகிறது.

இதன் காரணமே மனிதனுக்கு அகந்தை ஏற்படுகிறது. முதலில் அந்த அகந்தையை ஒழிக்க 'நான்,' 'என்னுடையது' என்று இருக்குமிடத்தில் 'நீங்கள்,' 'உங்களுடையது' என்ற எண்ணத்தைப் புகுத்திப் பலப்படுத்த வேண்டும்.

நம்மை உருவாக்க மூலகாரணம் தாய் தந்தை என்பது விஞ்ஞானம். அவர்களை உருவாக்க அதற்கு முன் அவர்களை உருவாக்க இப்படியே மூலகாரணத்திற்குச் சென்றால் நமக்குப் புரியாது. பொதுவாகப் புரியாததும் தெரியாததும் நாம் இறைவனாக மதிக்கிறோம். எனவே

நமதுசெயல், நமது வாழ்வு, நமது உறக்கம், நமது இதயத் துடிப்பு அனைத்தும் இறைவனுக்காகவே என்கிற நம்பிக்கை வேண்டும். நம்பிக்கையே இறைவன்.

இப்படி எண்ணி இறைவனை நம்புவது, அப்படிப் பட்ட பயிற்சிக்கு நம்மைத் தயார் செய்து கொள்வது கடினமே. அகந்தையை அழிப்பதைத் தவிர வேறெந்த மாற்று வழியுமில்லை. ஒருவர் எதைச் செய்தாலும் நானே செய்தேன் என்கிற அகந்தை, இதைச் செய்யப் பலர் உதவிகள் தேவைப் பட்டது என்கிற உண்மை நிலை யினை எண்ணப் பழக வேண்டும். இல்லையெனில் அடுத்தவர் துணிவுடன் எடுத்துச் சொல்லியாக வேண்டும். அப்படி எண்ண எண்ண அல்லது எடுத்துச் சொல்லிச் சொல்லி ஒருவருக்கு ஏற்படும் அகந்தை மெதுவாகக் குறை யும். நம்பிக்கை மெல்ல மெல்ல வளரும்.

ஒவ்வொரு மனிதனும் தனது மனைவி, மக்கள், தாய், தந்தையர், உற்றார், உறவினர், நாடு, நாட்டு நலன் போன்ற கடமைகளை ஏற்று செயல்பட்டே தீர வேண்டி யுள்ளது. தன் மனைவி, குழந்தைகள் போன்றவர்களை நல்லபடி காப்பாற்றியாக வேண்டும். நல்ல வழியில் ஈட்டிய பொருளைக் கொண்டு பேண வேண்டும். தன் தொழிலைக் கவனித்துச் செய்து நேர் வழியில் பொருளீட்ட வேண்டும். தான் ஈட்டியப் பொருளின் ஒரு பகுதியை ஏழைகள், நோயாளிகள், ஆதரவற்றவர்கள் போன்ற வர்க்கு உதவியாகச் செலவிட வேண்டும். இந்த நாட்டில் நாம் வாழ்கின்றோம் என்பதால் நாட்டின் மீது பற்று வைக்க வேண்டும். தேசத்திற்காகவும் பாடுபட வேண்டும். எப்படிப்பட்ட வேலை கிடைத்திடின் அதனையேற்று சிறப்பாகச் செய்யத் துணிய வேண்டும். இந்த வேலையே வர வேண்டும். அந்தத் தகுதியே எனக்கு உள்ளது என்கிற எண்ணமும் அதன் மீதே பற்றும் இருத் தலைத் தவிர்த்தல் வேண்டும்.

நாம் இருக்கும் வரை வாழ, பிறருக்குப் பயன்படத் தேவையே இந்த வேலை— உழைப்பு இவைகளுக்கும்

இதனால் நாம் பெரும் ஊதியமும் பொருளும் ஆகும். ஒரு மனிதன் பல்வேறு வேலைகளை கவனித்துச் செய்யும் போது கடமைப் பொறுப்புள்ள ஒரு வேலைக்காரியின் மனோ நிலையைப் பெற வேண்டும். செல்வந்தர் வீட்டு வேலைக்காரி, அந்தச் செல்வந்தரின் குழந்தைகளைத் தூக்கி வைத்துக் கொள்கிறார், மார்போடு அணைத்துக் கொஞ்சி தனது அன்பை முழுதும் வெளிப்படுத்துகிறாள். என்னுடைய ராஜா, என்னுடைய ராணி என்றெல்லாம் அன்பாக அழைக்கிறாள். அவளுக்கு அந்தக் குழந்தைகள் தன் முதலாளியின் குழந்தைகள் என்பது மிக நன்றாகத் தெரியும். இருந்தாலும் அவளின் உழைப்பு, அன்பு, ஆதரவு இவைகள் அந்தக் குடும்பத்திற்காகவே இருக்கும். ஏதாவதொரு காரணத்துக்காக அவளை வேலையிலிருந்து நீக்கி விட்டால் உடனே அவள் அந்த வீட்டை விட்டு வெளியேறி விடுகிறாள். வேறெங்காவது வேலையைத் தேட ஆரம்பிக்கிறாள். இந்த மனோநிலையில் தான் ஒருவர் இந்த உலகில் செயல்பட வேண்டும். என் மனைவி, என் பெற்றோர், என் குழந்தைகள் என்று வெளிப்படச் சொன்னாலும் அவர் இவைகள் எல்லாமே இறைவன் சொத்து என்று வாழவேண்டும். நாம் அந்த இறைவனின் வேலைக்காரர்கள். எந்த வேலையும் எந்த இடமும் நமக்கு நிரந்தரமில்லை என்பதை முழுமையாக உணர வேண்டும்.

நாம் இந்த உலகில் இருக்கும் வரை, நமக்கு உள்ள உறவுகள் எல்லாம் நமது எல்லா நேர வாழ்வும், வேலையும் நேர்மையாக இருக்க வேண்டும். நமது குடும்பத்தின் வேலைக்காரனாக இருந்தால் நாம் எப்போதும் எங்கேயும் வெளியேற தயாராக இருப்போம். எந்த இடமும் நமக்குச் சொந்தமில்லை. இறை நம்பிக்கை ஒன்று தான் நிரந்தர நம்பிக்கை.

# 7. சமய வளர்ச்சி

மனித வாழ்க்கை நெறிகளுள் சமய வாழ்க்கை நெறியும் ஒன்று. சமயமும் வாழ்க்கையும் பின்னிப் பிணைந்துள்ளன. இறை நெறியினையே சமய நெறி என்று கூறப்படும். இறைவன் பற்றிய கொள்கையே சமயம். கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள ஆன்மீக உறவை விளக்குவது சமயம். அரிசியையும் பச்சைக் காய்கறிகளையும் உண்பதற்கு ஏற்ற வகையில் பக்குவப் படுத்தும் கலையைச் சமையல் என்று குறிப்பிடுகின்றோம். 'சமை' என்னும் சொல் பக்குவப்படுத்து என்னும் ஏவற் பொருளைக்குறிக்கும். சமை என்னும் சொல்லின் அடியாகப் பிறந்தது 'சமைதல்' என்னும் சொல். சமைதல் என்பது அமைதல், ஆயத்தமாதல், பக்குவ மடைதல், பூப்படைதல் என்றெல்லாம் பொருள் படும்.

மனிதன் பொதுவாக உணர்ச்சிகளுக்கு அடிமையா கின்றவன். விலங்குணர்ச்சியுள்ள கொடிய மனிதனைத் தெய்வீகப் பண்புள்ள சான்றோனாகப் பக்குவப் படுத்தும் ஆன்மீகக் கலைக்கு 'சமயம்' எனப் பெயர் அமைந்தது. சுருங்கக் கூறுமிடத்துப் பொல்லாதவனை நல்லவனாக மாற்றுவது சமயம். மருள் நெஞ்சத்தை அருள் நெஞ்ச மாக ஆக்குவது சமயம். கல் உள்ளத்தைக் கனி உள்ளமாக ஆக்குவது சமயம். பகைமையைப் போக்கி ஒற்றுமையை உண்டாக்குவதும் சமயம். கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள ஆன்மீக உறவாகிய பக்தியை மனிதன் உள்ளத்தில் தோற்றுவித்து வளர்ப்பது சமயம்.

சமயம் என்பது மனித வாழ்க்கைக்கு அடிப்படையான தொரு நெறியாகும். பட்டப் படிப்பு படித்தோர் பலர், அவர் படித்தக் கல்விக்கும் தகுதிக்கும் தான் ஆற்றும் பணிக்கும் பொருத்தமற்று வாழ்வர். அவர்கள் படித்தது வேறாக இருக்கும், அவர்கள் செய்யும் வேலை வேறு ஒன்றாக இருக்கும். பி. ஏ. படிக்க வேண்டிய வேலைக்கு பி.காம். படித்து இருப்பார். ஆனால் சமயம் அவ்வாறு இல்லை. சமயம் என்பது வெறும் ஏட்டு நெறியோ அறிவு நெறியோ அன்று, அது வாழ்க்கை நெறி. சமயமும் வாழ்க்கையும் இணைந்து செல்ல வேண்டும். இல்லை யெனில் வாழ்வில் பயனில்லை.

தமிழ் நாட்டில் சிறப்பாக வைணமும், சமயமும் மட்டுமே வாழ்ந்து வந்தது. பிற இடங்களில் பிற சமயங் களான பௌத்தமும், ஜைனமும் மதங்களாகவே மாறி செயல்பட்டு வருகின்றன. உலகில் வேறு மதங்கள் என்று சொல்லும் போது கிறிஸ்துவமும், இஸ்லாமும் பரந்து வளர்ந்துள்ளன.

எந்த மதங்களானாலும், எந்தச் சமயங்களானாலும்— இறைநெறியை எடுத்துக் கூறுபவைகளே! பொதுவாக மனித வாழ்க்கைக்குத் தேவையான நல்ல குணங்களை எடுத்தியம்பும் அமைப்பாகவே அமையும்.

# 8. மதம் என்றால் என்ன ?

இறைவன், உலகம், மனிதன் ஆகிய மூன்று அடிப்படைத் தத்துவங்களின் உறவே மதம் என்பது. மதம் இவ்வுலகினில் யாத்திரையாக வந்த மனிதன் களைப்படையும்போது, அவனுக்கு ஆறுதல் கொடுக்கிறது. இந்த உலக வாழ்க்கையின் இரகசியத்தை மனிதனுக்கு மதம் விளக்கிச் சொல்கிறது. என்றும் அழியாத பேரின்ப வீட்டுக்கு அது வழிகாட்டுகிறது.

இந்த உலக வாழ்க்கையை வெறுத்து ஒதுக்குவதல்ல மதம் என்பது. அது வாழ்க்கையின் நிறைவு ஆகும். அது என்றுமுள்ள நிரந்தரமான வாழ்வாகும். ஒழுக்கம், கட்டுப்பாடு, தியானம் ஆகியவற்றின் மூலம் மனிதன் இறைவனாகிறான். அதுதான் மதம். பிறருக்கு நன்மை செய்வதிலும், பிறரிடம் அன்பு காட்டுவதிலும் இரக்கம் காட்டுவதிலும், சத்தியத்திலும் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் தூய்மையோடிருப்பது தான் மதம். மதம் என்பது நடைமுறை வேதாந்தம். வேதாந்தம் என்பது நடைமுறை மதம். ஆராய்ச்சி, வினாவுதல், விசாரணை ஆகியவை வேதாந்தம் எனப்படும். அறிதல், உணர்தல். அனுபவம் என்பவை மதம் எனப்படும்.

ஒரே அளவுள்ள சட்டை எல்லோருக்கும் பொருந்தாது. தனி மனிதர்களின் மனநிலைகளும் தொன்று தொட்டு வரும் பழக்கங்களும் வெற்வேறானவை. எனவேதான் உலகில் வெவ்வேறு மதங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மதமும் நல்லதுதான். பரம்பொருளை நாடிச் செல்லும் எந்தப் பாதையும் நல்லது. பசுக்கள் நிறம் பல உண்டு.

ஆனால் அவை கொடுக்கும் பால் ஒரே நிறமாகிய வெள்ளை. மதம் என்பதும் ஒன்றுதான், அதை நடைமுறையில் அனுசரிப்பதுதான் வேறுபடும். மதம் என்பது ஒருவரால் திணிக்கப்பட்ட கொள்கை அன்று, கொள்கையின் தொகுப்பும் அன்று, மதம் என்பது கடவுளின் இயல்பு.

சில நம்பிக்கைகளின் தொகுப்பு. அது ஒரு நம்பிக்கையோ, உணர்ச்சியோ மட்டுமல்ல ; அது ஒருவர் வயிற்றுக் கோளாறாலோ, வயிற்றுக் கடுப்பு நோயாலோ வருந்தும்போது சொல்லும் பிரார்த்தனையும் அன்று. அது முக்கியமாக நல்லதும் தொண்டு நிறைந்ததுமான ஒரு வாழ்க்கையாகும். மதம் என்பது இறைவனில் வாழ்வதாகும். எவன் ஒருவன் அன்பு, இரக்கம், இறையுணர்வு, உண்மை ஆகிய பண்புகளையுடையவனாக இருக்கிறானோ ; எவன் நம்பிக்கையுடனும், இறை பக்தியுடனும் இருக்கிறானோ ; அவன் உண்மையில் மதத்தில் ஈடுபாடு உள்ளவனாவான்.

நெற்றியில் சின்னங்களை அணிவதும், தலையில் சடைமுடியும், முகத்தில் தாடியும் வளர்த்துக் கொள்வதும் ; கடும் வெயிலிலும், கடும் குளிரிலும் நிற்பதும் ; காவி உடை அணிவதும், தலையை மழித்துக் கொள்வதும், மணி அடித்துக் கொண்டிருப்பதும், சங்கை ஊதுவதும், தாளத்தை ஒலிப்பதும் மட்டும் மதம் அல்ல. உலகியல் வாழ்க்கையின் நடுவே நல்ல பண்புகளும், தூய்மையும், தொண்டும் அமைந்த வாழ்க்கைதான் உண்மையில் மதம் என்பதாகும்.

இறைவனில் வாழ்வதே மதம். ஆனால் மதம் என்பது வாதத்திற்கு அப்பாற்பட்டது. நமக்குள்ளேயும் வெளியேயும் காணப்படும் வாழ்க்கையே மதமாகும். இறைவனை உணர்வதும், அவனாகவே மாறிவிடுவதும் தான் மதம். சொந்த விருப்பு வெறுப்புகளுக்கும் கொள்கையில்

பிடிவாதமும் வெறியோடும், குறிப்பிட்ட பிரிவில் மட்டும் நாட்டம் உள்ளவர்களுடைய கருத்துக்களும் நம் கண்களை மறைத்து மதத்தைப் பற்றி ஒரு குறுகிய நோக்கம் கொள்ளுமாறு செய்வது பெரும் தவறாகும்.

பகுத்தறிவுடனும் வேற்றுமைகளைக் கண்டறியும் தன்மையுடனும் மதம் தத்துவம் ஆகியவைகளிலுள்ள முக்கியமானவைகளையும் முக்கியமல்லாதவைகளையும் அறியும் தன்மை நமக்கு இருக்க வேண்டும். மதங்களின் முக்கியமான கோட்பாடுகளும் ஒரே மாதிரியானவை தான். அவை எல்லாம் ஒத்துப் போகின்றன. முக்கிய மல்லாத சிலவற்றில் தான் அவை மாறுபடுகின்றன.

சமயச் சார்புள்ள வாழ்க்கை மிக உயர்ந்த பேறு ஆகும். மதம் உலகியல் தொடர்பு, தூய்மையின்மை, நம்பிக்கைத் துரோகம் ஆகிய சேற்றிலிருந்து மனிதனை உயர்த்துகிறது. ஒளி பெறாத அறிவினால் பயன் ஏதுமில்லை. எந்த மதத்தின் கோட்பாடுகளின்படி நடந்து கொண்டாலும் ஞானம், நிரந்தர அமைதி, நிலை பெற்ற பேரின்பம் ஆகியவற்றை அடையலாம்.

இப்போது சொல்லப்படும் இந்து மதம் என்ற பெயர் இதன் உண்மையான பெயரன்று. ‘இந்து’ மதம் என்று யாரும் பெயர் வைத்ததாக குறிப்பில்லை. நமது பழைய சாத்திரங்கள் எதிலுமே ‘இந்து மதம்’ என்கிற சொல்லே கிடையாது. மேல் நாட்டுக்காரர்கள் சிந்து நதியைக் கடந்தே நம் பாரத நாட்டுக்கு வரவேண்டியிருந்தது. அதனால் சிந்துவை இந்து என்றும் அதை அடுத்த நாட்டை இந்தியா என்றும் அதன் மதத்தை இந்து என்றும் குறிப்பிட்டார்கள்.

இந்த நிலையில் தான் இங்கே இருந்த தொன்மை வாய்ந்த எந்தப் பெயரும் இல்லாத மதத்திற்கு இந்து மதம் என்றும், பாரதம் இந்தியா என்றும் பெயர் மாறி விளங்கிறது.

ஒரே மதம் இருந்ததினால் இதற்குப் பெயர் தேவை யில்லாமற் போயிற்று. மற்ற மதங்கள் எல்லாமே இதற்கு பின் வந்த, ஏற்பட்ட மதங்களாகும். மேலும் அவைகள் எல்லாம் மகான்கள் பெயரால் ஏற்பட்டதாகும். கௌதம புத்தரால் ஏற்பட்டது 'புத்தமதம்.' மகாவீரர் என்கிற ஜீனரால் ஏற்பட்டது 'ஜைன மதம்.' யேசுகிறிஸ்துவின் உபதேசங்களையும் கோட்பாடுகளையும் கொண்டு உருவாக்கப் பட்டதே 'கிறிஸ்து மதம்.' இதற்கும் பிறகு முகமதுநபியின் உபதேசங்களும் அதைத் தொடர்ந்த மதமு மாக 'இஸ்லாம்' மதம் ஏற்பட்டது. எனவே ஒவ்வொரு மதத்திற்கும் ஒருவர் காரண கர்த்தாவாக இருந்து உள்ள னர். இவைகளுக்கு முன்பே உலகம் முழுதும் பரவி இருந்த ஒரே கொள்கை இந்து மதத்தினுடையது தான். ஆனால் மதம் என்றோ அதற்கு இந்து என்றோ பெயரிடப்படாத சூழ்நிலையில் இருந்தது. அப்போது இப்போது உள்ள வேற்றுமையுணர்வுகள்— பிரிவு மனப்பான்மைகள்— தீண்டத் தக்கது— தீண்டத் தகாதது— சாதிப்பிரிவுகள், உயர்ந்தோர், கீழோர் போன்றவைகள் எல்லாமே இடை யில் நுழைந்து 'இந்து மதம்' பாழாகி இருக்க வேண்டும். இல்லை என்றால் இதனை சீர்திருத்த வேண்டி பிற மதங் கள் ஏற்பட வழியில்லை. அவைகளில் முதலில் ஒழித்தது சாதி என்பதைத் தானே? சடங்குகள் வழிமுறைகள் நம்பிக்கையின் பெயரால் ஏற்பட்டவை.

'இறைவழிபாடு' உருவாக்கியவர்கள் ஒருவராக இருந்த தாலும் அல்லது ஒருவரை பற்றி உருவானதாலும் இறைவன் ஒருவராக அவர் மூலம் இறைவனை வழிபடும் முறை பிற மதங்களில் காண முடிகிறது ஆனால் இந்து மதத்தில் பலர் பலவிதங்களில், பல இடங்களில், பல காலங் களில், பல இறைவன்களை உருவாக்குவதும், ஒன்றோடு ஒன்றுக்குத் தொடர்பு வைப்பதும், பலர் பல நேரத்திற் கேற்ப கதைகள் புனைவதும், அவைகளில் நீதியினை புகுத்த வேண்டி— அறம் விளக்க வேண்டி— பல இறை

உருவங்களை உருவாக்கி வைத்தனர். தான் வாழுகின்ற கூட்டுக் குடும்பம் போன்றே கடவுள்களுக்கும் குடும்பத்தை உருவாக்கி மனத் திருப்தி அடைந்தார்கள். பல மூட நம்பிக்கைகளைப் புகுத்தவும் தயங்கவில்லை. இவைகள் எல்லாம் பிற்கால ஆன்றோர்களும் சான்றோர்களும் மிக நன்றாகத் தெள்ளத் தெளிவாக நமக்குப் புரிய வைத்துள்ளனர். எது எப்படியாயினும் தொன்மை வாய்ந்த நாட்டில் தொன்மை வாய்ந்த மதம் இந்து மதம் என்பது உண்மை. வேதங்கள் எழுதப்பட்ட போதும்— சாத்திரங்கள் உருவான போதும் தான் இந்து மதம் மாறுவதற்கான சூழ்நிலை ஏற்பட்டுள்ளது.

## இந்து மதத்தின் முக்கிய கொள்கைகளின் சாரம் :

1. பிரம்மம் எனப்படும் பரம்பொருள் ஒன்று உண்டு. அதனை உணர வேதமே முக்கியம்.
2. நாம் செய்யும் வினைகளும், மறுபிறப்பும் பிரிக்க முடியாதவையாகும். ஆதலின் மக்கள் தம் வாழ்நாளில் தமக்கு விதிக்கப்பட்ட கடமையான காரியங்களைத் தவறாமல் செய்து அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பயன்களையும் பெற வேண்டும்.
3. பரம்பொருளை ஒருவர் அடைய கரும மார்க்கம், பத்தி மார்க்கம், ஞான மார்க்கம் என்ற மூன்று நெறிகள் உள்ளன.
4. பரம்பொருள் மூன்று மூர்த்திகளாயிருந்து உலகத்தைப் படைத்து, காத்து, மறைத்து அருள் பாலிக்கிறது. இதற்காக அவதாரங்கள் எடுத்து மண்ணுலகிற்கு வருவதுமுண்டு.
5. ஒவ்வொருவரும் தம் மனத்திற்கு உகந்த தெய்வத்தை வழிபடலாம். அதில் குற்றமில்லை. அந்த அந்த சிலைகளை வைத்து வழிபட வேண்டியமுறைப்படி வைத்து வழிபடலாம்.

# 9. விஞ்ஞானமும், மெய்ஞானமும

விஞ்ஞானம் என்பது மனித வாழ்விற்கு மிகவும் தேவையானது. எப்படி வாழ வேண்டுமென்றாலும் விஞ்ஞானத்தின் துணை மனிதனுக்கு இன்றியமையாதது. விஞ்ஞானம் இன்றி இந்த உலகத்தின் இன்றைய வளர்ச்சி இல்லை.

இரவைப் பகலாக்கும் ஒளி விளக்குகள்— இருந்த இடத்திலிருந்தே தொலைதூரத் தொடர்புக்கு தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ளும் சாதனங்கள்— அதிவேகமாகப் போகும் மோட்டார் கார், இரயில், விமானம் போன்ற வழிப் பயண வசதிகள்— வெட்பதட்ப நிலை மாற்றி குடிப்பதைக் குளிர்ச்சியாக்கித் தரும் வினோதக் கருவிகள்— அறை முழுவதையும் குளிராக்கி அனுபவிக்கக்கூட இயலுகின்ற விந்தை! இப்படி எத்தனையோ விஞ்ஞான விந்தை கரும்பலகையிலிருந்து அறிவு வளர்ந்து இன்று கம்ப்யூட்டர் வரை! வானமண்டலத்துக்கும், சந்திர மண்டலத்துக்கும் சென்று வரும் வளர்ச்சி! எதையும் இருந்த இடத்திலிருந்தே கண்டு மகிழும் அளவிற்கு அற்புதக் கண்டுபிடிப்புகள்.

எல்லாம் மனித வாழ்விற்காகவே, மனித உழைப்பை குறைப்பதற்காகவே. மனிதன் குறைந்த நேரத்தில் அதிகம் அனுபவிப்பதற்காகவே. விஞ்ஞான வளர்ச்சியின் துணையால் மனிதன் எண்ணியதெல்லாம் எதிரில் வைத்துப் பார்த்து மகிழ்ந்து விடுகிறான்.

ஆனால் என்னதான் விஞ்ஞான விந்தையில் மனிதன் மகிழ்ந்தாலும் இயற்கையின் நன்மைக்கு மிஞ்சியது ஏது

மில்லை. விஞ்ஞான வசதியின்றி கூட மனிதன் வாழ்ந்து விடக் கூடும். இயற்கை தன் செயலிழந்தால் மனிதன் தன் வாழ்க்கையையே இழந்துவிட வேண்டி வரும்.

எல்லாம் இருக்கும் ஒருவனுக்கு உள்ளத்தில் அமைதி இருக்காது. உள்ளத்து அமைதியின்மையை எந்த விஞ்ஞான வளர்ச்சியின் மூலமும் அமைதி படுத்த முடியாது. அங்கேதான் ஆன்மீகம் தேவைப்படுகிறது. எதிலுமே பெறாத ஒரு பேராற்றல் கூடிய பெரும் அமைதி ஆன்மீகத்தில் பெற முடிகிறது. விஞ்ஞானத்தின் துணையால் பெறுகின்ற எல்லாப் பொருள்களுக்கும் பொருள் தேவை. சாமானியன் பெற இயலாது. ஆனால் ஆன்மீகத்தின் துணையைப் பெற யாராலும் எப்போதும் இயலும். எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் ஆன்மீக முறையில் மனதைத் தூய்மைப்படுத்தி மகிழ முடியும்.

இப்படிச் சொல்வதால் எந்த உழைப்பும் இன்றி சாமியாராகி விட வேண்டுமென்பதல்ல. தான் தனக்கு ஏற்ற உழைப்பு, உண்மை, அறிவு, ஆற்றல், திறமை, கடமை, பொறுமை இவைகளை கடைபிடித்தால் நிச்சயம் வாழ்வில் வெற்றி பெற இயலும். சோம்பித் திரிவதைத் தவிர்த்தல் மிக மிக அவசியம். அறிவை வளர்த்துக் கொள்ளவும் ஆற்றலைப் பெருக்கிக் கொள்ளவும், அன்பு உள்ளத்தோடு மற்றவர்களை அணுகுவதும், உண்மை நெஞ்சத்தோடு வாழ்வதும், எந்தவிதமான உழைப்பையும் உழைக்க தயக்கம் கொள்ளாமையும் இருந்தாலே உயர்வு தானாக வரும்.

மனிதன் எப்போதும் ஆசைகளை அடக்குவதே அவசியமானது. எல்லா வசதிகளும் தனக்குத் தேவையென்கின்ற மனோபாவம் அனைவருக்கும் உண்டு. கண்டவற்றையெல்லாம் அனுபவிக்கக் கோருவது ஆபத்தில் முடியும்.

தேவையானதை தேவையான நேரத்தில் தேர்ந்தெடுப்பதே சாலச் சிறந்தது. எனவே விஞ்ஞானமும்

ஆன்மீகமும் மனிதனுக்குக் கலந்தே தேவைப்படுகிறது. நல்ல அறிவு நிரம்பிய மனித வாழ்விற்குத் தேவையான ஆக்கப் பூர்வமான ஆன்மீகக் கருத்துக்களை எடுத்துச் சொல்லி அது பலர் காதுகளில் விழுவதற்கு ஏதுவாக விஞ்ஞானத்தின் துணையான ஒலிபெருக்கித் தேவைப் படுகிறது. இரவு நேரத்தில் ஆயிரக் கணக்கானோர் அங்கே அமர்ந்து ஆன்மீக சொற்பொழிவைக் கேட்க, கேட்டுப் பயன்பட ஒளி விளக்குகள் தேவைப்படுகிறது. இப்படி விஞ்ஞானத்தின் துணையும் மனிதனுக்குத் தேவைப்படுகிறது.

விஞ்ஞான வளர்ச்சி ஒரு நாகரிக வளர்ச்சியே ; என்றா லும் அதற்கு ஏற்றபடி நடைஉடை பாவனை மட்டும் நாகரிக வளர்ச்சி அல்ல. மனித உள்ளம் நல்லபடி பக்குவப் பட்டாக வேண்டும். மனிதனுக்கு என்று பல நல்ல குணங் கள் தேவைப்படுகிறது. சில தீய குணங்கள் அறவே தவிர்க்கப்பட வேண்டியுள்ளது.

எனவே இந்தப் பகுதியில் எந்தெந்த குணங்கள் தேவை, அதனால் ஏற்படும் பலன்கள் என்ன ? என்பதை யும் எந்தெந்த குணங்கள் தேவையற்றது, அதனால் ஏற்படும் தீயவை என்ன ? என்பதையும் தெரிந்து கொள்வோம். முயன்றால் முடியாதது ஒன்றும் இல்லை.

# 10. பற்று

''பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.''

திருவள்ளுவப் பெருந்தகையார் எவ்வளவு அழகாக பற்றுக என்றார் பற்றற்றான் பற்றினை. மனிதன் தன் வாழ்வில் காணும் எல்லாப் பொருள்கள் மீதும் பற்று கொள்கிறான். அதை அடைய முடியாதபோது வெறுப் படைகிறான். அதனால் தான் பற்றே இல்லாதானை அதாவது இறைவனை பற்றிக் கொண்டால் மற்றவை யெல்லாம் தானாக உள்ளத்திலிருந்து குறைந்துவிடும்.

மனிதனுக்கு எது தேவையோ உயிர் வாழ, உடல் வளர இவைகளைத் தவிர மற்றவைகள் எல்லாம் நாமாக எதிர் பார்ப்பது ஆகும். கண்டதை கண்டவன் பற்ற எண்ணுவது வீணாகும். எங்கெங்கு இன்பம் இருக்கிறதோ அங்கெல் லாம் பற்று இருப்பதை நாம் காணுகின்றோம். மனைவி, மக்கள், வீடு, பொருள் இவைகளிடத்தில் நமது மனம் பற்று கொள்கிறது என்றால் அது இவைகளிடத்தில் இன்பத்தைக் காண்பதாகும்.

மனிதன் படும் துன்பங்கள் அனைத்திற்கும் மூல காரணம் இந்தப் பற்றுதான். இது அறியாமையால் வரும் அவதி, ஆசை. கணவன் இறந்து விடும்போது மனைவியும் புரண்டு கதறுகிறாள். இது கணவன் மீது அவள் கொண்ட தூய அன்பினால் அல்ல. இனி தனக்கு இன்பம் கிடைக் காதே என்பதாலும், துணை கிடைக்காதே என்பதாலும், கணவனோடு வாழ்கின்றோம் என்கிற பெருமை கிடைக்

காதே என்பதாலும். அதுபோல மனைவி இறந்து விடும்போதும் கணவன் அழுகிறான். தனது ஆசைகள் இனி நிறைவேறாதே என்பதாலும், தனக்கு எடுபிடி யாக, வேலைக்காரனாக இருந்ததாலும், தான் தனிமைப் படுத்தப் பட்டோமே என்கிற பயத்தாலுமே.

தனக்குரிய பற்றுப் பொருளை இழக்கும்போது ஒரு வித பயமும் தோன்றும். இப்படித்தான் தான் பெற்ற பிள்ளைகள் மீது கொள்ளும் பற்று ஒரு விந்தை. தன் மகன் மீது உள்ள பற்றின் காரணமாக அவன் ஒரு டாக்டராக வேண்டும், ஒரு இஞ்ஜினியராக வேண்டும், ஒரு வக்கீலாக வேண்டும் என்கிற ஆசை எழுகிறது. அவனுக்குப் பொருத்தமான கல்வி எது என்பதைக் கூட கவனிப்பது இல்லை. தனக்குள் இருக்கும் ஆசையை மகன் மீது திணிக்க முயலுவது தனக்குள் இருக்கும் பற்றே காரணம். அதுபோலவே தன் மகளை நல்ல வரனாகப் பார்த்து மணமுடிக்க வேண்டும் என்கிற ஆசை மகள்மீது தனக்குள்ள பற்றின் காரணமாக எழுகிறது. ஆனால் மகளுக்குக் கிடைக்கும் வரன் நீண்ட தூரத்தில் இருந்து கிடைக்குமாயின் மனம் ஒப்புவதில்லை. நல்ல வரன் வேண்டும், அவனுக்கு அதிக வருவாய் வேண்டும், ஆனால் அவன் அருகிலேயே வாழவேண்டும். இது மகளின் மீது அவன் வைத்திருக்கும் பற்றின் காரணமே. இது போன்ற காரணத்தால் நல்ல முறையில் மணமுடித்துக் கொடுத்து நலமாக வாழும் பெண்கள் தாய் தந்தையினரின் அர்த்த மற்ற பற்றின் காரணமாக கணவனிடம் சண்டையிட்டு பெற்றோரிடமே வந்து சேர்ந்து தன் இல்லறத்தைத் துறந்த கதைகள் நமது நாட்டில் ஏராளம் உண்டு.

இதனால் நாம் புரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால் நமது பற்றின் காரணமாகத் தொடர்ந்து மற்றவர் வாழ்வும் பாதிக்கும். பற்று ஒரு சங்கிலித் தொடர் போன்றது. அது ஒன்றன் பின் ஒன்றாக பற்றிக் கொண்டே போகும்.

**"வலுத்து வேரூன்றிய இந்த மாயா மரத்தை**
**பற்றின்மை எனப்படும் உறுதியான வாளால் வெட்டு"**

என்று கீதையில் சொல்லப்பட்டு உள்ளது. பற்றினை வெட்டு என்று கூடச் சொல்லவில்லை உறுதியான வாளால் என்று அழுத்தமாக எடுத்துச் சொல்வதற்குக் காரணம், பற்றுக்கு உறுதி அதிகம் என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டும். இதனால் எல்லாப் பற்றுகளையும் துறந்து வீட்டை விட்டு காட்டுக்குச் சென்று விடவேண்டும் என்பதல்ல.

நேற்று வரை இருந்தவன் இன்று இல்லை. எனவே நாமும் நாளை இல்லாமற் போகலாம். அதற்காக பலரைப் பகைத்துத் தனக்குச் சொத்து சேர்த்து வைப்பது, தனது பிள்ளைகளுக்காக பல துரோகங்களைச் செய்தல், உடன் பிறந்தவர்களையே பகைத்து, தன் பிள்ளைகள் வாழ்வை மட்டும் எண்ணுதல், நண்பர்களில் கூட ஒருவரை யொருவர் ஏமாற்றுதல், தன்னுடையது எதுவானாலும் உயர்வாகக் கருதி பிறருடையது எதுவானாலும் அதனைத் தரக் குறைவாகக் கருதுதல், இப்படிப் பல சுயநல எண்ணங்கள் ஏற்படக் காரணம் தன்னுள் இருக்கும் பற்றே காரணம்.

பற்றுக்கு மரணம் உண்டு, பற்றின்மைக்கு நிரந்தர வாழ்வு எப்போதும் உண்டு. பற்றற்ற நிலை பல்வேறு பேரானந்தத்தைக் கொடுக்கிறது. பற்று மனதைச் சுருங்கச் செய்கிறது.

பற்றற்ற நிலையே என்றும் உள்ளத்தை எல்லையின்றி விரிவடையச் செய்கிறது. பற்று ஒரு மனிதனை ஒரு சிறு ஜீவனாக்குகிறது. பற்றற்ற நிலை விடுதலையைக் கொடுக்கிறது. பற்று மன வருத்தத்தையும், சண்டை சச்சரவுகளையும் உண்டாக்குகிறது. பற்றற்ற நிலை ஒருமைப்பாட்டையும் பெருந்தன்மையையும் உண்டாக்கு கின்றது. பற்று விஷம், பற்றின்மை அமிர்தம். பற்று நமது விரோதி, பற்றின்மை நமது உயிர்த் தோழன்.

பற்று மூடப் பற்றாகக் கூட சில நேரங்களில் தலை யெடுக்கும். ஒரு சிறுவன் ஒரு குளத்தில் தவறுதலாக விழுந்து விடுகிறான். அருகேயிருந்த அவனின் தாய் தனது மகன் மீது உள்ள பற்றின் காரணமாக தானே குளத்தில் குதித்து விடுகிறாள்! மகனும் தாயும் குளத்தில் மூழ்கி இறந்து விடுகிறார்கள். மகனும் மனைவியும் குதித்தது அறிந்த அவளின் கணவன் இருவர் மீது இருந்த பற்றின் காரணமாக தானும் குதித்து நீச்சல் தெரியாது இறந்து விடுகிறான். இது தான் மூடப்பற்று. செய்ய வேண்டியதை செய்ய வேண்டிய நேரத்தில் சிந்தித்து செயல்படக்கூட மூடப்பற்று இடங்கொடுக்காது.

எந்த நேரத்திலும் அதிர்ச்சியினைத் தவிர்த்து அமைதி யாக சிந்திக்க முயலவேண்டும். அப்போது அறிவு வேலை செய்யும். மெய்யையும், பொய்யையும் பகுத்தறியக் கற்றுக் கொள்ளுதல் வேண்டும். எந்த நேரத்திலும் ஒரு இலட்சிய வாழ்க்கையை அடைத்துக் கொள்ள வேண்டும். தாமரை இலைத் தண்ணீர் போல பற்றற்று இவ்வுலகில் வாழக் கற்க வேண்டும்.

மனத்துன்பங்கள் அனைத்திற்கும் மூலகாரணம் பற்று. அழியக் கூடியப் பொருள்களின் மீது நமது ஆசை தேவை யில்லை என்கிற மன உறுதி கொள்ள வேண்டும். கிடைக்காத ஒன்றுக்காக அருகில் உள்ளவற்றை கேவலப்படுத்துதல் கூடாது. எதிலும் திருப்தி, எளிமை யான ஆடை, அன்புடன் பேசுதல், அறிவுடன் ஆராய்தல், சினம் தவிர்த்தல், கண்டவற்றின் மேல் ஆசை கொள்ளாமை இவைகள் எல்லாம் பற்றற்று இருக்கப் பயன்படும்.

பற்றற்றவன் என்றால் உலகைத் துறந்தவனாகக் கருத மாட்டான். உலகோடு தொடர்பு வைத்துக் கொண்டு, ஆனால் அதே சமயத்தில் அதில் உள்ள குற்றங் களைக் காணுபவனை உண்மையிலேயே உலகத்தைத் துறந்தவன் என்று கூறலாம். அப்படிப்பட்டவன் சகல

விதமான தீய இச்சைகளிலிருந்தும் விடுபட்டு எதையும் சாராது இருப்பான்.

எனவே மனிதன் எப்போதும் எதன் மீதும் பற்று அதிகம் வைத்தலோ— எதையும் அதிகம் நம்புதலோ— தவறாகும். அளவுக்கு அதிகம் எதுவுமே விரும்பத்தக்கது அல்ல. உழைப்பை மட்டும் நம்பி, அதிலிருந்து வரும் ஊதியத்திலேயே உள்ளத் திருப்தியோடு சிறப்பான வாழ்க்கை நடத்த முயல்வது மிகச் சிறந்தது.

ஆனால் இந்த உலகம் மனிதனைப் பாழாக்கப் பல வழிகளில் முன்னேறிக் கொண்டு இருக்கிறது. இதன் முடிவு எங்கு சென்று முடியுமோ தெரியாது. எது எப்படி வளர்ந்தாலும், உள்ளம் அமைதியில்லையென்றால் வாழ்வில் வளர்ச்சியில்லை. எனவேதான் எதிலும் எப்போதும் மனதைக் கட்டுப்படுத்தி எளிமையாக இருக்கப் பழகுதல் வேண்டும். பற்று தானாக மறைந்து விடும்.

# 11. மனத்தூய்மை

மனம் எவ்வளவுக் கெவ்வளவு ஒருமுகப் படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அறிவு வளர்ச்சி ஏற்படுகிறது. செருப்புத் தைப்பவன் தன் செயலில் மனத்தை ஒருமுகப் படுத்திச் செய்வானானால் அவன் திறம்படத் தன் செயலைச் செய்யலாம். மன ஒருமைப்பாட்டுடன் செய்யப் படும் சமையல் சிறந்த சமையலாக இருக்கும். பொருள் திரட்டுவதிலோ, வழிபாடு செய்வதிலோ, வேறு எந்தச் செயலைச் செய்வதிலோ மனோ சக்தியை எல்லாம் ஒன்று படுத்தும் அளவு அச்செயல் சிறந்ததாக அமையும். மன ஒருமுகப்பாட்டின் மூலமே இயற்கையின் ரகசியங்களை அறியலாம். மன ஒருமுகப்பாடு அறிவுக் கண்ணைத் திறக்கிறது.

மனிதன் தன் மனோ சக்தியைத் தொண்ணூறு சதவீதம் வீணாக்கி விடுகிறான். அதன் விளைவாக அவன் திரும்பத் திரும்பத் தவறுகள் செய்கின்றான். மனத்தை அடக்கிப் பழகிய மனிதன் தவறு செய்யமாட்டான். மனிதனுக்கும் விலங்குக்கும் உள்ள வித்தியாசம் மன ஒருமுகப்பாட்டில் தான் இருக்கிறது. விலங்கினிடத்தில் மறைந்து இருக்கின்ற மனம் ஒருமுகப் படுவதில்லை. ஒரு பொருளினிடத்து விலங்கு நீண்ட நேரம் மனத்தைச் செலுத்தாது. மனிதனுக் கிடையிலேயே நாம் வேற்றுமையைக் காண்கின்றோம்.

மனத்தை ஒருமுகப்படுத்தும் திறனுக்கு ஏற்ப மனிதன் மேலோனாகின்றான். கீழான மனிதனையும் மேலான மனிதனையும் ஒப்பிட்டுப் பார்த்தால் மன ஒருமுகப்பாடே அவர்களுக்கிடையில் உள்ள வேற்றுமைக்குக் காரணமாக இருக்கிறது என்பதை அறியலாம். வாழ்க்கையில் மனம்

ஒருமுகப்பாடு உண்டாவதற்கேற்ப வெற்றி கிடைக்கிறது. மனத்தை மனத்தின் மீதே ஒருமுகப்படுத்தும் பொழுது மனம் நமக்கு அடங்கி நடக்கிறது. அப்பொழுது மனம் நமக்குத் தலைவனாக இருப்பதில்லை.

கிரேக்கர்கள் புறவுலகில் மனத்தை ஒருமுகப்படுத்தினார்கள். அதன் விளைவாகக் கலை வளர்ச்சியில் நிறை நிலையைக் கண்டார்கள். இந்துக்கள் அகவுலகில் மனத்தைச் செலுத்தினார்கள். அதன் விளைவாக அவர்கள் சிறந்த யோகிகள் ஆனார்கள். இயற்கையினிடத்திலுள்ள இரகசியங்களை எல்லாம் அறிவதற்கு வேண்டிய சக்தி மனத்தை அதன்கண் ஒருமுகப் படுத்துவதன் மூலமாகவே கிடைக்கின்றது.

அறிவுக் களஞ்சியத்தைத் திறப்பதற்குரிய சாவி மன ஒருமுகப்பாடேயாகும். மனித சக்தி இப்போது வீணாகிக் கொண்டு இருக்கிறது. எண்ணங்களை ஒரு பொருளின் மீது செலுத்த முயன்றவுடன் நிறைவேறாத ஆயிரக்கணக்கான ஆசைகள் மனத்தில் எழுந்து மனதைக் கெடுக்கின்றன. மனத்தை ஒருமுகப்படுத்துவது தான் தியானப் பயிற்சியாகும்.

தேவையற்ற செய்திகளை எல்லாம் மூளையில் திணிப்பது என்பது கல்வியாகாது. கல்வியின் சாராம்சம் மனத்தை ஒருமுகப்படுத்துவதே. மனம் சரியாக இருந்தால் அறிய வேண்டியவைகளை அறிந்து கொள்வது கல்வியாகும். மனத்தை ஒருமுகப் படுத்துவதுதான் இயற்கையைப் பற்றிய ரகசியத்தை அறிவதற்கு உரிய முறையாகும். மனிதனுடைய மனோசக்திக்கு எல்லை இல்லை. எவ்வளவுக் கெவ்வளவு மனத்தை ஒருமுகப் படுத்துகின்றோமோ, எவ்வளவுக் கெவ்வளவு மனத்தை ஒரு பொருளின் மீது குவியச் செய்கின்றோமோ அதுதான் அப்பொருளை அறிவதற்குரிய இரகசியமாகும்.

தீய செயல் எவ்வளவு கொடியதோ அவ்வளவு தீய எண்ணமும் கொடியதாகும். சிந்தனை, சொல், செயல்

ஆகிய மூன்றிலும் மனிதன் தூயவனாக இருக்க வேண்டும். ஒரு மனிதன் எந்தச் சமயத்தைச் சார்ந்தவன்— எந்த மதத்தைச் சார்ந்தவன் என்பது அல்ல முக்கியம்— ஒரு மதத்தில் உள்ள உண்மை எதுவோ அதுதான் மற்ற எல்லா மதங்களிலும் உள்ள உண்மையாகும். வேறுபாடுகள் எல்லாம் அர்த்தமற்ற செயல்களில் தான் இருக்கின்றன. அடிப்படையில் இல்லை.

உலகத்திலுள்ள எல்லா மதங்களையும் ஆராய்ந்துப் பார்த்தாலும் இறைவனைப் பற்றிய மூன்று கருத்துக்களே உள்ளது.

முதலாவதாக அழிந்து போகும் உடலுக்கு அப்பால் அழியாத மாறாத ஒன்று இருக்கிறது. அதற்கு ஆதியும் இல்லை அந்தமும் இல்லை. மனிதன் ஆதியில் பூரணமாக இருந்தான் தன்னுடைய செயலால் தூய்மையை இழந்து விட்டான். மீண்டும் அவன் தூய்மையைப் பெறுவதற்கு இறைவனை அறிய வேண்டும். எல்லா மதங்களும் ஆத்மா அழிவற்றது என்று போதிக்கின்றன. தன் தூய்மையை இழந்த ஜீவன் இறைவனை அறிந்து தூய்மையைப் பெற வேண்டும்.

இறைவன் சர்வ சக்திமானாகவும், சர்வக்ஞனாகவும் விளங்குகிறார். புதிய ஏற்பாட்டில் பரம பதத்தில் நம்முடைய பிதா இருக்கின்றார் என்று கூறப்பட்டு உள்ளது. இந்து மதத்தின் துவைதக் கொள்கைபடி கடவுள் நமக்கு வேறாக இருக்கிறார். ஆனால் நாம் வணங்கும் இறைவன் பரமபதத்தில் இருக்கிற பிதா மட்டும் இல்லை. நாமும் அப்பிதாவும் ஒன்றே என்பதை இந்து மதம் புகட்டுகிறது. நம்மிடத்தில் அழியாததாக எது இருக்கிறதோ அதுதான் நாம். நாமே இறைவனாக இருக்கிறோம் என்பதை அறிவதுதான் அத்வைதம் ஆகும். பரமபதம் நம்மிடத்திலேயே இருக்கிறது. இது இந்து மதத்தின் கோட்பாடு.

மனித எண்ணம், சொல், செயல் இவைகள் தூய்மையாக இருத்தல் வேண்டும். அப்படியிருப்பின் அங்கே இறைவன் குடியிருப்பான்.

# 12. பண்பு

மனிதனுக்குப் பழக்கமே பண்பாக வடிவெடுக்கிறது. எனவே நல்ல பண்பை எப்பொழுது வேண்டுமென்றாலும் நாம் உருவாக்கலாம். மனத்தில் எழும் எண்ண அலைகள் உள்ளத்தில் பதிவுகளை உண்டு பண்ணிவிட்டு மறைகின்றன. ஒவ்வோர் எண்ணமும் அதற்கேற்ற பதிலை உண்டு பண்ணுகிறது. அப்பதிவுகளின் தொகுப்பே பண்பாகும்.

எண்ண அலைகளுக்கு ஏற்ப மனிதன் நடந்துகொள்கின்றான். நல்ல எண்ணங்கள் எழுவதால் நல்லவனாகவும், கெட்ட எண்ணங்கள் எழுவதால் கெட்டவனாகவும் மனிதன் நடந்து கொள்கிறான். இன்ப அலைகள் எழும்போது அவன் இன்புற்றிருக்கிறான். கெட்ட பழக்கங்களை ஒழிப்பதற்கு அவற்றிற்கு மாறான நல்ல பழக்கங்களை மேற்கொள்வதே உபாயமாகும். கெட்ட பழக்கங்களினால் உள்ளத்தில் ஏற்பட்ட பதிவுகள் நல்ல பழக்கங்களினால் கட்டுப்படுத்தப்பட வேண்டும்.

ஓயாது நல்லது செய்து கொண்டே இருங்கள். புனித எண்ணங்களை எண்ணிக் கொண்டே இருங்கள். அதுதான் மனத்திலுள்ள கெட்ட பதிவுகளை அடக்குவதற்கு வழியாகும். உபயோகமற்றவன் என்று எந்த மனிதனையும் கூறாதீர்கள். மனிதன் பண்பின் வடிவமானவன். அவன் பண்பை மாற்றி அமைக்க முடியும். திருப்பித் திருப்பிச் செய்கின்ற செயலே பண்பாகிறது.

ஒருவன் அரிய பெரிய செயலைச் செய்வதை வைத்துக் கொண்டு அவனுடைய பண்பை நாம் தீர்மானிக்க

முடியாது. ஏதாவது ஒரு சமயத்தில் அறிவிலியும் ஒரு வீரனாகக் கருதப்படுகிறான்.

மனிதனுடைய ஒவ்வொரு செயலையும் உற்று நோக்க வேண்டும். உயர்ந்த பண்பை ஒவ்வொரு செயலிலும் விளக்குதல் வேண்டும். எத்தகைய சூழ்நிலையிலும் எல்லாக் காலத்திலும் உயர் பண்பாளன் பெருமைக்குரியவனாகவே நடந்து கொள்வான். நாம் எத்தகையவர்களோ அத்தகைய உலகத்தைக் காண்கிறோம். உலகம் கேடு நிறைந்தது என்று உரைக்காதீர்கள். உலகில் கேடு உனக்குத் தென்படுமானால் அதைக் குறித்து நீ வருந்து. உலகுக்கு உதவ வேண்டும் என்று விரும்புவாயானால் நீ அதைக் குறை கூறாதே. குறை கூறி அதைக் கேவலப் படுத்தாதே. பாபம், துன்பம், கேடு என்று சொல்வதெல்லாம் நமது மனக்குறையின் அறிகுறிகளே ஆகும்.

சமய ஞானம் இல்லாதவர்களும் இறைவன் குழந்தைகளே என்பது புரிந்து கொள்ள வேண்டும். சிறுவயதிலிருந்தே அவர்களை உயர்த்தக் கூடிய திண்ணிய எண்ணங்கள் அவர்கள் மனத்தில் புகுவதற்கு உதவ வேண்டும்.

தூய்மையும், சுதந்திரமும் அழியாத் தன்மையும் உடைய ஆத்மாதான் மனிதனுக்கு இருப்பது. துணிவுடன் இருந்து உண்மையை அறிந்து அதன் மயம் ஆவதற்குச் சாதனை செய்தல் வேண்டும். இலட்சியம் என்பது வெகு தூரத்தில் இருக்கலாம். அதை அடையும் வரை அயராது உழைத்திடல் வேண்டும்.

நாம் சர்வ வல்லமையுடையவர்கள் என்று உறுதியாக எண்ணுவோமானால் நம்மை அறியாமலேயே நல்ல பண்புள்ள சக்தி வரும். செய்வது நல்லதாக இருக்கட்டும். ஆனால் அது உணர்வு கலந்ததாக இருக்க வேண்டும்.

உயர்ந்த எண்ணங்களும், உயர்ந்த இலட்சியமும், இரவும் பகலும் உங்கள் முன் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அரிய பெரிய செயல் நிகழும். எண்ணம்

தான் நம்மை இயக்கும் சக்தி. உயர்ந்த எண்ணங்களால் உள்ளம் நிரப்பப் படட்டும். நாள் கணக்காக, மாதக்கணக் காக அவ்வெண்ணத்தால் உள்ளம் நிரப்பப்பட வேண்டும். அப்படி நினைப்பதில் தோல்வி ஏற்படுமாயின் அதைப் பற்றி கவலைப்பட வேண்டாம். தோல்வி வருவது இயல்பு. தோல்வி இல்லாமல் வாழ்வு எப்படி அமையும்? போராட்டம் இல்லாமல் எதையும் பெற முடியாது. போராட்டத்தைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. தவறுகளைப் பற்றியும் கவலைப்படக் கூடாது. நமக்கு உள்ள நல்ல பண்பினால் அவைகளை மாற்றிக் கொள்ளுதல் வேண்டும்.

உள்ளத்தின் உணர்ச்சியே சொல்லாக வரவேண்டும். உள்ள உணர்வே செயலாக வடிவெடுக்க வேண்டும். 'எண்ணித் துணிக கருமம்' என்றார் வள்ளுவர். எண்ணத் திற்குச் சக்தி அதிகம்.

நாம் எண்ணுகின்ற ஒவ்வொன்றும் சில காலத்திற்குப் பிறகு செயலாக வெளிப்பட்டு விளைவை உண்டாக்கு கிறது. அவ்விளைவுதான் வாழ்வு. நம்முடைய நிலைக்கு நாமே பொறுப்பு. நாம் எவ்வாறு இருக்க வேண்டும் என்று விரும்புகிறோமோ அவ்வாறு நம்மை ஆக்கிக் கொள்வதற்கு நம்மிடத்தில் சக்தி இருக்கிறது. பொதுவாக மக்கள் மற்றவர்கள் மீதோ, இறைவன் மீதோ, விதியின் மீதோ பழியைப் போட்டு விடுகிறார்கள். நாம் விதைத்ததை நாம் அறுவடை செய்கிறோம். நம் விதிக்கு நாமே காரணம். அதற்கு யார் மீதும் பழி போட வேண்டிய தில்லை. காற்று இரவும் பகலும் ஓயாது வீசிக் கொண்டு இருக்கிறது. அதை நாம் பயன்படுத்திக் கொள்வதே நல்ல பண்பாகும்.

# 13. ஆத்மசக்தி

ஆத்மசக்தியை வளர்க்க நினைவு, சகிப்புத்தன்மை, விருப்பமின்மை, வெறுப்பு, சினம் ஆகியவற்றைத் தவிர்த்தல், உண்ணாவிரதமிருத்தல், பொறுமை, சினங் காத்தால், தன்னடக்கம், கருணை, சகிக்கும் மனோசக்தி, ஆபத்தை எதிர் நோக்கும் உறுதி, தாக்குதலை எதிர்த்து நிற்கும் சக்தி, தினசரி நாட்குறிப்பு வைத்துக் கொள்ளுதல் ஆகிய இவைகள் எல்லாம் ஆத்ம பலத்தை விருத்தி செய்வதற்குப் பேருதவியாக இருக்கின்றன.

மற்றவர்கள் பேசும்போது அவர்களுடைய பேச்சு சுவையற்றதாகவும், கவர்ச்சியற்றதாகவும் இருந்தாலும் அதனைப் பொறுமையாகக் கேட்க வேண்டும். முகம் சுளிக்கவோ, முணுமுணுக்கவோ கூடாது. பொறுமையாக மற்றவர் சொல்வதைக் கேட்பது ஆத்ம சக்தியை வளர்ப் பதோடு மற்றவர்கள் மனத்தையும் கவர்ந்து விடுகின்றது. மகிழ்ச்சியற்ற காரியங்களையும் செயல்களையும் செய்ய வேண்டும். இதுவும் ஆத்ம சக்தியை விருத்தி செய்கிறது. மகிழ்ச்சி இல்லாத செயல்கள் சில காலம் கழித்து மகிழ்ச்சி கரமானதாக ஆகிவிடும்.

சூழ்நிலைகள் பற்றி ஒருபொழுதும் குறை கூறுதல் கூடாது. எங்கு இருந்தாலும் எங்கு சென்றாலும் மனதிற் குள் ஓர் உலகத்தை உருவாக்கிக் கொள்ள வேண்டும். எங்கு சென்றாலும் சில கட்ட நட்டங்கள் இருக்கத்தான் செய்யும். ஒவ்வொரு படியிலும் ஒவ்வொரு வினாடியும் மனம் நம்மை ஏமாற்றி மயக்கும் பொழுது தடைகளை யும் கட்டங்களையும் தகுந்த முறைகளின் மூலம் தாண்டிச் செல்ல முயல வேண்டும்.

சாதகமற்ற கெட்ட சூழ்நிலையிலிருந்து ஓட முயற்சிக்கக் கூடாது. விரைவில் வளர்ந்து பக்குவமடைய வேண்டுமென்பதற்காக இறைவன் படைப்பு அமைந்து உள்ளது. நமக்கு வேண்டிய எல்லா வசதிகளும் நாம் இருக்குமிடத்தில் இருந்துவிட்டால் நம்மால் திடமாக வளர்ச்சி அடைய முடியாது.

ஓர் இடத்திற்கு செல்லும்போது அங்கு நமக்குத் தேவையான வசதிகள் இல்லையே என கவலையுறுவதோ அதே எண்ணத்தில் இருந்துகொண்டு இருப்பதோ நல்ல தல்ல. சுற்றுப்புறச் சூழ்நிலைகளைப் பற்றி எப்போதும் குறைபட்டுக் கொள்ள வேண்டாம். நாம் நமக்கென்று சொந்த உலகத்தை உருவாக்கிக் கொள்ளுதல் வேண்டும். இந்த உலகத்தில் உள்ள எந்த இடத்துக்குச் சென்றாலும் ஏதேனும் ஒரு தொல்லை இருக்கத்தான் செய்யும். சில இடங்களில் அனல்காற்று, சில இடங்களில் குளிர்காற்று. இது இரண்டும் இல்லாது மிதமான சூழ்நிலை இருப்பின் வேறு விதமான நோய்த் தொல்லை. அதுவும் இல்லை எனில் பூச்சிகள் தொல்லை. இப்படி ஏதேனும் ஒரு குறைபாடு இருக்கத்தான் செய்யும்.

பனி, மழை, கடும்குளிர், சூறைக்காற்று, அனல்கக்கும் வெய்யில் இப்படி இயற்கையின் நிலைகளை எல்லாம் மனிதன் தன் வாழ்க்கைக்கு ஏற்றபடி மாற்றி அமைத்துக் கொண்டு வாழ்வதோடு மனோ நிலையையும் சீராக வைத்துக் கொள்ள பழகினால் ஆத்மசக்தி நிச்சயம் பெருகும்.

# 14. பொறுமையும் விடாமுயற்சியும்

பொறுமையும் விடா முயற்சியும் மனிதனுக்குத் தேவையான நற்பண்புகள். இந்தப் பண்புகளின்றி நடைமுறை வாழ்விலாகட்டும், அல்லது ஆன்மீக வாழ்விலாகட்டும் வெற்றி பெற இயலாது. இந்தப் பண்புகள் உள்ளத்தில் உறுதியை வளர்க்கின்றன. ஒவ்வொரு படியிலும் இன்னல்கள் வந்தே தீரும். அவற்றை பொறுமை, விடாமுயற்சி ஆகியவற்றின் மூலமாகவே கடக்க வேண்டும். உலக மேதைகள் அனைவருமே பெருமையையும், புகழையும், வெற்றியையும்—பொறுமை, விடாமுயற்சி ஆகியவற்றின் மூலமாகவே அடைந்திருக்கிறனர். எனவே அனைவருமே இந்தப் பண்புகளை விருத்தி செய்தல் வேண்டும்.

பொறுமைசாலி எப்பொழுதும் தனது மனதைக் குளிர்ந்த நிலையில் வைத்துக் கொண்டிருக்கிறான். அவன் எப்போதும் சீரான மனோபாவத்துடன் இருக்கிறான். தோல்விகளைப் பற்றியும், துன்பங்களைப் பற்றியும் அவன் அஞ்சுவது கிடையாது. அவன் தன்னைப் பலப் படுத்திக்கொள்ள வழிமுறைகளைக் கண்டு கொள்கிறான். மனப்பக்குவத்தைப் பயின்று வருவதற்கு மிகுந்த பொறுமை வேண்டும். ஏதேனும் இன்னல் வருமாயின் பலர் தனது துணிவை இழந்து தான் எடுத்த வேலையைப் பயனற்றது என்று விட்டுவிடுகின்றனர், இது தவறு. ஏதேனும் இடையூறுகள் வந்தாலும் சாதகர்கள் தங்கள் சாதனையை விட்டுவிடக் கூடாது.

எறும்புகள் சர்க்கரை, அரிசித் துணுக்குகளை சேகரித்துத் தங்கள் இருப்பிடத்தில் சேமித்து வைக்கின்றன.

அவைகள் எவ்வளவு பொறுமையுடனும் விடாமுயற்சி யுடனும் இருக்கின்றன என்பதை உணரவேண்டும். "ஓ! மந்த மதி படைத்தவனே! எறும்பைப் போய் பார்த்து அதைப் போல் நடந்து புத்திசாலியாகு" என்று பைபிளில் கூறியுள்ளதை உணரவேண்டும்.

தேனீக்கள் பொறுமையாக பூவுக்கொரு சொட்டுத் தேனாகச் சேர்த்து அத்தேனைத் தேன் கூட்டில் சேமித்து வைக்கின்றன. அவைகளின் பொறுமையும் விடா முயற்சி யும் மிகச் சிறப்பானது. பொறுமையும் விடா முயற்சியும் இருந்தால்தான் பெரிய பெரிய அணைகளும் பாலங்களும் கட்ட முடியும். ஆறுகளுக்கும், கடல்களுக்கும் குறுக்கே கட்டுவதற்கு பொறியாளர்கள் எவ்வளவு பொறுமையை யும் விடாமுயற்சியையும், கடைபிடிக்கவேண்டும். இந்த உலகில் பலவற்றை கண்டுபிடித்துச் சொன்ன விஞ்ஞானி களுக்கு எவ்வளவு பொறுமையும் விடா முயற்சியும் இருந்திருக்க வேண்டும்.

பொறுமைசாலி ஒரு சிறிதும் கோபமடைய மாட்டான். கோபத்தை வெல்ல பொறுமை ஒரு மனிதனுக்கு உதவியாக இருக்கிறது. பொறுமை அளவு கடந்த பலத்தைக் கொடுக்கிறது. எனவே வழக்கமாகச் செய்யும் அன்றாட அலுவல்கள் அனைத்தையும் பொறுமையுடன் செய்தல் வேண்டும். நற்பண்புகளுடன் பொறுமையும் கலந்து விடுமாயின் அவனை யாராலும் வெல்ல முடியாது.

மனிதனுக்கு மெல்ல மெல்ல ஆனால் உறுதியாக பொறுமையும், விடாமுயற்சியும் கலந்து நல்ல பண்புடன் கூடிய பழக்க வழக்கங்கள் வந்து விடுமாயின் அவனுக்கு எதுவுமே எளிதாகத் தெரியும். எப்படிப்பட்ட இன்னலும் பெரிதாகத் தெரியாது. உள்ளத்திலேயே குமுறுவது, முணுமுணுப்பது எப்போதும் கூடாது. பொறுமையின் பலன்களை எண்ணி தொடர்ந்து வளர்த்துக் கொண்டு வாழ்வோமானால் இறுதியில் வெற்றி நமதாகவே இருக்கும்.

# 15. எண்ணம்

'எண்ணம் சரியாக இருந்தால் எல்லாமே நடை பெறும்' என்பது வழக்கமாகப் பலர் சொல்வதைக் கேட்டு உள்ளோம். அதில் உண்மை உள்ளது. எண்ணம் என்பது ஒரு கல்வி, கலை. படித்தவர்களின் எண்ணம் கூட ஒழுங் கானதாக இருக்கும் என்று சொல்ல முடியாது. அனை வருக்குமே உள்ளத்தில் பலவித சில்லரையெண்ணங்கள் வருவதும் போவதுமாக இருக்கின்றன. அதில் ஒரு ஒழுங்குபாடோ, விவேகமோ இருப்பதில்லை. அதில் இசைவோ, முறையோ இருப்பதில்லை. எல்லாம் ஒழுங் கற்ற முறையிலும் குழப்பமான நிலையிலும் காணப்படு கின்றன. கருத்துக்களில் தெளிவு கிடையாது. ஒரு குறிப் பிட்ட நிலையைப் பற்றி ஒழுங்கான சிரமமான முறையில் இரண்டு வினாடி கூட நினைக்க முடிவதில்லை. எண்ணம் வேறாகவே மனத்தின் உள்ளே நடமாடிக் கொண்டிருக் கும். உள்ளத்திற்கும் எண்ணத்திற்கும் எப்போதும் போராட்டம் நடைபெறும்.

கண் தன்னைக் கவர்ந்தவற்றிற்காக ஏங்குகிறது. காது எதை எதையோ கேட்கத் துடிக்கிறது. எண்ணம் இவை களைத் தடுத்து நிறுத்துகிறது. ஆனால் பெரும்பான்மை யான மக்களிடத்தில் கீழ்த்தரமான எண்ணங்கள், வெறுப்பு, பொறாமை, பயம் ஆகியவை கலந்த எண்ணங் கள் தான் காணப்படுகின்றன. அவர்களால் ஒரு வினாடி நேரம் கூட ஒரு உயர்ந்த தெய்வீக எண்ணத்தைக் கூட எண்ண முடியாது. அவர்களுடைய மனோபலமானது புலன் வழிபள்ளத்திலேயே ஓடிக் கொண்டிருக்கும்.

ஒவ்வொரு மனிதனுக்கும் அவனவன் மனத்தளவில் எண்ணுகின்ற முறையும், நிலைகளைப் புரிந்து கொள்ளுகின்ற முறையும், நடந்து கொள்ளுகின்ற முறையும் உண்டு. ஒவ்வொருவருடைய முகமும் குரலும் மற்றவருடையதற்கு வேறுபட்டிருப்பதைப் போல் அவரவர் எண்ணுகின்ற முறையும், புரிந்து கொள்ளும் தன்மையும் வேறுபடுகின்றன. நண்பர்களிடத்தில் மிக எளிதில் கருத்து வேறுபாடு ஏற்படுவதற்கு இதுவே காரணம். நெருங்கிய நண்பர்களுக்கிடையே கூட வினாடி நேரத்தில் சண்டையும், சச்சரவும் மோதலும் ஏற்பட்டு விடுகிறது. நட்பு நீடித்து நிற்பதில்லை.

ஒருவர் மற்றொருவருடைய மன அலைகளோடும் எண்ண அலைகளோடும் இயைந்து இருக்க வேண்டும். அப்போதுதான் ஒருவர் மற்றவரை எளிதில் புரிந்து கொள்ள முடியும். காம விகாரமான எண்ணங்கள், வெறுப்பு, சுயநலம் ஆகியவைகளோடு கூடிய எண்ணங்கள் மனத்திரையில் கோணல் மாணலான உருவங்களை உண்டாக்கி, புரிந்து கொள்ளும் திறமையை மறைத்து, அறிவை மழுங்க வைத்து, ஞாபக சக்தியை இழக்கச் செய்து மனக்குழப்பத்தை ஏற்படுத்துகிறது.

ஒவ்வொரு எண்ணத்திற்கும் வடிவம், உருவம், பருமன், எடை, தோற்றம், நிறம் ஆகியவை உண்டு. எண்ணம் நகர்ந்து ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் செல்கிறது. எண்ணம் மக்களைக் கவருகிறது. சக்தி மிக்கவன் எண்ணம் சக்தி குறைவானவனை விரைவில் கவர்ந்து விடும்.

நற்காரியங்களைச் செய்தல், நல்ல நூல்களைப் படித்தல், நல்லவர்களோடு பழகுதல் போன்றவற்றிலேயே மனத்தை எப்பொழுதும் ஈடுபடுத்தி வைத்திருந்தால் அதன் மூலம் நல்ல உயர்ந்த எண்ணங்களை விருத்தி

செய்ய முடியும். தொடர்ச்சியற்ற எண்ணத்தை அழித்து விடல் வேண்டும்.

ஒரு பொருளைப் பற்றி எடுத்துக் கொள்ளுங்கள். அதனுடைய பல்வேறு நிலைகளைப் பற்றியும் அதன் தன்மைகளைப் பற்றியும் அலசி ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். இம்மாதிரி ஒரு பொருளைப் பற்றி எண்ணிக் கொண்டிருக்கும் போது அடிமனதில் வேறு எண்ணங்கள் புகுதற்கு இடம் தருதல் கூடாது. மனத்தை முறையாக எண்ணுகின்ற பழக்கத்திற்கு பழக்கி விட வேண்டும்.

மன உருவங்கள் ஆழ்ந்த பலத்தையும் சக்தியையும் பெறும். அவைகள் தெளிவும் நல்ல வரையறுப்பும் பெறுகின்றன. சாதாரண மக்களிடத்தில் மனோ உருவங்கள் அழிக்கப்பட்டு தெளிவற்றவைகளாகவே இருக்கின்றன. எண்ணங்கள் எப்போதும் உயர்ந்ததாக இருக்க வேண்டும். எதைப்பற்றி எண்ணுகிறோமோ அதைப் பற்றியே முழுமையாக எண்ண வேண்டும். தேவையற்ற நேரங்களில் தேவையற்றதை எண்ணிக் கொண்டு இருப்பது வீணாகும்.

நெப்போலியன் தன் இனிய எண்ணங்களைக் கட்டுப் படுத்தினான். "இனிய விஷயங்களைப் பற்றி நான் நினைக்க விரும்பும் போது வாழ்க்கையில் விரும்பத் தகாத விஷயங்களடங்கிய பெட்டியை மூடிவிட்டு இனிய எண்ணங்களடங்கிய பெட்டியைத் திறப்பேன். நான் உறங்க வேண்டுமென்று விரும்பினால் என்னுடைய மனத்திலுள்ள எல்லா பெட்டிகளையும் மூடி விடுவேன்!" என்று சொன்னான்.

எண்ணம் என்பது சக்தியும் அசைவும் இரண்டும் சேர்ந்தது. எண்ணம் சக்தி மிக்கது. எண்ணங்களில் பல வகை இருக்கின்றன. கண்ணுக்குப் புலனாகும் எண்ணங்கள், செவிப்புலனுக்குரிய எண்ணங்கள், உணர்ச்சி வயப் பட்ட எண்ணங்கள் இப்படிப் பலவகை. மனம் சோர்

வுடன் இருக்கும் பொழுது எண்ணத்திலும் சோர்வு ஏற்படுகிறது. மனதில் வீரம் உள்ள போது எண்ணமும் வீரமாக செயல்படுகிறது. இப்படி மனமாற்றங்களோடு எண்ணங்களும் மாறிக் கொண்டே வருகிறது. அதனால் தான் எப்போதும் மனத்தில் நல்ல, உயர்வான, நன்றி கலந்த, கருணைமிக்க உயர் பண்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

ஒரு பெரிய மலையின் உருவம் மனத்திரையில் விழுகிறது. அவ்வளவு பெரிய உருவம் கண்ணிலுள்ள இவ்வளவு சிறிய துவாரத்திற்குள் எப்படி நுழைகிறது. இது ஒரு அற்புதத்திலும் அற்புதம். மலையுடைய உருவம் ஏற்கனவே மனத்தில் இருக்கிறது. மனமானது பரந்த திரைத் துணி போன்றது. அதில் புறத்தே காணப்படும் பொருள்கள் அத்தனைப் படங்களும் அடங்கி விடுகின்றன. மீண்டும் அதனை எண்ணும் போது அழகான படம் போல் மனதிற்கு அது தெரிகிறது.

எனவே எண்ணம் சுத்தமாக இருத்தல் வேண்டும். அதனால் மனம் சீர்படும். மனம் சீராக இருப்பின் உள்ளத்தில் எந்தவிதக் குழப்பங்களும் வருவதில்லை. குழப்பம் அற்ற வாழ்க்கையில் எப்போதும் மகிழ்ச்சி குடியிருக்கும். மகிழ்ச்சியினை நீடித்துக் கொள்ளவும் எண்ணத்தில் உறுதி வேண்டும்.

# 16. நேர்மை

நேர்மையுடைய மனிதன் தனது வேலையில் வெற்றி பெறுகிறான். மேலை நாட்டில் நேர்மை ஒரு மிகச் சிறந்த 'கொள்கை'யாக இருக்கிறது. ஆனால் கீழை நாட்டில் இது ஒரு புனிதமான பண்பாகக் கருதப்படுகிறது.. இந்த நற்பண்பினைப் பெற்றிருப்பவன் இவ்வுலகின் எப் பகுதியிலும் ஊடுருவிச் செல்ல முடியும். மனப்பூர்வமும் நேர்மையும் கூடிய மக்கள் மிகவும் அரிதாகவே காணப் படுகின்றனர்.

மனப்பூர்வமான மனிதன், மற்றவர்களுடைய துன்பங் களையும், தொல்லைகளையும் கண்டு அனுதாபப்பட்டு அவற்றைக் குறைக்கத் தன்னாலியன்ற வரை முயற்சிக் கின்றான். அவன் மிகவும் இரக்கமுடையவனாகவே இருப்பான். அவனுடைய மனம் மிகவும் மிருதுவாகவே இருக்கும். ஒரு மனப்பூர்வமான மனிதன் பெருந்தன்மை யுடையவனாக இருக்கின்றான். அவன் குறுகிய மனப் பான்மை, ஏமாற்றுதல், தந்திரம், இரட்டை வேடம் ஆகியவற்றிலிருந்து முற்றிலும் விடுபட்டு இருப்பான். மனப்பூர்வ நேர்மையுள்ள மனிதன் எப்பொழுதும் நம்பிக்கைக்குப் பாத்திரமாகவே இருப்பான். அவன் முற்றிலும் அகந்தையற்றவனாகவே வாழ்வான். அவனிடம் முற்றிலும் வெளிவேடம் காண முடியாது. அவன் எப்போதும் திறந்த உள்ளமும், நேர்மையும், சத்தியமும் கொண்டவனாகவே வாழ்வான். அவன் எங்கு— எப்படிப்பட்ட வேலையில் இருந்தாலும்— எந்தத் தொழில் செய்தாலும் அங்கே அவனே உயர்வான வனாகவே இருப்பான்.

நேர்மையுள்ளவன் அடுத்தவர்கள் எல்லாருமே நலமுடன் இருக்கத் துணையாக இருப்பார்ன்.

ஆன்மீக மார்க்கத்தில் மனப்பூர்வமான நேர்மை மிக முக்கியமான தகுதியாகும். மனதை பண்புள்ளதாக மாற்றி தீய வழிகளில் தன் எண்ணத்தைத் திருப்பாது உயர்ந்த குறிக்கோள்கள், கருணை மிக்கத் தொண்டுள்ளம் போன்றவற்றை வலியுறுத்தும் ஆன்றோர்களும்— சான்றோர்களும் நிச்சயம் நேர்மையானவர்களாக இருத்தல் வேண்டும். அப்படிப்பட்ட தகுதியற்றவர்கள் எப்படி ஆன்றோர்களாகவும் சான்றோர்களாகவும் இருக்க முடியும்? நேர்மையுடையவர்களே ஆன்மீகத்தைப் பற்றியும்— இறைவனைப் பற்றியும் பேசத் தகுதி படைத்தவர்களாவர்.

நேர்மையுள்ளத்தை சிறிது சிறிதாகக் கற்றுத்தேறி வர வேண்டும். நாம் இன்று இன்ன காரியத்தில் மிகவும் நேர்மையாக நடந்து கொண்டோம் என்று எண்ணி மகிழ்ந்திட வேண்டும். அப்படியே அந்த குணத்தை மேலும் மேலும் வளர்த்துக் கொண்டால் அது எந்த நேரத்திலும் மாறாத உறுதியான குணமாக நம்மோடு இருந்து விடும்.

நேர்மை என்பது இறை குணத்துக்கு ஒப்பானது. இறைவனை நாம் தொழும்போது 'இறைவா! நியாயமான எனது கோரிக்கையினை ஏற்று எனக்கு அருள் புரிவாய்' என வணங்குகின்றோம். நியாயமான கோரிக்கையினை அருள் புரிய இறைவனை நாம் நேர்மையானவன் என்றுதானே நம்புகின்றோம். எனவே அந்த குணம் மனிதனுக்கு இருக்குமானால் அவன் இறைவனுக்கு ஒப்பாகின்றான்.

நேர்மையானவனுக்கு பக்தி கூட இருக்கும். நல்ல சக்தியும் பக்தியும் கலந்தாலேயன்றி நேர்மை என்பது எல்லோருடைய வாழ்க்கையிலும் வருதல் இயலாது. தன்னிலை எதுவானாலும் நேர்மையோடு இருக்கப் பழகுவதே நலம்.

# 17. இணக்கம்

இணக்கம் என்பது ஒரு நல்ல பண்பாகும். அதனால் ஒருவன் மற்றவர்களோடு அவர்கள் குணம் எப்படி இருப்பினும் தன்னை இணக்கி அல்லது பொருத்திக்கொள்கிறான். இணக்கமுடையவன் மற்றவர்கள் மன நிலை எப்படியிருப்பினும் தன்னை அவர்களுக்கேற்ப பொருத்திக் கொள்கிறான். வாழ்க்கையில் வெற்றி பெற இந்தக் குணம் பெரிதும் விரும்பப்படுகிறது. இதை மெல்ல மெல்ல விருத்தி செய்து கொண்டு வர வேண்டும். பெரும் பான்மையானோர்க்கு மற்றவரோடு தங்களை இணக்கிக் கொண்டு இருக்கத் தெரிவதில்லை. மற்றவர் மனத்தைக் கவர இணக்கம் என்கிற பண்பு ஒரு நல்ல சாதனமாகிறது. இணக்கத்தின் மூலம் வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி பெறலாம்.

கணவனோடு எப்படி இணங்கி இருப்பது என்பது மனைவிக்குத் தெரிவதில்லை. எப்பொழுதும் கணவனுக்கு வெறுப்பூட்டிக் கொண்டு வீட்டில் சச்சரவுகளுக்கு இடம் கொடுத்து பிறகு பிரிந்து வாழும் சூழ்நிலைக்கு ஆளாகி விடுகின்றனர். மனைவியோடு இணங்கி எப்படி வாழ்வது என்பது கணவனுக்குத் தெரிவதில்லை. அலுவலகத்தில் பணியாற்றுவோர் தனது மேலதிகாரியோடு எப்படி நடந்து கொள்வது எனத் தெரியாமல் எதிர்த்துப் பேசுவதும், மேலதிகாரியென்றாலே தீயவர்கள் என்றும் கருதி சண்டை செய்துகொண்டு வேலையிலிருந்து நீக்கப் படுகிறார்கள். சீடனுக்கு குருவோடு இணங்கி இருக்கத் தெரிவதில்லை. அவன் நெறி தவறி நடந்து குருவை

விட்டுப் பிரிந்து விடுகிறான். அதுமட்டுமல்ல, அவனே குருவாக வேண்டும் என்று எண்ணிக் கொள்கிறான். குருவிடம் தனக்கு இணக்கம் இல்லாமை தான் இதற்குக் காரணம்.

வியாபாரிகளுக்கு வாடிக்கையாளரிடம் இணங்கி யிருக்கத் தெரிதல் வேண்டும். அப்படித் தெரியவில்லை யென்றால் வாடிக்கையாளர்களை இழக்க நேரிடும். இந்த உலகம் இணக்கத்தின் மூலம் இயங்கி வருகிறது. இணக்கக் கலை அறிந்தவன் இந்த உலகில் நல்ல முறையில் வாழ்கின்றான். அவன் வாழ்வில் எந்த சூழ்நிலையிலும் மகிழ்ச்சியாக இருக்க முடியும்.

மனிதன் எப்போதும் தன்னை இணக்கிக் கொள்ள வேண்டும். இணக்கம் என்றால் விட்டுக் கொடுக்கும் தன்மை— எதையும் பொருட்படுத்தாமை, சகிப்புத் தன்மை. நாம் யாருடன் பழகினாலும், எங்கே வேலை செய்தாலும் அந்த இடத்திற்கு ஏற்றார் போல் தன்னை இணக்கிக் கொள்ள தெரிந்திருக்க வேண்டும். நீங்கள் பழகும் விதம்— பேசும் விதம் இவைகளினாலேயே மற்றவர் உள்ளத்தில் இடம் பிடிக்க முடியும். பணிவும், கீழ்படியும் தன்மையும் கூட இணக்கத்திற்குத் தேவை.

இணக்கத்திற்குத் தடைகள் அகந்தையும்— கர்வமும் ஆகும். இந்த இரண்டும் வாழ்வில் முன்னேற தடைகளாக இருப்பவைகளாகும். நட்பு முறிந்து விடுவதற்கும் இந்த இரண்டு குணங்களும் காரணமாக இருக்கின்றன. இணக்கமுடைய மனிதன் யாரிடமும் நட்பு கொள்ள முடியும். அதுமட்டுமல்ல அந்த நட்பை நீடித்து வளர்க்க வும் முடியும்.

இணக்கம் அளவற்ற பலத்தையும் எல்லையில்லா மகிழ்ச்சியினையும் கொடுக்கிறது. இணக்கம் இச்சா சக்தியை வளர்க்கிறது.

இணக்கமுடையவன் தியாகம் செய்ய வேண்டி வரும். இணக்கம் தியாக மனப்பான்மையை விருத்தி செய்கிறது. இது சுயநலத்தை ஒழிக்கின்றது. இணக்கமுள்ளவன் தன்னிடமுள்ளதை மற்றவர்களோடு பங்கிட்டுக் கொள்ள வேண்டி இருக்கிறது. அவன் அவமானத்தையும் கடுஞ் சொற்களையும் சகித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இணக்கமுடையவன் வாழ்வில் ஒருமைப்பாட்டுணர்வை விருத்தி செய்கிறான். வேதாந்த சாதனைக்கு இந்தப் பண்பு ஒப்பற்ற உதவி புரிகிறது. இணக்கத்தைப் பயின்று வருபவன் வெறுப்புணர்ச்சியினையும், உயர்ந்தவன் என்கின்ற மனப்பான்மையையும் ஒழித்து விட வேண்டும். அவன் எல்லோரிடமும் கலந்து பழக வேண்டும். அவன் எல்லோரையும் சரிசமமாக எண்ண வேண்டும். சம்ரச அன்பை வளர்த்துக் கொள்ள வேண்டும். இன்னார் இனியார் என்ற பாகுபாடு கூடாது.

இணக்கமுடையவன் தனது நண்பர்கள் கூறும் சுடு சொற்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். பொறுமை, சகிப்புத்தன்மை ஆகிய பண்புகளை வளர்த்து வர வேண்டும். இணக்கமுடையவன் எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் இருக்க முடியும். குளிர்ச்சியான இடமானாலும், வெப்பம் சூழ்ந்த இடமானாலும், குடிசையானாலும், பெரிய பங்களாவானாலும் வசிக்க முடியும்.

இணக்கம் நாளடைவில் ஆத்ம ஞானத்தைக் கொடுக்கும். இந்தப் பண்பு பெற்றிருப்பவன் மற்ற நற்பண்புகள் பெறுவதற்கு எந்தவித இடையூறும் இருக்காது. எப்போதும், யாருடனும், எந்த நேரத்திலும், எந்த இடத்திலும் இணக்கமாக இருக்க, பழகக் கற்றுக் கொள்ளுவது நல்லது.

உள்ளத்தூய்மையும், உறுதியான கொள்கையும், இணக்கமான குணமும் இருந்துவிட்டால் உலகில் சாதிக்க முடியாதது என்று ஒன்றுமில்லை.

# 18. மன நிறைவு

மன நிறைவு என்பதைத்தான் திருப்தி என்று சொல்லிக் கொண்டு இருக்கிறோம். "போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து" என்கின்ற முதுமொழி வழக்கத்தில் இருப்பது அனைவருமே அறிந்தது. மனித னுக்கு முதலில் தன் மனதில் ஆசை எழுகிறது. அதுவே பேராசையாக மாறிவிடுகிறது. இதன் காரணமாக மனம் எப்போதும் ஓய்வற்றிருக்கிறது. பேராசை என்பது ஒரு அகக் கனல். அது மனிதனை மெதுவாகச் சுட்டெரிக்கிறது. பேராசையை அடக்க வேண்டுமாயின் திருப்தி உள்ளத்தில் குடி கொண்டாலொழிய அடக்க முடியாது.

திருப்தியை விடப் பெரிய இலாபம் வேறு எதுவும் கிடையாது. இந்த முக்கியமான பண்பைப் பெற்றிருப் பவன் உலகில் மிகப் பெரிய செல்வந்தன் ஆவான். அவன் அனுபவிக்கும் சாந்தியையும் அதனால் அவனுக்கு ஏற்படும் சக்தியையும் எழுத இயலாது.

தாயுமான சுவாமிகள் மன நிறைவு பற்றி கூறியது, "குபேரனுக்குச் சமமானவனும், சிந்தாமணி, காமதேனு, கற்பதரு ஆகியவற்றைப் பெற்றிருப்பவனும், இவ்வுலகி லேயே பெரும் செல்வந்தனாக இருப்பவனுமாகிய ஒருவன் கூட, கடல் கடந்து தனக்கு ஒரு சாம்ராஜ்யம் வேண்டு மென்று விழைகிறான். நூற்றைம்பது ஆண்டுகள் வாழ்ந்து கொண்டிருக்கின்ற ஒருவன் மேற்கொண்டும் தனது ஆயுளை நீடிக்க ரசாயனங்களும், காயகல்பங்களையும் சாப்பிடுகின்றான். ஒரு நூறு கோடி ரூபாய் வைத்திருப் பவன் அதை இரு நூறு கோடியாக்க அரும்பாடு

படுகின்றான். மனம் ஒரு பொருளைப் பற்றி அடுத்த கணத்தில் அதை விட்டுவிட்டு மற்றொன்றிற்குத் தாவப் பார்க்கின்றது.

மனிதன் ஓய்வின்றி இவ்வுலகில் அலைந்துகொண்டு 'இது என்னுடையது; அது என்னுடையது; நான் அதையும் பெற முயற்சிப்பேன்' என்றெல்லாம் கூறுகின்றான். அமைதியற்ற மனமே! என்னை இந்த தூய்மையற்ற ஆசைகளுக்கும் புலன்வழிப் பொருள்களுக்கும் இழுத்துச் செல்லாதே. உன் போக்கை எல்லாம் நான் நன்கு அறிந்திருக்கிறேன் "ஓ! பரம்பொருளே! எனக்கு ஆசையற்ற தூய மனதைக் கொடு. என்னுடைய மனம் சத்தியத்தில் எப்பொழுதும் நிலைத்து நிற்கட்டும். நான் மனமற்று இருப்பேனாக. ஓ! பரிபூரணானந்தமே, ஓ! பிரகாசம் பொருந்திய ஆனந்தமே! இந்த நாம ரூபங்கள் அனைத்திலும் ஊடுருவி நிற்கும் ஆனந்தமே, நான் சச்சிதானந்த சொரூபத்தில் நிலைத்திருப்பேனாக!" என்று ஆசையை ஒழித்து தான் எண்ணுகிற எண்ணத்தை இறைவனிடம் கூறி வேண்டுகிறார் தாயுமானவர்.

"தானாக உங்களுக்குக் கிடைப்பதைக் கொண்டு மன நிறைவடைந்து வைராக்கிய மனத்துடன் தியானத்தில் ஈடுபடுக" என்று கீதை கூறுகிறது.

மன நிறைவு என்கிற பண்பின் மூலம் மனதிற்கு அமைதி கிடைக்கிறது என்று மக்கள் அறிந்திருந்தும் இப்பண்பை விருத்தி செய்து கொள்ள அவர்கள் முயலுவதில்லை. ஏன் என்றால், மனிதனுக்குக் காமம், பேராசை ஆகியவை காரணமாக அவர்கள் விவேக சக்தியையும், ஆத்மா விசார சக்தியையும் இழந்து விட்டனர். காமத்திற்கு தலைவனாக இருப்பது பேராசை. எங்கெல்லாம் பேராசை இருக்கிறதோ அங்கெல்லாம் காமமும் குடிகொண்டிருக்கும்.

காமத்தினாலும் பேராசையினாலும் அறிவு மங்கி விடுகிறது. புத்தி கோணலாகி விடுகிறது; ஞாபக சக்தி

குழம்பி விடுகிறது. ஆகவே மக்கள் மன நிறைவான இப் பண்பை விருத்தி செய்து கொள்ள முடியாமல் அவதியுறு கின்றனர்.

ஒருவன் சென்று சுவாமி சிவானந்தரிடம் கேட்டார் : 'சுவாமி நீங்கள் சொல்வது முற்றிலும் சரிதான். திருப்தி யினால் சாந்தி கிடைக்கிறது என்பதை நான் நன்கு உணர் கிறேன். ஆனால் எனக்கு ஒரு சந்தேகம். நான் திருப்தி பெற்றுவிட்டால் என்னுடைய ஆசைகள் எல்லாம் இறந்து விடுகின்றன. நான் மந்தமடைந்து சோம்பேறியாகி விடுகிறேன். பல்வேறு ஆசைகளின் காரணமாக நான் அங்குமிங்கும் ஓடியாடி முயற்சி செய்து சக்தியுடையவ னாக இருக்கிறேன். என்னுடைய இந்த சந்தேகத்தை அருள் கூர்ந்து நீக்க வேண்டும்.'

அதற்கு சுவாமி சிவானந்தர் கூறியதாவது :

''திருப்தி ஒருபொழுதும் உங்களை சோம்பேறி யாக்காது. இது ஒரு சத்துவ குணம். இது உங்களை இறைவனை நோக்கி அழைத்துச் செல்லுகிறது. இது மன பலத்தையும் அமைதியையும் கொடுக்கிறது. இது தேவை யற்ற சுயநல முயற்சிகளைக் கட்டுப்படுத்துகிறது. இது மனிதனுடைய அகக்கண்ணைத் திறந்து மனத்தைத் தெய்வ சிந்தனையில் ஈடுபடச் செய்கிறது. மனிதனை சுய முயற்சி யில் ஈடுபடப் பலவந்தப்படுத்தும். ஆன்மீக வழியில் செல்வதற்கும் ஒரு சாதகனுக்கு பலத்தைக் கொடுப்பது இந்தத் திருப்தியேயாகும்'' என்று சொன்னார்.

மனிதனுக்கு எதிலும் ஓர் மனநிறைவு ஏற்படுவதால் வீணான கடன் ஏற்பட வழியில்லை. கடன் தொல்லை யைக் காட்டிலும் மிகப் பெரிய தொல்லை வேறொன்று மில்லை. கம்பன் தான் எழுதிய இராமாயணத்தில் இராவணன் இறுதிக் கட்டத்தில் மிகவும் இன்னலுற்று இருந்தான். அந்த நேரத்தில் அவனுடைய உள்ளம் எப்படியிருந்தது என்பதை விளக்க ; ''கடன் பட்டார்

நெஞ்சம் போல் கலங்கினான் இலங்கை வேந்தன்" என்று எழுதினார். இருக்கின்ற இன்னல்களிலேயே 'கடன்' மிகப் பெரியது என்பதை நாம் உணர்கிறோம். எல்லாக் கலைகளையும் கற்ற இராவணன், எல்லா சக்திகளும் கொண்ட இராவணன் தனக்கென ஒரு அரசு, ஒரு நாடு, வீரர்கள், சூரர்கள் இப்படி வாழ்ந்த போதும் உள்ளத்தில் மன நிறைவு மட்டும் இல்லாது பேராசைக் கொண்டதால் ஏற்பட்டது இன்னல் !

எனவே தனக்கு வரும் வருவாய், அதற்குரிய செலவு, அதற்கேற்ற வாழ்க்கை இப்படி சுருக்கிக் கொண்டு உள்ளத்தை மனநிறைவில் பெருக்கிக் கொள்ள வேண்டும்.

போலி வாழ்வை அறவே மறந்துவிட வேண்டும். அவர் அப்படி இருக்கிறார்— இவர் இப்படி இருக்கிறார் என்று கனவு காண்பது கூடாது. யார் எப்படி இருந்தால் நமக்கு என்ன? நாம் நமது வாழ்வை சிக்கனமாக, சிறப்பாக, சீராக, யாருக்கும் கடன் படாது, வறட்டு கௌரவம் பாராது, மகிழ்ச்சியாக வாழ்வதற்கே முயல வேண்டும். எப்போதும் எதிலும் மன நிறைவு மனப் பான்மையை வளர்த்துக் கொண்டால் உள்ளத்தில் குறைபாடு என்பதற்கு வழியே இருக்காது.

# 19. முன்னேறும் தன்மை

முன்னேற்ற குணத்தை பீரிடும் குணம் என்று அழைப்பதுண்டு. இது வெட்கத்திற்கு எதிரானது. இக் குணமுடையோர் ஆக்கிரமிப்பாளனாக இருப்பார்கள். இவர்கள் காற்றைப் போல் எல்லா இடங்களிலும் ஊடுருவிச் செல்ல முயற்சிப்பார்கள். சில பேரை நாம் சந்திக்கும்போது நமக்கே ஆச்சரியமாக இருக்கும். ஏன் என்றால் அவர்கள் டாக்டர்களாகவும்— வக்கீல்களாகவும் இருந்தும் தனது தொழிலை சரிவர செய்யாது— செய்ய இயலாது பட்டினி கிடக்கும் சூழ்நிலையைக் கூட சந்திப்பார்கள். இதற்கு முழுமுதற் காரணம் முன்னேற்ற குணம் அவர்களிடம் இல்லாமையே. அவர்களால் மற்றவர் களை வசீகரிக்க முடியாது.

முன்னேற்ற குணம் படைத்தவர்கள் இனிமையாகப் பேசுவார்கள். மிகவும் துணிவுடையவர்களாக இருப்பார் கள். பீரிடும் பண்புடையவர்சன் மிகவும் சுறுசுறுப்பாக இருப்பார்கள். மற்றவர்களை எவ்வாறு மகிழ்வித்து அவர்கள் உள்ளத்தைக் கவர்வது என்பதை நன்கு அறிந் திருப்பார்கள். மக்களுக்கு எப்படிச் சேவை செய்வது என்பதை நன்றாக அறிந்திருப்பதும் அவசியம். தனக்கென ஓர் வேலையை தானே உருவாக்கிக் கொள்ளவும் வேண்டும். அதனால் சோம்பேறித்தனமாக இருக்க முடியாது. எப்போதும் சிந்தனையும் சிந்தனையை செயல் வடிவமாக்கும் திட்டமும் தீட்டிக் கொண்டு இருத்தல் வேண்டும். பல்வேறு குணம் உடையவர்களிடத் திலும் தன்னை எவ்வாறு சரிசெய்து கொண்டு செல்வது என்பதை அறிந்து இருக்க வேண்டும்.

எல்லோரிடமும் தன்னை எவ்வாறு சரிசெய்து கொண்டு செல்வது என்பதை நன்கு அறிந்திருக்க வேண்டும். வாழ்க்கையில் வெற்றி பெற இந்தப் பண்பு அவசியம் தேவை. இந்தப் பண்பை அதிகமாக விருத்தி செய்ய வேண்டும். எந்தப் பணி செய்ய வேண்டுமாயினும் முயற்சி அவசியம். பலபேர்கள் முயலாமலேயே முடங்கிப் போய்விடுவர், அது தவறு.

ஐரோப்பியர்களிடம் இந்தப் பண்பு நிறைந்து காணப்படும். ஆங்கிலேயர்கள் ஆரம்பத்தில் இந்தியாவுக்குச் சாதாரண வியாபாரிகளாக வந்து கிழக்கிந்தியக் கம்பெனியை ஆரம்பித்தனர். பிறகு மெதுவாக தங்கள் முன்னேறும் பண்பின் மூலமாக இந்த நாட்டையே ஆளுபவர்களாகி விட்டனர். வாஸ்கோடகாமா, கொலம்பஸ் போன்றவர்கள் இந்த முன்னேறும் தன்மை கொண்டதால்தான் இந்தியாவிற்கு கடல் மார்க்கத்தையும், அமெரிக்காவையும் அவர்களால் கண்டுபிடிக்க முடிந்தது. ஜப்பானிய மக்களும் இக்குணத்திற்கு மிகவும் தகுதியானவர்கள். ஆகவேதான் அவர்கள் இவ்வளவு குறுகிய காலத்தில் மிகப்பெரிய முன்னேற்றம் அடைந்துள்ளனர். இன்றைக்கு வியாபாரத்தில் அநேகமாக எல்லா நாடுகளுடனும் போட்டி போடுகின்றனர்.

முன்னேற்ற குணமுடையவன் எப்போதும் சுறுசுறுப்பாக இருப்பான். இது ஆத்மா சாதகனுக்கு மிகவும் பயன் தரக்கூடியது. பொதுவாக வியாபாரிகளிடத்தில் இந்தப் பண்பு இருக்கும். ஆனால் அனைவர் உள்ளத்திலும் இந்தப் பண்பு பரவ வேண்டும். இது எல்லோருக்கும் இருக்க வேண்டிய முக்கியமான பண்பாகும்.

# 20. அற்ப மனம்

சகல விதமான அற்ப மனம் படைத்தவர்களும் இவ்வுலகில் நிரம்பியிருக்கின்றனர். நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர் ஏதாவது ஒரு வகையில் அற்ப புத்திக்காரர்களாக இருக்கின்றனர். இதற்குக் காரணம் ஒவ்வாத குணம். மற்றவர்கள் நல்ல நிலையில் வாழ்வதைக் கண்டால் இந்த அற்ப புத்திக்காரனுடைய உள்ளம் தகிக்க ஆரம்பிக்கிறது. மற்றவர்கள் அடைந்துள்ள வெற்றி அல்லது சாதித்த சாதனைகள் அல்லது நற்பண்புகளைப் பற்றி கேள்விப்படும்போது அது வெந்து புழுங்குகிறது. அவன் அவர்களைத் தூற்ற ஆரம்பிக்கிறான். அவர்களுடைய வீழ்ச்சியையே தனது இலட்சியமாகக் கொள்கிறான். அவன் அவர்களைப்பற்றி புறங்கூறுவதும், கோள் பேசுவதுமாக எப்போதும் இருப்பான். வழக்கமாக அளவு கடந்து பொறாமைக்கும் அசூயைக்கும் ஆளாகின்றான். அற்ப புத்தி ஒரு வகையான பொறாமையாகும். ஒருவன் பெரிய அறிவாளியாக இருக்கலாம். அவன் மாபெரும் கவிஞனாக இருக்கலாம். அவன் மாபெரும் புலமையுள்ளவனாகக்கூட இருக்கலாம். அவனுடைய புலமைக்கும் அறிவுக்கும் சமூகம் அவனைப் போற்றலாம். ஆனால் அதே நேரத்தில் அவனுடைய அற்ப புத்தியைக் கண்டால் அறுவெறுக்கும்.

அற்ப புத்தியுடையவனுக்கு தனக்கென ஓர் கொள்கையிருக்க முடியாது. அதன்படி வாழ அவனுக்கு மனமும் இருக்காது. உயர்ந்த எண்ணமும் பரந்த மனப்பான்மையும் எப்போதும் அவர்களிடம் எதிர்பார்க்க முடியாது.

அற்ப மனம் படைத்தவன் தனது உடன் பிறப் பாயினும், தாய் தந்தை போன்றாரையும் கூட சொத்தை அபகரிக்க வாழ்க்கையில் தான் மட்டும் முன்னேற கொல்லவும் தயங்க மாட்டான். பொய் கையெழுத்துப் போடவும், பச்சைப் புளுகுகளைக் கூறவும், ஒரு மனிதனை ஏமாற்றவும், கற்பழிக்கவும் மற்றவர் பொருளைச் சேகரிப்பதற்காக அவன் எப்பேர்பட்ட அற்பச் செயலை யும் செய்யத் தயாராக இருக்கிறான். அவனிடம் தூய மனசாட்சி என்பது கிடையாது. அவன் மிகவும் கணக்குப் பார்ப்பவனாக இருக்கிறான். அற்பத் தனத்தோடு கஞ்சத் தனமும் இணைந்தே செல்கிறது. ஈகையென்பது என்ன என்று கூட அவனுக்குத் தெரியாது. ஆனாலும் அவன் சமூகத்தில் பெரிய மனிதனாக இருப்பான். இருந்தாலும் கூலிக்காரர்களுடன் பத்து பைசா, இருபது பைசாவிற்கு சண்டை போடும் வழக்கமுடையவனாகவே இருப்பான்.

பொதுவாக அற்பமனம் படைத்தவர்கள் எல்லோரை யும் ஒன்றாக வித்தியாசமின்றி பார்க்கமாட்டார்கள் உயர்வு தாழ்வு மனப்பான்மையின் காரணமாக இருப்பவ்ன் இல்லாதவன் என்கின்ற பாகுபாடு பார்ப்பார் கள். எதை எடுத்தாலும் அதில் இரண்டு குணம் காண்பார்கள். உயிர் போகிறது என்றாலும் தானம் தர கணக்குப் பார்ப்பார்கள். இது பெரும்பாலும் பணக்காரர் களிடமே அதிகம் காணப்படும். இவர்களுக்கு அகந்தை கோபம் முதலான தீய குணம் குடிகொண்டு இருக்கும். இவர்கள் பெரும்பாலும் தனது பணத்தை வைத்தியத்திற் காக மட்டுமே செலவழிப்பார்கள். இவர்களுக்குப் பின் இவர்களின் பிள்ளைகளால் ஊதாரித்தனமான செலவுகள் செய்து தனது தந்தையின் சொத்தை அழிப்பார்கள்.

# 21. சந்தேகம்

அளவுக்கு அதிகமான சந்தேகமும் படுமோசமான தீய குணமாகும். இது அளவுக்கு மிஞ்சிய நம்பிக்கை வைப்பதற்கு எதிர்மாறானது. மனம் எப்பொழுதும் வரம்பு மீறிய அளவிலேயே சஞ்சரிக்கின்றது. கணவன் தன்னுடைய மனைவியைச் சந்தேகிக்கின்றான். மனைவியும் தனது கணவனைச் சந்தேகிக்கின்றாள். எப்போது பார்த்தாலும் வீட்டில் ரகளையும், சண்டையும் போர்ராட்டமுமாக இருக்கிறது. இந்த சந்தேகம் தலை தூக்கி ஆடும்போது முதலில் மறைவது மனதில் நிம்மதி. தேவையற்ற பிரச்சனைகள் எல்லாம் சந்தேகத்தினால் தான் வருகிறது. மனிதனுக்கு மிகவும் தேவை நம்பிக்கை. அந்த நம்பிக்கை யார் மீது வைத்திருக்கிறோமோ அவர்களும் நம்பிக்கை உடையவர்களாகவே இருத்தல் வேண்டும்.

இந்த உலகமே நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு இயங்கி வருகிறது. மிகப்பெரிய தொழிற்சாலைகளில் நிர்வாகிகள் தொழிலாளர்களை நம்பி இருக்கிறார்கள். தொழிலாளர்கள் நிர்வாகிகளை நம்பி இருக்கிறார்கள். ஒவ்வொரு முதலாளியும் அவர்களிடம் பணிபுரியும் தொழிலாளர்களை நம்பித்தான் வாழ வேண்டியுள்ளது. எனவே எந்தத் தொழிலானாலும்— எந்த வியாபாரமானாலும் நம்பிக்கை நாணயத்தை அடிப்படையாகக் கொண்டு நடந்து வருகிறது.

சந்தேகம் எப்போதும் சண்டைகளையும், சச்சரவுகளையும், மன அமைதி இல்லாமையையும் தான் தரும்.

சந்தேகம் ஒரு விசித்திரமானது. யார் மீது, ஏன், எப்படி சந்தேகப்படுவது என்பது கூட அதற்குத் தெரியாது.

சந்தேகம் ஒரு தீர்க்க இயலாத நோய். அது மிக விரைவாகப் பரவிவிடும். அது அடுத்தடுத்து மற்றவர்களையும் தீண்டும் தொற்று வியாதி. எனவே இதனை ஆரம்பத்திலேயே படரவிடக் கூடாது. இது முற்றாமல் தடுக்க ஒரே வழி ஆர அமர சிந்தித்து— அவசரப்படாமல், தீர விசாரிப்பதுதான் அந்த வழி. "கண்ணால் பார்ப்பதும் பொய், காதல் கேட்பதும் பொய்; தீர விசாரிப்பதுவே மெய்" என்று இதற்காகவே கூறியுள்ளனர்.

நல்ல குடும்பத்தில் சந்தேகம் நுழைந்து விட்டால் குடும்பமே பாழாகிப் போய்விடும். ஒருவரை ஒருவர் நம்பாமல் தனக்குத் தானே மனதில் எதையாவது போட்டுக் குழப்பிக் கொள்ளுதல் அறவே கூடாது. தெளிவாகப் பேசவேண்டும். அடுத்தவர்களுக்குப் புரியும்படி தனது திட்டத்தைக் கூறவேண்டும். தான்தானே குடும்பத் தலைவன் என்றோ அல்லது நாம்தானே அதிகம் சம்பாதிக்கின்றோம், ஏன் இதனை அனைவருக்கும் விளக்க வேண்டும் என்றோ எண்ணி சிலவற்றை மூடிமறைப்பது கூடத் தவறு. எந்த நேரத்தில் எங்கே பிறக்கும் சந்தேகம் என்பது யாராலும் கண்டுபிடிக்க முடியாது.

எனவே யாராயினும் இந்த குணத்தைக் கண்டு அஞ்சித்தான் ஆகவேண்டும். எப்போதும் எதையும் வெளிப்படையாகப் பேசி மற்றவர்களுக்கு சந்தேகம் வராமல் நடந்து கொள்ள வேண்டும். கூடுமானவரையில் மற்றவர்களை நம்பவும் வேண்டும். ஏமாறாது இருப்பின் சந்தேகத்தைத் தவிர்க்கலாம்.

# 22. நாணயமின்மை

நாணயமின்மை ஒரு தீய பண்பாகும். அநேகமாக எல்லோரும் ஏதாவது ஒரு வகையில் நாணயமற்றவர்களாகவே இருக்கின்றனர். நாணயமுள்ளவர்கள் மிகவும் அரிது. நாணயமின்மை பேராசையில் இருந்து பிறக்கிறது. நாணயமின்மை இருக்குமிடத்திலெல்லாம் வஞ்சகம், சூது, ஏமாற்றுதல், பித்தலாட்டம், குதர்க்கம் முதலியவை காணப்படும். காமமும் பேராசையும் அழிக்கப்பட்டு விட்டால் மனிதன் நாணயமுள்ளவனாகி விடுகிறான். நாணயமற்றவன் எந்த நிலையிலும் முன்னுக்கு வர முடியாது. எப்படியும் அவனின் நாணயமற்றத் தன்மை முன்போ பின்போ வெளியே தெரிந்து விடும்.

நாணயமற்றவனை சமூகத்தினர் எல்லோருமே வெறுப்பார்கள். அவன் தனது முயற்சியில் முதலில் வெற்றி பெறுவதைப்போல் தெரிந்தாலும் நிச்சயம் முடிவு தோல்வியாகவே முடியும். அலுவலகத்தில் பணியாற்றவும் வியாபாரத்தில் வளரவும் நாணயம் மிகவும் தேவையானது.

நாணயமற்றவன் லஞ்சம் வாங்கிப் பிழைக்கவே பெரிதும் ஆசைப்படுவான். ஒவ்வொரு காரியத்துக்கும் பொய் பேசியே செய்வான். உள்ளதைக் கொண்டு திருப்தி அடைபவர்கள் நாணயத்தோடு வாழ எண்ணுபவர்கள் பொய் பேசத் தேவையில்லை. எளிய வாழ்க்கை நடத்தப் பழக வேண்டும். அப்போது தான் தனக்கு தேவைகள் அதிகம் வராது. தேவைகள் அதிகமாக ஆகஆக ஏதேனும் ஒரு குறுக்கு வழித் தேவைப்படுகிறது. அங்கே நாணயம் கெட்டுவிடுகிறது.

தனக்குரிய தேவைகளை மட்டுமே சிந்தித்து அதற்காக என்ன செய்ய வேண்டுமோ, எப்படி உழைக்க வேண்டுமோ அதனை யாருக்கும் இடையூறு இல்லாது செய்து வந்தால் நாணயம் தானாக வளரும்.

தியாகம் இதற்கு மிக மிக அவசியம். பரந்த மனப் பான்மையுடன் தேவையற்றவைகளைத் தியாகம் செய்ய வேண்டும். நல்ல குடும்பத்தில் ஒருவன் நாணயமற்றவனாக இருப்பின் அவன் பொருட்டு அந்தக் குடும்பத்தார் அனைவருக்குமே தீய பெயர் வந்து சேரும். விளையாட்டிற்காகக் கூட நாணயமற்று இருத்தல் கூடாது. நல்ல விளையாட்டு வீரர்களிடம் இந்த குணம் சிறப்பாக இருக்கும். தோல்வியை சிரித்துக் கொண்டே ஒப்புக் கொள்வார்கள். நாணயம் என்பது எங்கும் தேவை.

நண்பர்களுக்குள்— குடும்பத்திற்குள்— அலுவலகத்திற்குள்— நாணயம் இருப்பின் அவனும் அவன் வீடும் சிறக்கும். அரசியலில் இருப்பவர்களில் நாணயம் இருப்பின் நாடே சிறக்கும்.

ஒரு நாடு நாணயம் மறந்து செயல்பட்டால் உலகில் அதற்குரிய மரியாதையே குறைந்து விடும். எனவே நாணயம் எப்போதும் சிறந்த ஒன்றாகவே கருதப்படுகிறது. நாணயம் அற்றவன் தன் அவயவங்களில் எதையோ இழந்தவன் போலாவான். நாம் என்றும் முழுமனிதனாக இருக்கவே முயல வேண்டும். அப்போது தானே நமக்கு மதிப்பும் மரியாதையும் இருக்கும் ?

# 23. சினம் காத்தல்

மனித குணங்களில் சினம் காத்தல் மிகவும் தேவையான ஒன்று. இந்த பயங்கர நோய்க்கு ஆளாகாதார் யாரும் இருக்க முடியாது என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வோம். கோபத்தை அடக்கினால் சாந்தியும், ஆனந்தமும் கூடவே வரும் என்பதில் ஐயமில்லை.

சினம் நமது நரம்பு மண்டலத்தையே பாதிக்கிறது. அதை வேரோடு களைந்தெரிய நாம் முயற்சிக்க வேண்டும். ஒரு ஆசிரியர் மாணவனிடம் சினம் கொள்வது தேவையான ஒன்று. அவன் எதிர்காலம் சிறக்க, கல்வியில் நல்ல தேர்ச்சி பெற ஆசிரியர் கொள்ளும் சினம் மாணவனைக் கெடுக்காது. அது போல குழந்தைகளின் மேல் தவறு செய்யும் போது ஒரு தாய் பெறும் சினம் குழந்தைகளின் எதிர்காலம் சிறக்க பயன்படும். இப்படிப்பட்ட கோபங்கள் தவிர்க்க முடியாதது. ஆனால் ஆசையின் பேரால், விரோதத்தின் பேரால், வெறுப்பின் பேரால், பொறாமையின் பேரால் ஏற்படுகின்ற சினம், தீயகுணமாகும். இது சாந்தி, ஞானம், பக்தி ஆகியவற்றின் பயங்கர விரோதி.

கோபத்தின் மூலம் பல வகையான தீய குணங்கள் பிறக்கின்றன. அதனால் பல வகையான தீயச் செயல்களைச் செய்யத் தூண்டும். அநீதி, மூர்க்கத்தனம், கொடுமை, கொலை செய்தல், கடுஞ்சொல், தீங்கிழைத்தல் இவைகள் தானாகவே வந்து விடும். கோபம் ஞாபகச் சக்தியைக் கூட இழக்க நேரிடும். அவனுடைய பகுத்தறிவு மங்கி விடுகிறது. அவனுடைய புத்தி கோணலாகி சுயமாக சிந்திக்கும் ஆற்றலை இழக்க வேண்டி வருகிறது.

சினம் கொண்டவன் தான் என்ன செய்கிறோம் என்பது அவனுக்கே புரியாமல் போகிறது. அவன் உணர்ச்சி வசப்பட்டு விடுகிறான். கோபத்தில் இருப்பதால் அவன் என்ன பேசுகிறான் என்பது அவனுக்கே புரியாது. எதை வேண்டுமாயினும் செய்வான். அவனது உள்ளம் ஒரு வெறியுணர்ச்சியினை மட்டும் அதிகமாகப் பெற்று இருக்கும். அதனால் அவன் உணர்விழந்து கோபத்திற்கு ஆளாகி விடுகிறான்.

எரிச்சல், சீற்றம், வருத்தம், மனக்கடுப்பு, ஆத்திரம், ஆவேசம், பெருஞ்சினம் முதலியவை எல்லாமே நேரத்திற்கு ஏற்றபடி தரம் அல்லது தீவிரத்திற்கேற்ப கோபத்தின் பல வகைகளாக மாறும்.

ஒருவன் மற்றொருவனிடமுள்ள குறையை நீக்கி அவனைத் திருத்துவதற்காக, தன்னலமற்ற வகையில் இலேசான கோபத்தைக் காட்டி அவனை முன்னேற்ற விரும்பினால் அதற்கு "நேர்மையான கோபம்" அல்லது "ஆன்மீகக் கோபம்" என்று பெயர். ஒரு மனிதன் பொது இடத்தில் ஒரு பெண்ணை கேவலமாக நடத்தவோ—கெடுக்க முயலவோ செய்யும் போது அதைத் தடுக்க அவன்மீது சினம் கொண்டு அவனைத் தடுக்க முயற்சிக்க எண்ணுவது நேர்மையான கோபம். ஒருவன் செய்யும் செயலைச் சீராகச் செய்யத் திருத்தும்போது ஏற்படுகின்ற சினம் தேவையான ஒன்று.

அற்பச் செயல்களுக்கெல்லாம் ஒரு மனிதன் அடிக்கடி சினந்து கொண்டிருந்தால் அது அவனுடைய மனோ பலகீனத்தையே அது காட்டும்.

ஒருவன் உங்களைத் தூற்றும்போது அல்லது தனது பொருளை களவாடிய பிறகு அமைதியாக இருந்தால் அது மனோபலத்தைக் காட்டும். தன்னடக்கம் என்பது மகத்தான மனோபலத்திற்கு அறிகுறியாகும். வேகமாக சினம்

கொள்பவன் எப்போதும் நேர்மையற்றவனாகவே இருப்பான். அவன் உணர்ச்சி வசப்பட்டு அலைக்கழிக்கப் படுகிறான்.

சினத்திற்குத் திரும்பத் திரும்ப இடம் கொடுக்கும் போது சினம் பலம் பெறுகிறது. அதை அவ்வப்போது கட்டுப்படுத்தி வந்தால் மனிதன் அளவற்ற சக்தியைப் பெறுகிறான். கோபம் அடக்கப்பட வேண்டும். எவ்வாறு மின்சாரத்தை வெப்ப சக்தியாகவும், வெளிச்சமாகவும் மாற்றி அதனால் பயன்படுகிறோமோ அப்படி கோபத்தை மாற்றி பயன்படக் கூடியதாக்க வேண்டும்.

சினம் அதிகமானால் நரம்பு சீர்குலைக்கப்படுகிறது. கண்கள் சிவக்கின்றன. உடல் பதறுகிறது, கால் கைகள் நடுங்குகின்றன. அளவு கடந்த சக்தியைப் பெற்றதைப் போல் உணர்கின்றான். சிறிது நேரம் கழித்து சோர்வு அடைந்து விடுகிறான். இப்படி பலமுறை சினம் கொண்டு சினம் கொண்டு பின்பு சோர்வு அடைந்து வந்தால் உடலில் உள்ள வலிமை மிகவும் குறைந்து நோய்வாய்ப் பட வேண்டிய நிலை வரும்.

கோபத்தில் உள்ள பெண்கள் தங்கள் குழந்தைகளுக்கு அந்த நேரத்தில் பால் கூட கொடுக்கக்கூடாது. அந்த நேரத்து முளைப்பால் குழைந்தைக்கு ஆகாதது மட்டு மல்ல, மரணம் கூட நிகழ நேரிடும். ஒருவன் கோபமாக உள்ளபோது அவனுடைய இரத்தத்தில் நச்சு கலந்து விடுகின்றன.

நிகழ்கால மனோதத்துவப்படி சகலவிதமான நோய் களும் கோபத்தின் அடிப்படையில் பிறக்கின்றன. கீல் வாதம், இருதயக் கோளாறு, நரம்புத் தளர்ச்சி முதலியன எல்லாவற்றிற்கும் கோபம் தான் காரணம். எனவே எப்போதும் அமைதியையும் சாந்தியையும் உள்ளத்தில் கொண்டு இருந்தால் நரம்பு மண்டலத்தை சாதாரண சமநிலைக்குக் கொண்டு வரலாம். சீரான மனோநிலையில்

இருந்தால் அவனுடைய மூளை எப்போதும் குளிர்ந்த நிலையில் இருக்கும்.

கோபத்திற்கு மூலகாரணம் அறியாமையும்— அகந்தையுமாகும். அன்பு, சாந்தி, கருணை, நேசம், இரக்கம் போன்ற குணங்களை விருத்தி செய்வதன் மூலம் கோபத்தை பெருமளவிற்கு அடக்கலாம். அதன் வேகத்தையும் குறைக்கலாம். ஆத்மஞானம் ஒன்றுதான் கோபத்தின் சகல குணங்களையும் பரிபூரணமாக அழிக்க முடியும்.

ஒருவன் கோபத்தை அடக்கிவிட்டால் அவனுடைய சாதனையில் பாதி பாகம் முடிந்து விடுகிறது. கோபத்தை அடக்குவது உண்மையில் மனத்தை அடக்குவதாகும். கோபத்தை வென்றவன் எவ்விதமான தீய செயலையும் செய்ய மாட்டான். அவன் எப்போதும் நேர்மையாக இருப்பான். கோபம் பெரிய வடிவெடுக்கும்போது அதை அடக்குவது கடினமாகி விடுகிறது. ஆகவே அது சித்தத்தில் சிற்றலை நிலையில் இருக்கும்போதே அதை அடக்கி விட வேண்டும்.

இலேசாக கோபம் வரும்போதே, அதன் அறிகுறி தோன்றும்போதே அதை நசுக்கிவிட வேண்டும். சினம் கொள்ளாது இருப்பது, இன்றைய உலகில் முடியாத காரியமே என்றாலும் அதனை வளர விடாது வாழ்வதே சிறப்பு. அப்போதுதான் அனைவரும் பாதுகாப்பாக இருக்க முடியும்.

# 24. யோக நெறி

அளவற்ற செல்வம் குவிந்தாலும் அதனால் ஒருவனுக்கு மகிழ்ச்சி கிடைப்பதில்லை. அது அவனது தேவைகளை அதிகப்படுத்தி மனத்தை அலைக்கழித்து நிம்மதியில்லாமல் செய்து விடுகிறது. பெயரும் புகழும் கட்டுகளைப் போட்டு ஒருவனை அடிமை நிலைக்குக் கொண்டு போய்த் தள்ளி விடுகிறது. இது விடுதலை பெறும் வழியில் தடைக் கல்லாக அமைந்து பெரும் தடங்கல்களை விளைவிக்கிறது. அப்படியானால் உண்மை யான விடுதலை எதில் இருக்கிறது. ஒருவன் தன்னுடைய பேருண்மை இயல்பை உணர்வதிலேயே இது உள்ளது. எல்லா மதங்களின் குறிக்கோளும் ஒருவனை இந்த நிலைக்குக் கொண்டு வருவதே யாகும்.

மனித மனம் உறுதி மேற்கொள்ளுதல், உணர்ச்சி வயப்படுதல், நினைவு கூர்தல், மன ஒருமைப்படுதல் போன்ற ஆற்றல்களைப் பெற்றுள்ளது. இந்த நால்வகை ஆற்றல்களும் மனத்துக்குள் இருந்தாலும், சாதாரண மனிதனில் இவைகள் அனைத்துமே முழுமையான வளர்ச்சி யைப் பெற்றிருப்பதில்லை. பலரின் நிலைகளில் ஒன்று மட்டும் அதிகமாகி மற்ற மூன்றையும் நிலைநிறுத்த முடியாமலும் போகிறது.

மனித மனத்தில் நிலவி நிற்கும் ஆற்றல்களின் அடிப் படையில் இந்திய ஞானிகள் மதத்தை நான்கு பிரிவுகளாக வகைப்படுத்தியுள்ளனர். கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம், ராஜயோகம் என்பதாகும்.

கர்மயோகம் என்பது தூய, தன்னலமற்ற செயல் ஆகும். ஒருவன் தான் செய்யும் தொழிலில் சிறிதும் பற்றில்லாமல், அதன் விளைவுகளையும் பயனையும் கருதாமல், தொழிலுக்காகவே தொழில் என்ற முறையில் செய்யும் போது அவன் விடுதலை அடைந்தவன் ஆகிறான்.

பக்தி யோகத்தில் ஒருவன் தன் உடல், மனைவி, குழந்தைகள், செல்வம், உற்றார், உறவினர் போன்ற வற்றின் மீது வைக்கும் அற்பமான சுயநல ஆசை. அந்த ஆசை, நாடு— உலகம்— உலகிலுள்ள அனைத்து இன்பம் என்று பரந்து விரிந்து மிகப்பெரிய அளவில் உயர்ந்து அதன் வழியாக இறைவனை அடைகிறான் அல்லது விடுதலை பெறுகிறான்.

ஞானயோகம் என்பது உண்மையையும் பொய்மையையும் பகுத்தறிந்து உணர்ந்து அதனால் விடுதலை நிலையை எய்துவதாகும். மேலும் முடிவற்ற பரம்பொருளில் தன் ஆன்மா பொருந்திப் போகும் நிலையைக் காண்பதாகும்.

ராஜயோகம் என்பது ஒருவன் தன் எண்ணங்களையும், உணர்வுகள் அல்லது உணர்ச்சிகளையும், புலன்களையும், மனம், உடல் ஆகிய அனைத்தையும் கட்டுப் படுத்துவ தாலும் சமாதி நிலையை எய்துவதாலும் மேலான மதத்தை அல்லது மோட்சத்தை அடைய முடியும் என்பதற் கான முறையைப் போதிப்பதாகும்.

இவைகள் நான்கு வெவ்வேறு மார்க்கங்களாக இருந்தாலும் அவைகள் முற்றிலும் மாறுபட்டனவல்ல. ஒவ்வொன்றும் மற்றொன்றுடன் பின்னிக் கொண் டுள்ளவை.

ஒருவர் தன்னுள் ஆக்கிரமித்துள்ள ஆற்றலைப் பொறுத்துத் தனக்கான (மார்க்கத்தை) வழி முறையை தேர்ந்தெடுத்துக் கொள்கிறார். அவரவருக்கான ஒரே வழிமுறையை விடாப்பிடியுடன் பிடித்துக் கொண்டு

முன்னேறினாலும் எல்லோரும் வந்தடையும் வெற்றி முனை ஒன்றேயெனக் காண்கிறார்கள்.

நேர்மையற்ற, கெட்ட நடத்தையுள்ள ஒருவன் அறிவு கொஞ்சமாக இருந்தாலும், செல்வம் சேர்த்து பெயரும் புகழும் அடைகிறான் என்பதே உலக நடைமுறையாக உள்ளது.

ஆனால் ஆன்மீகத் துறையில் இதற்கு நேர்மாறாக நடைபெறுகிறது. மதக் கோட்பாடுகளில் தூய்மை மிக்க நற்பண்பே மிக முக்கிய அங்கம் வகிக்கிறது. நேர்மையான குணம் அமையாவிட்டால் மதத்துறையில் முன்னேற முடியாது.

பிரம்மச்சரியம் அல்லது கற்பு நெறியை முதல் அடித் தளமாக அமைத்து அதன் மீது மதக் கோட்பாடுகளின் முழு கட்டுமானமும் எழுப்பப்படுகிறது.

எந்த ஒரு நாட்டிலோ அல்லது பகுதியிலோ ஏழ்மையும் பிரம்மச்சரிய இழப்பும் சம அளவில் இருக்குமானால் அந்த நாடு பாழடைவது திண்ணம். உதாரணத்திற்கு இந்தியாவை எடுத்துக் கொண்டால் உலகின் மேற்கத்திய நாடுகள் முழுவதும் காட்டுமிராண்டித் தனமாக இருந்த காலத்தில், தற்போதைய நாகரிக மேலை உள்ளோரின் மூதாதையர்கள் குகைகளிலும் காடுகளிலும் காட்டு மிருகங்களோடு சேர்ந்து வாழ்ந்த காலத்தில், இந்தியா உலகப் புகழ் ஏணியின் உச்சியை அடைந்திருந்தது. நாடும் செல்வச் செழிப்பில் இருந்தது.

பண்டையக் காலத்தில் நமது நாட்டில் தூய வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். எளிய வாழ்க்கை முறை, உயர்ந்த எண்ணங்கள் ஆகியவற்றுக்கான குறிக் கோள்கள் போதிக்கப்பட்டு அதையே கடைபிடித்தும் வாழ்ந்தனர். ஒரு நாடு முன்னேற அதன் வழிமுறையே முக்கியமானதாகும்.

# 25. உள்ளுணர்வு

உள்ளுணர்வு என்பது உள்ளத்திலே எழும் பல ஆசைகளின் பிரதிபலிப்பே யாகும். எல்லா ஆசைகள் எண்ணங்களுக்கான விவரங்கள் முழுவதும் நினைவின் நிலைத் தளத்திலேயே கிடைத்துவிடும். சிறிது நேரம் ஆழ்ந்து சிந்தித்து நினைவிற்குக் கொண்டுவர வேண்டிய ஆசைகள், எண்ணங்கள் பற்றிய விவரங்களெல்லாம் சிந்தனை நிலைத் தளத்தில் உள்ளுணர்வால் கிடைக்கக் கூடியனவாயுள்ளன.

மணிக் கணக்கில் ஆழ்ந்து சிந்தித்த பின்னரும் நினைவிற்குக் கொண்டுவர முடியாத சில செயல்களும், எண்ணங்களும், ஆசைகளும் அடியோடு மறந்து மறைந்து போய் விட்டன என்று யாரும் கருதக்கூடாது. அவைகள் எல்லாம் உள்ளத்தின் சேமிப்பு பெட்டகத்தில் பத்திரமாக உள்ளன.

நாம் நினைவிற்குக் கொண்டு வரக்கூடிய ஆசை, எண்ணம், செயல் போன்றவைகள் நம்முள் எழுந்த சிறிது காலத்திற்குப் பின்னர் நினைவுத் தளத்திலிருந்து இறங்கி சிந்தனைத் தளத்தில் போய்த் தங்கி விடுகிறது. நீண்ட நாட்களுக்குப் பின்னர் அவைகள் மிகவும் ஆழத்தில் உள்ள அடித்தளமான நிலைத் தளத்தில் போய் படிந்து விடுகின்றன. இவ்வாறான ஆசைகளும் எண்ணங்களும், செயல்களுமே தொடர்ந்து வரும் பிறவியிலும் வாழ்விலும் ஒருவனிடம் அவனுக்கும் தெரியாத பிறவிக் குணங்களாகவும் பழக்க வழக்கங்களாகவும் வெளித் தோன்றுகின்றன

ஒருவனுடைய முழு ஆசைகள், எண்ணங்கள், செயல்கள் ஆகியவற்றின் விளைவுகள் அவனையும் அறியாமல் வெளிப்படுவதுதான் ஒருவனுடைய பண்புகளாக அமையுமே அன்றி வேறொன்றுமில்லை.

ஒரு சாதாரண மனிதனால் இது வெளிப்படும் ஆசைகள், எண்ணங்கள், செயல்கள் ஆகியவற்றைக் கட்டுப் படுத்த முடிவதில்லை. மாறாக இந்த ஆசைகளும், எண்ணங்களும் செயல்களுமே அவனை வளைத்துப் பிடித்து அடிமையாக்கி விடுகின்றன. அவைகளிடம் அவன் ஒரு கைப்பாவையாகவே மாறிவிடுகிறான். ஒருவனுடைய அனுபவங்களின் பெரும் பகுதி அசைவற்ற மனத் தளத்திற்குள் தங்கியுள்ளன. அதில் ஒரு சிறு பகுதி மட்டுமே மனத்தின் சிந்தனைத் தளத்திலும் நினைவுத் தளத்திலும் தங்கியுள்ளன.

பொதுவாக ஒரு மனிதனின் உள்ளத்தில் எழுவது முதன் முதலில் ஆசை. அதுவே அவனின் நிரந்தர எண்ணமாக மாறுகிறது. அதைப் பெற அவன் துடிக்கும்போது அதுவே அவன் செயலாக வடிவெடுக்கிறது. இந்த ஆசை வடிவம் தான் எண்ணமும் செயலும். அதுவே மனிதனின் ஆரம்ப உணர்வுகள்.

ஒரு பொருள் அல்லது அதைப் பற்றிய விவரத்தை ஒருவன் நினைத்துப் பார்க்க வேண்டுமாயின் முதலில் அவன் அதை விரும்புகிறான். மனத்தில் இந்த விருப்பம் அல்லது இச்சை ஒரு குறிப்பிட்ட கருத்து வடிவில் முதலில் எழுகிறது. குறிப்பிட்ட இந்தக் கருத்தினால் அதற்கான குறிப்பிட்ட ஆசை மனத்தில் தோன்றுகிறது. இந்த முறையில் தான் மனிதனின் உள்ளுணர்வு வேலை செய்கிறது.

உள்ளுணர்வு வேலை செய்யத் தூண்டியதும் மனிதனின் ஆர்வம் மேலெழுகிறது. ஐம்புலன்கள் மூலமாகவும் பல்வேறு கருத்துரைகளை மனம் தொடர்ந்து

வாங்கி வைத்துக் கொண்டே வருகிறது. கண்கள் ஒன்றைப் பார்த்து சொல்வது, காதுகள் ஏதாவதொரு ஒலியைக் கேட்டு வைப்பது, நாசி வழியாக முகரும் ஒருவகை வாசனை அல்லது உடலின் தொடு உணர்வால் உணரப் படும் உணர்வுகள் போன்றவைகளே அவைகள்.

இத்தகைய புற நிலைகளின் புலன்கள் தொடர்பு ஏற்படும் போது, தான் விரும்பா விட்டாலும் மனத்தில் பலதரப்பட்ட ஆசைகளையும் எண்ணங்களையும் ஒய்ச்சல் ஒழிவின்றி ஏற்படுத்திக் கொண்டேயிருக்கின்றன.

நன்றாக அடைத்துள்ள ஓர் அறைக்குள் ஒருவர் அமர்ந்து இருப்பதாக வைத்துக் கொள்வோம். திடீரென வெளியில் ஒரு ஓசை கேட்கிறது. காது அந்த ஒலியைப் பற்றிக் கொள்கிறது. காதிலுள்ள நுண்ணியக் கருவி அந்த ஒலி அலையை மூளை மையத்திற்கு எடுத்துச் செல்கிறது. மனமானது வேறொரு புலனுடன் தொடர்பு கொண்டோ அல்லது வேறு ஏதாவதொரு நிலையில் தீவிரமாக ஈடு பட்டோ இருக்குமாயின் திடீரென ஒலித்த ஒலியே கேட்காது. ஏனெனில் மனமானது ஒரு சமயத்தில் ஒரே ஒரு புலனோடுதான் தொடர்பு கொள்ள இயலும். ஒருவர் ஒன்றை உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருக்கும்போது பேச முடியாது.

ஒன்றைப் பார்க்கும் போதும் அதே போல் பேசுவது என்பது இயலாது. இதைப் போலவே தான் மற்ற புலன் களின் நிலைகளும். ஆனால் மனமானது வேக வேகமாகச் செயல்படும் திறன் படைத்த காரணத்தாலேயே பலர் நினைத்த மாத்திரத்தில் கேட்டு, பார்த்து, பேசும் செயல் களை உடனுக்குடன் செய்வதைப் பார்க்கிறோம்.

ஒவ்வொருவருக்கு ஏற்படும் ஒவ்வொரு வகையிலான ஆசை, எண்ணம், எழுச்சி கலந்த உணர்ச்சி ஆகியவை களை உள்ளுணர்வின் வலிமையால் கண்காணித்துக் கொள்ளவும் கட்டுப்படுத்திக் கொள்ளவும் இயலும்.

புலன்களும் உடலும் மனத்தை விட்டு விலகி, தானாக இயங்குவதற்கு முடியாது. ஒருவர் மனம் இயங்கும் வெவ்வேறு மையங்களைப் பற்றிய விவரத்தைப் புரிந்து கொண்டு, மனத்தின் வெவ்வேறான செயல்களையும், சக்தியையும் தெரிந்து தெளிவடைந்திருப்பாராயின் அவர் புலன்களையும், உடலையும் மனத்திலிருந்து பிரித்து வெளிக் கொணர்ந்து மனத்தை அவைகளின் பிடிப்பி லிருந்து விடுவிக்கலாம்.

புலன்களும் உடலும் மனத்தைவிட்டு விலகி தன்னிச்சை யாக இயங்க முடியாது. மனமே எல்லா புலன்களையும் வேலை செய்ய வைக்கிறது. அதே போல் மனத்தின் வேலையும் சக்தியின் இயக்கங்களைப் பொருத்ததாகவே உள்ளன.

ஆசையே ஒரு எண்ணத்துக்கு மூலமாகிறது. அந்த எண்ணமும் செயலுக்கு வித்திடுகிறது. ஆசைகள் எல்லாமே குண்டலினி சக்தியின் இயக்க மையத்தைச் சார்ந்ததாகவே இருக்கின்றன.

ஆதலின் ஆசைகளுக்கான காரணத்தை அறிந்துக் கொள்ளக் கூடியவனுக்கு எண்ணங்களையும் செயல்களை யும் கண்காணித்து தோல்விகள் வீழ்ச்சிகள் அபாயங்கள் ஆகியவற்றிலிருந்து தன்னைக் காப்பாற்ற உள்ளுணர்வா லும் முடியும்.

# 26. புலனடக்கம்

எவன் ஒருவன் தனது புலன்களைக் கட்டி ஆள்கிறானோ அவன் இந்த உலகத்தையே ஆள்கிறான். எவன் ஒருவன் மனத்தைக் கட்டி விடுகிறானோ அவன் இந்த அகிலத்தையே கட்டி ஆள்கிறான். நமது கடந்த கால ஆசைகளும், எண்ணங்களும், செய்கைகளுமே நம்முடைய இன்றைய நிலையை உருவாக்கியுள்ளன. நேற்றும் அதற்கு முன் தினமும் ஆசைகள், எண்ணங்கள், செய்கைகள் வடிவில் எதை விதைத்தோமோ அதையே இன்றைக்கு அறுவடை செய்து கொண்டிருக்கிறோம்.

புலன் இன்பங்களையும், போகப் பொருட்களையும் பெறுவதே ஆனந்த வாழ்வு என மனிதன் நினைக்கிறான். செல்வத்தைத் திரட்டுவதும், பெரிய மனிதனாவதும் பெரும் புகழ் எய்துவதுமே ஆனந்தத்தைக் கொடுக்கப் போதுமானது என்றும் அவன் நினைக்கிறான். ஆனால் உண்மையிலேயே இவைகளால் மட்டும் ஒருவனுக்கு ஆனந்தம் கிடைத்து விடுகிறதா என்றால் இல்லை. ஐம்புலன்களும் ஆண்டு அனுபவிக்கக் கூடிய எல்லா போகங்களையும் ஒரு மனிதனுக்கு அளித்து விடுவோம். அவைகளில் அவன் முழுக்க முழுக்க ஈடுபட்டு திளைத்திருக்கவும் செய்வோம். அந்த மனிதனுக்கு ஆனந்தம் கிட்டி விடுகிறதா ? அவன் மன அமைதியையும் பெருமகிழ்ச்சியையும் பெற்று விடுகிறானா ? இல்லை. அளவுக்கு மீறி புலன் போகங்களில் மூழ்கிப் போனவன் அடியோடு அழிந்து விடுகிறான். அந்த மனிதன் அதற்கான காலமும் நேரமும் வருவதற்கு முன்பே அழிவுக்கும் சாவுக்கும் ஆளாகிறான்.

மனம் போன போக்கில் புலன் போகங்களில் கட்டுப்பாடு இல்லாமல் தன்னை விட்டுவிடும் ஒருவன் எரியும் தீயை அணைப்பதற்கு அதில் நெய்யைக் கொட்டும் முட்டாளுக்குச் சமமானவன்.

அதனால் தீ அதிகமாகுமே தவிர அணையாது. மனம், உடல் சக்திகளை புலன் போகங்கள் சிதற அடிக்கின்றன. அதனால் உடல், மூளை நலம் குன்றி, மனத்தாலும் நடத்தையாலும் பலவீனனாகிறான். அவைகளால் அமைதி பறிபோகிறது. வாழ்வு முழுவதும் கவலைக்கு இடமாகி நிச்சயம் தோல்வியடைகிறான்.

ஏராளமான செல்வத்தினால் ஒரு மனிதனுக்கு மகிழ்ச்சி கிடைப்பதில்லை. புலன்களின் ஆசைகளைப் பூர்த்தி செய்வதற்கு மட்டுமே பணம் உபயோகப்படுகிறது. செல்வம் அதிகமாகச் சேர சேர ஒருவனிடம் திட்டங் களும், ஆசைகளும், பரபரப்பும், கவலைகளும் வந்து குவிகின்றன. அது அவனை நிம்மதி இழக்கச் செய்கிறது. பணம் ஒரு மனிதனை தீய நடவடிக்கைகளில் ஈடுபடச் செய்து அவன் வாழ்வில் வேதனை விளைவிப்பதையே நாம் காண்கிறோம். அதனால் தான் இயேசுபிரான் "ஒரு ஊசியின் காதில் ஒட்டகமே வேண்டுமானாலும் நுழைவது சாத்தியமாகலாம். ஆனால் ஒரு செல்வந்தன் இறை யுணர்வு அடைவது எளிதல்ல" என்று கூறியுள்ளார். இது மறுக்க முடியாத உண்மை.

செல்வத்திற்கு அளவு என்பது இல்லை. அது குறைவாக இருக்கும்போது இன்னும் கொஞ்சம் சேர்ந் தால் நல்லது என்று எண்ணுகிறான். இன்னும் கொஞ்சம் சேர்ந்த பின், இன்னும் கொஞ்சம் சேரவேண்டுமே என ஏங்குகிறான். இப்படி அவன் உள்ளத்தில் போதும் என்கின்ற மனோபாவமே இல்லாமல் போகிறது. ஆசைக்கு ஒரு முடிவே இல்லாமல் போகிறது. அதனால் ஒரு மனிதனுக்கு பணத்தினால் மகிழ்ச்சி ஏற்பட்டு விடுவ

தில்லை. மகிழ்ச்சிக்கு பதிலாக துயரமும் பந்தமும் விளை கின்றன. பெயரும் புகழும் ஒரு மனிதனைப் பந்தப்படுத்தி, அடிமைத் தளையில் சிக்க வைத்து பின்னடையச் செய்கிறது.

வயிற்று வலிக்காரனுக்கு விருந்து வைத்தால் அந்த உணவை அவனால் சீரணிக்க முடியாமல் அதுவே அவன் உயிருக்கும் முடிவு கட்டி விடுகிறது.

பண ஆசையோடு, பெயர் ஆசையும், புகழ்] ஆசையும் வெல்வது மிகக் கடினம். சாதாரணமாக அறிநெறியும் இறைநெறியும் உணர்ந்து உயருவதற்கு ஒரு மனிதன் காமம், பொன், பொருள், ஆடம்பரம் இவைகளை வெறுக்க வேண்டும். அது இயலாதபோது தோல்வியடைய வேண்டும். ஏனெனில் பெயராசைக்கும், புகழாசைக்கும் வலிவு அதிகம். அது ஒரு மனிதனை அவனையும் அறியா மல் கட்டிப் பிடித்துக் கொள்கிறது. இந்த ஆசைகள் அணு அளவு ஒட்டிக் கொண்டு இருந்தாலும் அவனால் ஆன்ம விடுதலையைப் பெறவே முடியாது. ஆன்ம விடுதலைப் பெற்று புகழ்பெற வேண்டும் என்கிற ஆசையைக்கூட ஒழித்தல் வேண்டும். உள்ளத் தூய்மையும் அமைதியும் இருப்பின் ஆன்ம விடுதலைத் தானாக வரும்.

ஒரு மனிதனுக்கு அகந்தையை உண்டாக்குவதே பெயரும், புகழும், பொருளும் தான். சாதாரணனுக்கு தன்னைப் பற்றியும், தன் குடும்பத்தைப் பற்றியும் மட்டுமே நினைக்க வேண்டிய நிலை. ஆனால் பெயரும் புகழும் பெற்றவன் அவனை ஆதரிக்கும் எல்லோருக்கும் பொறுப்பேற்கும் நிலை. அது அவனுக்கு பாரமாகத் தெரியும்.

அறம் ஒன்றுதான் விடுதலை பெறுவதற்கு ஒரே வழி. விடுதலையைப் பெற விரும்பும் மனிதன் அறத்தின் வழியில் சென்றால் தான் அதைப் பெற முடியும். அதற்கு மிகவும் அவசியம் புலனடக்கம். புலனடக்கம் உரியவன் எதையும் எப்போதும் அடக்கி ஆள்வான். எனவே அவன் வாழ்வில் தோல்வி என்பதேயில்லை.

# 27 எளிய வாழ்வும் உயர்ந்த சிந்தனையும்

மனிதன் என்னதான் இறைநெறியும் அறநெறியும் முழுமையாக உணர்ந்து கடைபிடித்தாலும் தன் வாழ்க்கையில் மிக முக்கியமானது எளிய வாழ்வும் உயர்ந்த சிந்தனையும் என்பதை மறத்தலாகாது. எதையும் தனது வாழ்வில் நடைமுறையில் செயலாக்கத் துணியவேண்டும்.

"வரதட்சணைக் கொடுமை அறவே அகலவேண்டும், ஆடம்பரமான திருமணங்களுக்குத் தடை விதிக்க வேண்டும். விருந்துகளில் பங்கு பெறுவோரின் எண்ணிக்கைக்கு உச்சவரம்பு விதிக்கப்பட வேண்டும்" என்பன போன்ற பலவாறான முழக்கங்கள் தற்சமயம் நமது செவிகளில் அன்றாடம் விழுகிறது. அரசும் இவை பற்றிய சட்டங்கள் பலவற்றை ஏற்படுத்தியுள்ளது. பத்திரிகைகளும் இவை சம்பந்தமான கட்டுரைகளையும், கருத்துக்ளையும் அடிக்கடி வெளியிடுகின்றன.

நமது அன்றாட வாழ்வை நாம் சற்றே ஆராய்ந்தால், உண்மை ஒன்று புலப்படும். நாமாக ஏற்படுத்திக் கொண்ட பல்வேறு சடங்குகள் மற்றும் சம்பிரதாயங்களின் பிடியில் நாமே மாட்டிக் கொண்டு தவிக்கும் பரிதாபம் தான் அது. சடங்குகளும், சம்பிரதாயங்களும் நமது வசதிக்காகவும் நம் வாழ்வில் அமைதியையும் ஆனந்தத்தையும் ஏற்படுத்துவதற்காகவே உண்டாக்கப் பட்டன என்பதை நாம் மறந்து விடுவதற்கில்லை.

'மனிதன் ஒரு சமூகப் பிராணி' என்று சொல்வதுண்டு. அதாவது சமூகத்தில் பல்வேறு விருப்பங்களும், வெறுப்புக் களும் உடைய பலவிதமான மனிதர்கள் மத்தியில் வாழ்பவன் என்பது அதன் பொருள். சமுதாயம் எனும் போது அதற்கென்றமைந்த சில விதிமுறைகளும் கட்டுப் பாடுகளும் இருக்கத்தான் செய்யும்.

அவற்றிற்கேற்ப தன்னை அமைத்துக் கொள்ளத் தெரிந்தவன்தான் பண்பாடு உடையவனாகக் கருதப் படுவான். காலத்திற்கேற்ப சடங்குகள் மற்றும் சம்பிர தாயங்களில் ஒரு சில மாற்றங்களைச் செய்து கொள்ளுதல் தன்மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் நாட்டிற்கும் நன்மை பயக்குமேயாகில் அத்தகைய மாற்றங்களை அனைவரும் வரவேற்க வேண்டுமேயன்றி எதிர்க்கவோ புறக்கணிக் கவோ கூடாது.

மனிதன் பிறந்தது முதல் இறக்கும்வரை எத்தனையோ சடங்குகளுக்கு உள்ளாகிறான். அவற்றில் திருமணச் சடங்கு மிகவும் முக்கியத்வம் வாய்ந்ததாக சமுதாயத்தின ரால் கருதப்படுகிறது. இது சாதி, மத, இன வேறுபாடின்றி அனைத்து நாட்டவருக்கும் பொருந்தும். எனினும் இந்தச் சடங்கிற்குக் கொடுக்கப்படும் முக்கியத்வம் தான் நாட்டிற்கு நாடு, சமுதாயத்திற்குச் சமுதாயம் வேறு படுகிறது.

நமது நாடு பண்டை நாட்களில் மிகவும் செல்வச் செழிப்பில் திளைத்து நின்ற நாடாகும். அகில உலகமும் பாரதத்தை நோக்கி மிக உயர்வாக எண்ணிய காலம் அது. அந்த நாட்களில் நமது நாட்டின் மக்கட்தொகை குறைவு. ஆனால் விளை பொருட்களோ மிக அதிகம். எல்லோரும் எல்லா நலமும் பெற்று சீரும் சிறப்புமாக வாழ்ந்த நாடு இது. அந்த நாட்களில் நிலவிய செல்வச் செழிப்பின் காரணமாக திருமணம் போன்ற சடங்குகளில் சமுதாயத் தின் பல்வேறு பகுதியினராலும் நிரம்பப் பணம்

செலவழிக்கப்பட்டது. தங்கம் மற்றும் வெள்ளிப் பாத்திரங்கள், நகைகள் பெண்ணுக்குச் சீதனமாக அளிக்கப்பட்டன. ஒருவர் எவ்வளவு ஆடம்பரமாகவும் விமரிசையாகவும் திருமணத்தை நடத்துகிறார் என்பதை வைத்து அவரது செல்வச் செழிப்பைக் கணக்கிட்ட காலம் அது. அத்தகைய ஆடம்பரத் திருமணங்களால் அன்றைய சமுதாயம் பெரிதும் பாதிக்கப்படாமல் இருந்திருக்கலாம்.

ஆனால் இன்றைய நமது நாட்டின் நிலையோ முற்றிலும் மாறுபட்டது. இன்று நமது நாட்டை பீடித்துள்ள பெரும் பிணி 'மக்கட் தொகைப் பெருக்கம்' ஆகும். உற்பத்தித் திறனோ நத்தை வேகத்தில் நகர்ந்து கொண்டிருக்க மக்கட் பெருக்கமோ முயல் வேகத்தில் முன்னேறுகிறது. உண்ண உணவு இன்றி தவிக்கும் மக்கள் எத்தனை? வயது வந்த பெண்கள் பலர் வரிசை வரிசையாய் நிற்க அவர்களுக்குத் திருமணம் செய்யப் பணம் இல்லாது தவிக்கும் தாய் தந்தையர் எத்தனை?

இத்தகைய சிக்கலான சூழ்நிலையிலும் ஆடம்பரமாகத் திருமணம் செய்வோர் அத்தனைபேரும் நிம்மதியான வாழ்க்கையில் உள்ளவர் என்பதல்ல உண்மை நிலை. போலி கௌரவத்துக்காக கடன்பட்டு ஆடம்பரமாகச் செய்வோரும் உண்டு. அப்படிப்பட்ட திருமணங்கள் வரதட்சிணை வாங்குதல் போன்றவைத் தடுத்து நிறுத்தப்பட வேண்டிய ஒன்றாகும்.

வழக்கமாகப் பின்பற்றப்படுகின்ற சில மரபுகளை உடனே மாற்றுதல் என்பது கொஞ்சம் கஷ்டமான காரியம்தான் என்பதை மறுப்பதற்கில்லை. ஆனாலும் அவற்றை மாற்றியே ஆகவேண்டும். அதற்கான மன உறுதி இன்றைய இளைஞர்கட்கும், பெற்றோர்களுக்கும் தேவை. இவைகள் சட்டத்தினால் மட்டும் மாற்றக் கூடியதில்லை. சட்டத்தின் ஓட்டைகளில் சென்று பதுங்கிக் கொள்ளவே மனிதன் முயலுவான். வரதட்சணை

வாங்குவதும் கொடுப்பதும் கொடுமை என்பதை இரு வீட்டாரும் உணர வேண்டும். ஆடம்பரமாகத் திருமணம் செய்தல் இன்றைய ஏழ்மையான இந்தியாவிற்கு ஏற்ற தல்ல என்பதை பணம் படைத்தவர்களும் உணர வேண்டும். 'எளிய வாழ்வு— உயர்ந்த சிந்தனை என்பதை இலட்சியமாகக் கொண்டு பொருளை அவசியமற்று செல விடல் கூடாது என்கின்ற சீர்திருத்தங்களை நமது வாழ்வில் நடைமுறையில் கொண்டு வருவதே சிறப்பாகும்.

# 28. பிரம்மச்சரியம்

எண்ணம், சொல், செயல் மூன்றிலும் பிரம்மச்சரியம் காத்து, காம இச்சையை முற்றிலும் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதில் வெற்றி கண்டவர்கள் நம்ப முடியாத அளவு ஆக்க சக்தி படைத்தவர்களாக ஆவார்கள். அவர்கள் தம் உடலுக்கும் உள்ளத்திற்கும் அதிபதிகளாய் இருப்பதால் அவர்களே உண்மையில் வாழ்வை அனுபவிக்கிறார்கள். குதிரைச் சவாரியில் வல்லமை பெற்ற ஒருவனுக்குத் தன் குதிரையின் மீது அமர்ந்து தான் விரும்பிய திசையில் அதைத் திருப்பிச் சவாரி செய்வதில் எவ்வளவு மகிழ்ச்சி இருக்கும்! தூய்மையில் நிலை பெற்று இருக்கும் ஒருவன் தன் உடலிலிருந்தும் மனத்திலிருந்தும் எத்தகைய மகிழ்ச்சியை அனுபவிப்பான் என்பது உலக மக்களுக்கு விளங்காது. ஒருவன் தான் அடைந்துள்ள தூய்மைதான் உள்ளத்தினுள் அவன் வெற்றியை நிர்ணயிக்கிறது.

இவன் ஆண் என்றும் இவள் பெண் என்றும் வேற்றுமையுணர்வு தவிர்த்தால் எச்சரிக்கைத் தேவையில்லை. பிறபாலருடன் பழகுவதில் உணர்வு முக்கியம். ஆண் பெண் வேற்றுமை மட்டும் அதிகம் தெரிந்தால் அது தவறான பாதைக்கு வழிகாட்ட முயலும். பொதுவாக நமது எண்ணம் தனியான சிந்தனையில் வருவதில்லை. அதனுடன் வேறு பல பார்ப்பது, ரசிப்பது, நுகர்வது போன்ற சிந்தனைகளும் கலந்தே வரும். ஒரு நிலத்திற்கு நன்கு உரமிட்டு நீர் பாய்ச்சும் போது பயிரோடு களையும் கலந்தே தலைதூக்கும். இந்தக் களைகளை தலைதூக்கும் போதே பிடுங்கி எறிந்து விடவேண்டும். இலையேல் அவை பயிரையே அழிக்கும் ஆற்றல் பெற்றுவிடும்.

அறிவும் ஆற்றலும் சீராக, சிறப்பாக அமையும் போதுதான் பிரம்மச்சரியம் வெற்றி பெறும்.

பிரம்மச்சரியத்தினை கடைபிடித்து பரிசுத்தமானவனாக வாழ எண்ணி நடைமுறையில் பயில வேண்டும். அப்படி வாழ முயலும் போது சூழ்நிலையும் நட்பும் நமக்குத் துணையாக இல்லாமற் போகலாம். எனவேதான் அதனை ஆரம்பத்திலேயே தடுத்து நிறுத்தும் முயற்சியை மேற்கொள்ள வேண்டும்.

அரபு நாட்டு கதை ஒன்று உண்டு. அரபு நாட்டவன் கூடாரத்துக்குள் ஓர் ஒட்டகம் தன் மூக்கை நீட்டிப் பார்த்தது. கூடாரத்தின் சொந்தக்காரனுக்கு இது பிடிக்கவில்லை. எதிர்ப்பு தெரிவித்தான். ஒட்டகம் சொன்னது: ''சிறிது நேரத்திற்கு என் மூக்கை மட்டும் நீட்டி உன் அறையைப் பார்ப்பேன் அவ்வளவுதான். உன் அறைக்குள் நுழைய மாட்டேன்,'' என்று சொன்னது. அப்படிச் சொல்லி உண்மையில் ஒட்டகம் தன் அருவருப்பான தலையை நுழைத்தது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாகத் தன் உடல் முழுவதையும் அறைக்குள் நுழைத்து விட்டது. கூடாரத்திற்கு உரியவனுக்கு இது பிடிக்கவில்லை. இப்போது ஒட்டகம் தைரியமாக கூறியது: ''இதோ பார் நான் இங்கு இருப்பது உனக்குப் பிடிக்கவில்லையென்றால் நீ இந்த இடத்தை விட்டுப் போய்விடு. நான் அசைய மாட்டேன்'' என்றதாம்.

காமமும் இப்படித்தான் முதலில் மூக்காக மட்டும் நுழைக்கும். கடமை, கருணை, சேவை என்ற போர்வைகளில் உள்ளே நுழைந்துவிடும். பிறகு போக மறுக்கும். தன் உண்மையான உள் நோக்கத்தை மனது நம்மிடமிருந்தே மறைக்கப் பார்க்கும். ஆனால் எண்ணம், சொல், செயல் மூன்றிலும் தூய்மை இல்லாவிடில் ஆன்மீக வாழ்வில் எதுவும் கிடைக்காது. அடிமனம் நம்மையே கவிழ்த்து விடும். இந்த அடி மனத்தையும், ஆழ் மனத்தையும் அவ்வப்போது அதட்டி வைக்க வேண்டும். வலுவான

நற்கருத்துக்களை அதற்குள் ஆழப்பதிய வைக்க வேண்டும். அதைக் கட்டுக்குள்ளேயே வைத்திருக்க வேண்டும். நீயே எஜமானன் என்பதால் எந்த ஒட்டகத்தையும் உள்ளே விடுதல் கூடாது !

பிரம்மச்சரியம் என்பது திருமணமே செய்து கொள்ளாமை என்பது அல்ல. அப்படி யென்றால் ஆண்கள் மட்டுமே இருக்க வேண்டியதாகிவிடும் ! அந்த ஆண்கள் கூட பெண்கள் இன்றி எப்படி உருவாவது ? இதை சரியாகப் புரிந்து கொள்ளாமையாலும், சரிவர கேட்டு அறியாமையாலும் பிரம்மச்சரியத்தை எள்ளி நகையாடு பவர்களும் உண்டு.

பிரம்மச்சரியத்தின் முழுநோக்கமே மனிதன் ஒழுக்கம், நெறி தவறாமை, உடல் வளம் குன்றாமை போன்ற நல்ல குண நலன்களைப் பெற்று உள்ளத் தூய்மையினையும் அறிவையும் ஆற்றலையும் பேணிக் காக்க வேண்டும் என் பதேயாகும். இல்லறம் சிறக்க குழந்தைகளோடு பிரம்மச் சரியம் பூண்டு இனிதே வாழ இயலுவதே பிரம்மச்சரியம். வீண் மன அலைச்சல், வெளிவட்டாரப் பழக்கம், தேவை யற்ற பாலுணர்வு— கற்பனையில் காலம் தள்ளுதல், கண்டவைகளும் தன்னோடு உறவு கொள்ளத் துடிப்பது, நிழல் அசைந்தாலும் அவள் அசைந்தாளோ என்று எண்ணு தல் போன்ற தீய எண்ணங்கள் அகற்றப்பட வேண்டும்.

சிறு பிள்ளை நிலையிலேயே திருமணம் செய்தல் தவறு. உடல் நிலையும் உள்ள நிலையும் நன்றாக வளர்ந்த பின் பொறுப்புணர்ந்த நிலையில் ஆண் பெண் சேர்க்கை மிகவும் நல்லது. பெற்றோர்கள் தனது பிள்ளைகளை ஒரு பாரமாகவே கருதுதல் கூடாது. பிள்ளைகளும் தனது பெற்றோர்களை தான் வணங்கும் இறைக்கு சமமாகக் கருதி வணங்கி வாழ்த்த வேண்டும். உடற்பயிற்சி எவ்வளவு நலமோ அந்த அளவைக் காட்டிலும் பிரம்மச் சரியம் நலம் பயக்கும். மனத் தெளிவையும் தரும். மனம் தெளிவாக இருப்பின் இன்னல்கள் களையும் இன்னல்கள் களைந்தால் இல்லற வாழ்வு சிறக்கும்.

# 29. ஆசனம் - அவசியம்

மனிதன் இறை நெறியையும் அறநெறியையும் தெள்ளத் தெளிவாகப் புரிந்து உள்ளத்தை தூய்மை யாக்கிக் கொள்ள வேண்டும் என்பதை அறிந்த நாம் தன் உடலையும் தூய்மையாக மட்டுமல்ல வலிவாகவும் பொலி வாகவும் வைத்துக்கொள்ள வேண்டும் என்பதை மிக நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். இதனால் உண்மையான நன்மையுள்ளது.

இவைகளுக்குத் தடையாக இருப்பவை துயரம், நோய், மனச் சோம்பல், குறிக்கோளை அடையும் முயற்சி யைக் கைவிடுதல், உடல் கனமாக இருத்தல், மனச்சோர்வு, அஞ்ஞானம், மன ஒருமைப்பாடு எய்தாமை போன்றவை களே. இவைகள் எல்லாம் கூட ஆசனம் பயின்றால் மெல்ல மெல்ல ஆனால் உறுதியாக குறைந்து முடிவில் நல்ல உடல் வலிவையும் பொலிவையும் தரும் என்பது உறுதி.

ஆசனங்கள் இன்று உலகம் முழுவதிலும் மிகவும் பரவி உள்ளன. 'யோகா' வகுப்புகள் இன்று பள்ளி கல்லூரிகளில் பாடமாக கூட இடம் பெற்றுள்ளது. இது மகிழ்ச்சிக்குரியது ஆகும். ஆசனங்களை ஒழுங்காகச் செய்து வந்தால் ஆரோக்கிய வாழ்வு வாழலாம். நேரம் அதிகம் இல்லை எனில் எல்லா ஆசனங்களையும் செய்ய வேண்டியதில்லை. பத்மாசனம், அலாசனம், புஜங்கா சனம், சர்வாங்காசனம், சிரசாசனம் போன்ற முக்கிய மான சில ஆசனங்களை ஒழுங்காக தினமும் செய்து வந்தாலே போதும். டாக்டரிடம் போகாமலும், மாத்திரை, மருந்து என்று அலையாமலும், அதற்காக செலவழிக்காமலும் நல்வாழ்வு வாழலாம்.

சுவாமி சிவானந்தா ஒரு பெரிய ஆசன நிபுணர். அவரது 'YOGA ASANS' எனும் புத்தகத்தில் இருந்து சில குறிப்புகள், இது ஆசனம் செய்வதற்கான சில அடிப் படைக் குறிப்புகள். இது ஆசன பயிற்சியாளருக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும். இவற்றைக் கடைப்பிடிப்பது மிகவும் முக்கியமானதாகும்.

1. தூசு எதுவும் இல்லாத சுத்தமான அறையில் ஆசனங்கள் செய்யப்பட வேண்டும். நல்ல காற்றோட்டம் அந்த அறையில் இருக்க வேண்டும். முடிந்தால், அதிக வெயில் இல்லாவிட்டால், திறந்த வெளியில் சூரிய ஒளியில் ஆசனம் செய்யலாம்.

2. ஆசனம் செய்வதற்கு அதிகாலை வேளையே மிகவும் சிறந்தது. அந்த வேளையில் மனம் மிகவும் விழிப் புடனும், புத்துணர்ச்சியுடனும் இருக்கும். அதிகாலை நேரத்தில் நீங்கள் அதிக உற்சாகத்துடனும் ஆற்றலுடனும் ஆசனங்களைப் பயிலலாம். மாலை வேளையும் நல்லதே. நாள் முழுதும் வேலை செய்து களைத்துப் போயிருக்கை யில் ஆசனப் பயிற்சி உடலுக்கு புத்துணர்ச்சியை அளித்து அதிக சக்தியை அளிக்கும்.

3. தரையின் மீது விரிக்கப்பட்ட மிருதுவான ஒரு விரிப்பின் மீது ஆசனங்களைப் பயிலுங்கள். வழுக்காமல் இருக்க போர்வைக்கடியில் ஒரு ரப்பர் பாயைப் போட்டுக் கொள்ளலாம்.

4. இறுக்கமில்லாத தொள தொளப்பான ஆடை களை அணியுங்கள். அரைகாற்சட்டையும், பனியனும் மிகவும் உகந்தவை.

5. காலையில் காலைக் கடன்கள் முடிந்த பின்னர் ஆசனங்கள் செய்வது சிறந்தது. இதை மாலையில் செய் வதற்குப் பதிலாக காலையிலேயே செய்யும் பழக்கத்தை

நீங்கள் மேற்கொள்ள வேண்டும். ஆசனங்களைச் செய்கை யில் குடல் காலியாக இருத்தல் நல்லது.

6. ஆசனங்கள் செய்யும்போது கண்ணாடி அணியா தீர்கள். ஏனெனில் அவை உடைந்து உங்கள் கண்களை காயப்படுத்தக் கூடும். கைக் கடிகாரத்தையும் கழற்றி விடுங்கள்.

7. ஆசனப் பயிற்சி முடிந்ததும் ஒரு தம்ளர் தண்ணீர் அருந்துவது நல்ல வழக்கமாகும்.

8. ஆசனங்களைத் தொடங்குவதற்கு முன் குளிப்பது நல்ல பலனைத் தரும். அது தோலின் துவாரங்களைத் திறக்கச் செய்து ரத்த ஓட்டத்திற்குப் பெரிதும் உதவுகிறது. ஆசனம் செய்த பிறகு குளிக்க விரும்பினால் குறைந்தது அரைமணி நேரம் கழித்த் பிறகு குளிப்பது நல்லது.

9. வெறும் வயிற்றில் ஆசனங்களைச் செய்யுங்கள். பயிற்சி முடிந்ததும் அரை மணி நேரம் கழித்த பிறகே சாப்பாடு உட்கொள்ளவும். சாப்பிட்ட உடனே ஒரு பொழுதும் ஆசனங்களைச் செய்யக் கூடாது.

10. அவசரப்பட்டு ஆசனங்களைச் செய்யலாகாது. நேரம் குறைவாக இருக்குமானால் சில குறிப்பிட்ட ஆசனங்களைச் செய்தாலே போதும். அவற்றை நிதான மாக நன்றாகச் செய்யுங்கள்.

11. ஒரு குறிப்பிட்ட ஆசனத்தைச் செய்வதற்கு வீணாக சிரமப்படக் கூடாது.

12. ஆசனம் செய்கையில் உங்களுக்குக் களைப்புத் தோன்றக் கூடாது. பதிலாக ஆசனம் செய்தபின் உங்களிடம் புத்துணர்வும் உற்சாகமும் தோன்றவேண்டும்.

13. ஒவ்வொரு ஆசனம் செய்து முடித்த பிறகும் கொஞ்ச நேரம் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். ஆசனப் பயிற்சி முடிந்தபின் சிறிது நேரம் ஓய்வு

எடுத்துக் கொள்ள வேண்டும். ஓய்வுக்கு ஏற்ற 'சலாசனம்' இதற்கு ஏற்றது. பயிற்சியின் முடிவில் குறைந்தது ஐந்து நிமிடமாவது ஓய்வு எடுக்க வேண்டும். உடலில் களைப்புத் தோன்றாத பொழுது இந்த ஓய்வு எதற்காக என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் ஒரு ஆசனத்திலிருந்து மற்றொரு ஆசனத்திற்குப் போகும்போது இடையில் சரீரத்திற்கு இந்த ஓய்வு தேவைப்படுகிறது.

**14.** நீங்கள் சௌகரியமாக எவ்வளவு நேரம் செய்ய முடியுமோ அந்த அளவுதான் ஒவ்வொரு ஆசனமும் செய்யப்பட வேண்டும். அதிக நேரத்தில் ஒரு ஆசனத்தில் இருக்குமளவு அதிக பலன் கிட்டும். நேரத்தைப் படிப்படியாக நீங்கள் பயிற்சியின்போது அதிகரிக்கலாம்.

**15.** ஆசனங்களை நிதானமாக பதறாமல் செய்யவும். அவசரமாகவோ, ஆட்டத்துடனோ அவற்றை செய்யலாகாது.

**16.** உங்களுக்கு ஏற்ற ஆசனங்களை நீங்களே தெரிந்தெடுத்துக் கொள்ளுங்கள். அவற்றில் தேர்ச்சி அடையும் வரை தொடர்ந்து செய்யுங்கள். தினமும் மாற்றினால் அவற்றில் தேர்ச்சி அடைய முடியாது.

# 30. புத்தர் அறநெறி

புத்தர்பிரான் ஓரிடத்தில் அமர்ந்து இருந்தார். ஒரு நாள் அவருடைய சீடன் ஒருவன் புத்தர் முன் சென்று வணங்கி, ''சுவாமி! நான் நம் கருத்துக்களை எல்லாம் பாமர மக்களிடம் சென்று விளக்க விரும்புகின்றேன். தாங்கள் ஆசி வழங்க வேண்டும்'' என்றான். அதற்குப் புத்தர் ''அப்படியா! மிக்க மகிழ்ச்சி. இதற்கு நீ தகுதி உள்ளவனா என்பதை அறிய விரும்புகின்றேன்'' என்றார்.

''பாமர மக்களிடம் சென்று நீ நம் கருத்துக்களைப் பரப்பும் போது அவர்கள் உன்னை நிந்தித்தால், என்ன செய்வாய்?''

''இவர்கள் நல்லவர்கள் கைநீட்டி அடிக்காமல் பேச்சளவோடு நிற்கிறார்களே என்று மகிழ்ச்சி கொள்வேன், சுவாமி.''

''அவர்கள் உன்னை அடிக்கவும் செய்கின்றனர். அப்போது என்ன நினைப்பாய்?''

''இவர்கள் எவ்வளவு நல்லவர்கள்! ஆயுதம் கொண்டு தாக்காமல், வெறுங்கையால் அடிப்பதோடு நிறுத்திக் கொள்கிறார்களே என்று திருப்திப்படுவேன்!''

''சரி ஆயுதம் கொண்டே உன்னைத் தாக்கி விட்டால் அப்பொழுது என்ன நினைப்பாய்?''

''இவர்கள் மிகவும் நல்லவர்கள், என் பிறவிக்குக் காரணமாக ஆணவ அகங்காரம் இருக்கின்றன. அவை அழிந்தால்தான் பிறவி ஒழியும். என்னிடத்தில் உள்ள ஆணவ அகங்காரத்தை அழிப்பதற்கு இவர்கள் செயல்

எனக்குத் துணை புரிகிறது. என் பிறவியை ஒழிப்பதற்குச் சுலபமான வழியை இவர்கள் எனக்குக் காட்டித் தருகிறார்கள். இவர்களுடைய கருணைதான் என்னே! பிறவித் தளையிலிருந்து விடுபட ஒவ்வொருவரும் எத்தனையோ பாடுபடுகின்றார்கள். எனக்கு இப்படியொரு சுலபமான வழியில் முக்திக்கு வகை செய்யும் இவர்களை எவ்வளவு போற்றினாலும் போதாது! என்று எண்ணி எண்ணி மகிழ்வேன்" என்றார் சீடர்.

இதைக் கேட்டு பெருமகிழ்ச்சி கொண்ட புத்தர், அந்தச் சீடரை வாழ்த்தி அவர் விருப்பப்படியே விடை கொடுத்து அனுப்பினார்.

இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்னவென்றால், நம் வாழ்வில் நாம் எந்தவிதமான துன்பங்களைச் சந்திக்க நேர்ந்தாலும் இதைவிடப் பெரிதான துன்பம் நம்மைச் சூழாமல் தப்பித்தோம் என்று எண்ணிக் கொள்ள வேண்டும் என்பதே.

எந்தத் துன்பம் வந்தாலும் இது ஒழிந்து நாம் எப்போது மகிழ்வோம்! என எண்ணியிராமல், இது மிகச் சின்னதாக வந்தது. ஒருவேளை இதை விடப் பெரிய துன்பம் வராமல் போயிற்றே! என மன அமைதிப் பெற்றால் வந்த துன்பத்தின் வேதனை பெரியதாக இல்லாதது மட்டுமல்ல, விரைவில் அந்தத் துன்பம் ஒழியவும் செய்யும். மன உறுதியும்— மன அமைதியும் மனிதனுக்குத் தேவை. இதுவே இறை குணம்.

வாழும் உயிர்களின் செயல்கள் யாவும் பத்துப் பொருள்களால் தீயன ஆவன; அப்பத்துப் பொருள்களை நீக்கலால் நல்லன ஆவன. உடலைப் பற்றி வரும் தீமைகள் மூன்றும், வாக்கைப் பற்றி வரும் தீமைகள் நான்கும், உள்ளத்தைப் பற்றி வரும் தீமைகள் மூன்றும் ஆகப் பத்து அவை. மேற்கண்ட இப்பத்துக் குற்றங்களையும் நீக்க புத்தர் தரும் அறநெறி.

1. கொல்லாதே ; உயிரினை மதித்து ஒழுகு.
2. களவு செய்யாதே ; கொள்ளை அடிக்காதே ; தன் உழைப்பின் பயன்கட்கு உரியவனாக மாறும் எவனுக்கும் உதவி புரிக.
3. அசுத்தத்தை விட்டொழித்து தூய வாழ்வைப் பற்றுக.
4. பொய் பேசாதே ; உண்மையைக் கூறுக. அறிவோடும் அச்சமின்றியும் அறிவுடைய நெஞ்சோடும் வாய்மையை உரைத்திடு.
5. பொய் வதந்திகளைப் புதிதாகப் புனையாதே ; அவற்றைத் திரும்பக் கூறாதே ; குறை கூறாதே. பிறருடைய நல்லியல்புகளை நாடியறிக ; அவர்களைப் பகைவர் பழிக்கின் நீ முழுமனத்தோடும் அவர்கட்காகப் பரிந்து பேசும் வண்ணம் நல்லன நாடுக.
6. ஆணையிடாதே. மரியாதையும் மதிப்பும் தோன்றப் பேசு.
7. வம்புப் பேசிப் பொழுதைப் பாழ்படுத்தாதே ; கருதிய ஒன்றையே கூறுக ; ஆகாதாயின் வாய் திறவாதே.
8. பேராசை கொள்ளாதே. பொறாமையை ஒழி ; பிறர் நலங்கண்டு பெருமகிழ்வு எய்துக.
9. தீய நினைவு ஒழித்து நெஞ்சைத் தூயதாக்கு. நின் விரோதியர் மீதேனும் பகைமை கொள்ளேல் ; அனைத்துயிர்களையும் அன்பால் தழுவுக.
10. அறியாமையினின்றும் உன் உள்ளத்தை விடுவித்துக் கொள்க. ஐயத்திற்கோ அச்சத்திற்கோ ஆளாகாத வண்ணம் சிறப்பாக உனக்கு வேண்டிய ஒன்றிலே உண்மையை அறிய ஆவலாய் இரு.

# 31. திருவள்ளுவரின் அறநெறி

அறிவும் அன்பும் மனிதனுக்குத் தேவை என்பதை திருவள்ளுவர் அழுத்தந்திருத்தமாக எடுத்துரைக்கின்றார். அறிவு என்பது மனிதனுக்கு என்றும் எந்தத் தகுதியிலும் அழிவு வராமல் காக்கும் கருவியாகும். ஒருவேளை சூழ்ச்சியின் காரணமாக பகை கொண்டு பல் இன்னல்களைத் தரும் நிலைக்கு ஆளாக்கினாலும் அறிவு தன்னை எதிர்க்கும் எதிர்ப்பு சக்தியை தனதருகே வந்து பற்றிக் கொள்ளா வகையில் காத்து துணை நிற்கும் அரணாகி விடும்.

> "அறிவற்றங் காக்கும் கருவி செறுவார்க்கும்
> உள்ளழிக்க லாகா அரண்" (421)

அறிவு என்றும் தோற்பதில்லை. அறிவற்றவன் வாழ்க்கை இழிநிலைக்கே அழைத்துச் செல்லும். நன்மை தீமை என்பது நன்கு அறிந்து தெரிந்து கொள்ளும் உணர்வு அறிவிற்கு என்றும் உண்டு.

அறிவு காலத்தால் அழியாதது. நல்லறிவு உள்ளவன் தன்னைச் சார்ந்தோரை நல்வழி நடத்திச் செல்லும் தகுதியுடையவனாகிறான்.

அறிவுள்ள பெண் நல்ல வாழ்க்கைத் துணையாக மட்டுமல்லாது நல்ல குடும்பத் தலைவியாகவும் விளங்குவாள். தான் பெற்ற செல்வங்களை நல்ல அறிவுடன் வளர்ப்பாள். பிள்ளைகளுக்கு நல்ல அறிவு இருப்பின் கல்வி கேள்விகளில் முதன்மை பெற்று தேர்ச்சியடைவதோடு, பெற்றோர்கள் மகிழத் தக்க வகையில் வாழ்வில் சிறப்படைவார்கள். அறிவிற்கு சூழ்நிலை, காலம், இடம் இவைகள் தடையாக இருப்பது இல்லை.

**"அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர்"** (430)

எந்தவித ஆடம்பர பொருட்களும், உலக இன்ப வசதிகளும் இல்லையென்றாலும், அறிவுடையவர் எல்லாம் உடையவராகக் கருதப்படுவார்கள். அறிவிலாதார் எல்லாம் இருப்பினும் ஒன்றும் இல்லாதவரே ஆவர்.

**"எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப் பொருள் காண்ப தறிவு"** (423)

அறிவு எப்படியிருக்க வேண்டுமென்றால் யார் என்ன சொன்னாலும் அதனை அப்படியே ஏற்றுக் கொள்ளும் வகையில் இருத்தல் கூடாது. ஏன், எதற்காக என்பதை உணர்ந்து செயல்படும் கூறிய திறன் கொண்டதாக இருக்க வேண்டும். தன்னுடைய இளகிய உள்ளத்தை பயன்படுத்தி தன்னை இன்னலில் ஈடுபடுத்தும் நிலையிலும் அறிவுத் திறமையால் விடுபட்டு காத்துக் கொள்ள இயலும்.

இவர் சொன்னால் நிச்சயம் உண்மையாகத்தான் இருக்கும் என்று நம்புவது அறிவுக்கு அழகில்லை. அது மூடநம்பிக்கை. எனவே யார் சொன்னாலும் எப்படிச் சொன்னாலும் அறிவு ஆராய்ந்து செயல்படும். ஆனால் தேவையான நேரத்தில் அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சியே தீரவேண்டும். வீரம் உள்ளது என்கின்ற காரணத்தால் வீதியில் செல்லும் ஊர்தியின் முன் யாரும் நிற்பதில்லை. ஓடிக் கொண்டிருக்கும் புகை வண்டியில் இருந்து யாரும் குதிப்பதும் இல்லை. இவைகள் அறிவுக்குப் பொருந்தாது.

**"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது**
**அஞ்சல் அறிவார் தொழில்"** (428)

எதையுமே சிந்தித்து செயலாற்றும் நல்ல அறிவு வேண்டும். அறிவு இருப்பவனாகின் அவன் பொருட்டு

தன் வீட்டிற்கும் தன் நாட்டிற்கும் என்றும் ஆபத்து வருவது இல்லை.

அறிவு தனக்கும் அடுத்தவருக்கும் பயன்பட வேண்டும். குறுக்கு வழியில் பொருள் சேர்க்க— தேசத் துரோகச் செயல் புரிய— சட்டத்திற்குப் புறம்பானச் செயல் செய்திட— தன் அறிவைப் பயன்படுத்துதல் அறவே கூடாது.

மனித சமுதாயத்தில் ஆணாயினும், பெண்ணாயினும் அன்பு இல்லாத உள்ளமாக இருத்தல் கூடாது. மனித வாழ்க்கைக்கு அன்பின் காரணமாக பல நன்மைகள் ஏற்படும். அன்பு இல்லாத மனிதனை உயிர் உள்ள உடம்பாகக் கூட கருதுதல் கூடாது. எலும்பின் மேல் சதையுடன் தோல் போர்த்த உருவமாகத்தான் கருத வேண்டும்.

**"அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு."** (80)

எல்லாம் இருந்தும் அன்பு இல்லையென்றால் பயன் அற்ற வாழ்க்கை அமைந்துவிடும். பெரியவர்கள் சிறியவர்கள் மீது அன்பு செலுத்த வேண்டும். வளர்ந்த பிறகு பெற்றோர்கள் மீது பிள்ளைகள் அன்பு செலுத்த வேண்டும். தாய் தனது பிள்ளைகள் மீது செலுத்தும் அன்பு போல் மற்ற பிள்ளைகள் மீதும் அன்பு செலுத்த வேண்டும்.

மாணவர்கள் தம்மோடு சேர்ந்து படிக்கும் பிள்ளைகளின் மீது அன்பு செலுத்த வேண்டும். தன்னிலும் ஏழ்மை நிலையில் இருப்போரிடம் அவசியம் அன்பு செலுத்த வேண்டும். அந்த அன்பு காரணமாக தானும் சரி நிகராக இந்த உலகில் வாழும் தகுதி உண்டு என்கிற உள்ள உறுதிதனை அவர்களுக்குத் தந்துவிட்டால் ஏழையும் வாழ்வில் உயர்நிலைக்கு வருகின்ற ஊக்கத்தை

அந்த அன்பு தந்து விடும். இதனால் இந்த சமுதாயமே நலம் பெறும்.

**"அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும்."** (71)

எப்படிப்பட்ட தாழ் போட்டும் அன்பை மூடி வைக்க முடியாது.

யாராலும் எந்த நேரத்திலும் மூடி வைக்க இயலாத ஒன்று அன்பு. தன்னுடைய கண்ணீர் மூலமாகவே உலகிற்கு காட்டிவிடும் அன்பு. பொதுவாக அன்பு நல்வழியினில் மாற்றும் சக்தியுடையது. அன்பு இல்லாதவன் உயிர் அற்ற உடலுக்கு ஒப்பாவான்.

உலகினில் எல்லா இன்பங்களும் பெற்று எந்தவித குறையும் இன்றி வாழுகின்ற யாராயினும் அவர் தன் உள்ளத்தில் அன்பு குடிகொண்டவராக இருந்தாக வேண்டும். அப்படிப்பட்டவர்தான் அதன் பயனான இன்பத்தை அடைய வல்லவராக ஆகியிருக்க முடியும்.

அன்பு உள்ளவரை சுற்றார், உற்றார், பெற்றோர், பிள்ளைகள் அனைவருமே புகழ்வர். அடுத்தவர்க்கு தீது எண்ணும் இதயம் அன்பு உள்ளத்திற்கு வருவது இல்லை. அதனால் அன்பு உள்ளத்தவனை எல்லோருமே புகழ்வர். மற்றவர் புகழ வாழ்வதால் துன்பம் அவனைச் சாருவ தில்லை. வாழ்வில் சிறப்பெய்த துன்பம் வராமல் இருந் தால் அதைவிடப் பயன் வேறேது ?

நாம் வளர்க்கும் பிராணிகளிடம் கூட நாம் அன்பு செலுத்த வேண்டும். அவைகளுக்கு நாம் காட்டும் கனிவும் அன்பும் அந்தப் பிராணிகள் கூட நம்மிடம் நன்றியுடைய தாக இருக்கும். இல்லார் உள்ளார் யாராயினும் குறிப்பாக உடல் நலம் குன்றியவர்களிடத்தில் நாம் காட்டும் அன்பு

அவர்கள் நோய் குறைவதற்குப் பெரிதும் பயன்படும். அவர்களின் ஆயுளைக்கூட நீடிக்க அன்பு பயன்படும்.

உடம்பின் அகத்து உறுப்பாகிய அன்பு இல்லாத வர்க்கு உடம்பின் புறத்தே உள்ள அழகான தோற்றம் எல்லாம் என்ன பயன்தரும்? அன்பிற்காக ஏங்கும் பல உயிர்களை நாம் அன்றாடம் காண்கிறோம். நமது அன்பு அடுத்தவர்களுக்குப் பயன்படுகிறது என்றால் அதைவிட மகிழ்ச்சி வேறு என்ன இருக்க முடியும். மனித வாழ்க்கை யில் சிறப்பான வாழ்வு அமைய அறிவும் அன்பும் மிக மிக இன்றியமையாதது ஆகும்.

—நன்றி : 'குறளமுது'

# 32. மகாவீரர் அறநெறி

இவ்வுலகில் வாழும் ஒவ்வொருவருக்கும் அவரவர் களின் ஊழ்வினைப்படியே இன்ப துன்பங்கள் உண்டா கும். இந்த ஊழ்வினையிலிருந்து விடுதலை பெற்றால்' முக்தி பெறுவது உறுதியாகும். எனவே ஊழ்வினையி லிருந்து விடுதலை பெற்று முக்தியடைய மும்மணிகளை மக்கள் கடைபிடித்து ஒழுகவேண்டும்.

மும்மணிகளுள் முதலாவது நன்னம்பிக்கை என்பது. மகாவீரரின் போதனைகளிலும் மெய்ஞானத்திலும் உறுதி யான நம்பிக்கை கொண்டிருப்பதாகும். இவ்வுலகைப் படைத்த கடவுள் ஒருவர் உண்டென்பது தவறு என்றும் உலகம் எண்ணற்ற உயிர்களுடன் தானாக இயங்குகிறது என்றும் பற்றறத் துறந்த துறவறமே ஊழ்வினையையும் அதன் பயனாக ஏற்படும் மறு பிறவியையும் ஒழிக்கும் ஆற்றலுடையது என்றும், உலக வாழ்வை வெறுத்து உண்ணா நோன்பு இருந்து உயிர் நீப்பதே முக்தி பெறச் சிறந்த வழியென்றும் அறிந்து கொள்வதே 'நல்லறிவு' ஆகும்.

எவ்வுயிரையும் கொல்லாமை, பொய் கூறாமை, களவாடாமை, உலக இன்பங்களில் ஆசையில்லாமை, ஐம்புலன்களையும் அவற்றின் வழியே செல்ல விடாமை, ஆகியவை 'நல்லொழுக்கம்' ஆகும். இந்த நல்லொழுக்க முறைகள் ஐந்தும் பஞ்ச தர்மங்கள் என வழங்கப்பட்டன.

மகாவீரர் போதித்த கோட்பாடுகளில் சாதி வேற்று மையோ வேறுபாடுகளோ இல்லை. எல்லா உயிர்களிடத்

தும் அன்பு காட்டித் துன்புறுத்தாமையைக் கடைபிடித்து, மனம், மெய், மொழிகளில் தூய்மையுடையவராய் இருத்தல் வேண்டும்.

உலகப்பற்றைத் துறந்து உடலை வருத்தி நோண்பு களை மேற்கொண்டால் உண்ணா நோண்பிருந்து உயிர் விட்டால் பிறவித் தளைகளிலிருந்து விடுபட்டு முக்தி அடைவது உறுதி என்பது சமண சமயக் கொள்கையாகும்.

நிலம், நீர், தாவரங்கள், உலோகங்கள் முதலிய வற்றிற்கும் உயிர் உண்டு. எனவே எவ்வுயிர்க்கும் தீமை செய்யாதிருத்தல் மிக இன்றியமையாதது ஆகும்.

சாதிப் பிரிவுகள், கடவுள் கொள்கை, உருவ வழிபாடு முதலியவை மகாவீரர் கடுமையாக எதிர்த்த கொள்கை. ஜீவாத்மன் சித் சொரூபம் என்பதும், ஆனந்த சொரூபம் என்பதும் இவர் கொள்கை. இயற்கையாகிய உடலில் உயிர் பொருந்தியிருப்பதால் ஜீவாத்மன் தனது உண்மை உருவத்தை முற்றும் உணர்வதில்லை. தவத்தால் உடல் உணர்வை வெல்லும் அளவு ஆத்ம போதம் மேலோங்கு கிறது. உடலைப் பட்டினிப் போட்டும் துன்புறுத்தியும் ஆத்ம தியானம் பண்ணும் அளவு மனிதன் விரைந்து மேல் நிலைக்குப் போகிறான். உடல் தளையிலிருந்து முற்றும் விடுபடுவது முக்தி. . சுய முயற்சியால் தவம் செய்கிறவன் முக்தி பெறும் தகுதிக்கு உரியவன் ஆகிறான்.

அறம் அல்லது தர்மம் எல்லா மதங்களுக்கும் பொதுவானதே. ஆனால் ஜைனர்கள் இதனை அனுசரிக் கும் முறைக்கு 'ஜினதர்வம்' என்று பெயர். அறம், இரத்தினத்திரயம், தவம் ஆகியவைகளைத் தீவிரமாக ஒழுகுவதற்கு ஏற்ப மனிதன் தர்மத்தையும் சம்சார உருவ மாக இருக்கும் இயற்கையையும் வெல்லுகிறான். அங்ஙனம் மேல்நிலை அடைகிறவர்களை அருகதர்கள் என்று அழைக்கின்றனர். தகுதி வாய்ந்தவர்கள் என்பது அதன் பொருள்.

# 33. ஆதி சங்கரரின் அறநெறி

1. அறிவற்றவனே ! இறைவனையே எண்ணி அழு. உன் மரண காலத்தில் நீ செய்த பாப வினைப் பகுதி உன்னைக் காப்பாற்றாது.

2. விவேகம் இல்லாதவனே ! பணம் சேர்க்கும் பேராசையை விட்டு விடு. மனத்தில் பேராசை யற்ற உத்தமமான எண்ணத்தைக் கொள். உனக்குக் கிடைத்த பொருளைக் கொண்டு திருப்தியாயிரு.

3. மாதர்களின் அங்கங்களைப் பார்த்து மோகம் கொள்ளும் வேகத்தை அடையாதே. அது மாமிசம், கொழுப்பு முதலியவைகளால் உண்டானது. இதனையே அடிக்கடி மனத்தில் சிந்தனை செய்.

4. தாமரை இலையை அடைந்த நீர் துளியானது மிகவும் சஞ்சலமானது. அது போல நமது ஆயுளானது மிகவும் சபலமானது; நிலை யில்லாதது. எல்லா நிலைகளிலும் வியாதி, அகங்காரம், சோகம் இவைகள் பீடிக்கின்றது என்பதை அறிந்து கொள்.

5. பணம் சம்பாதிக்கும் வரையில் தான் உன் சுற்றத் தார்கள் உன்னைச் சூழ்ந்து உன்னிடம் பிரிய முள்ளவர்களாக இருப்பார்கள். உன் உடல் தளர்ந்தால் உன்னுடைய உடல் நலம் விசாரிக்க எவரும் வரமாட்டார்கள்.

6. உன் உடலில் மூச்சுக் காற்று உள்ள வரையில் எல்லோரும் உன் நல நிலையினை அன்புடன் விசாரிப்பார்கள். மூச்சு உடலை விட்டுப் பிரிந்தால் உன் மனைவி முதல் அனைவருமே அந்த உயிரற்ற உடலைக் கண்டு அஞ்சுவார்கள்.

7. சிறுவனாக இருக்கும் போது விளையாட்டிலும், வாலிபத்தில் யுவதியையும், கிழ வயதில் கவலையிலும் நாம் ஆழ்ந்திருக்கிறோம். இறைவனிடத்தில் ஒருவருக்கும் ஈடுபாடு இருப்பதில்லை.

8. உன்னுடைய மனைவி யார்? உன்னுடைய பிள்ளைகள் யார்? நீ யாருடையவன்! நீ யார்? எவ்விடத்திலிருந்து வந்திருக்கிறாய்? இறையே ஜீவாத்மாவாக விளங்குகிறது என்ற உண்மையை அறி.

9. நல்லோர்களின் சேர்க்கையால் பற்றின்மையும், பற்றின்மையால் மோகமற்ற நிலைமையும், மோகமற்ற நிலையால் சஞ்சலம் இல்லாத ஞானமும், சஞ்சலமில்லாத ஞானத்தால் முக்தி நிலையும் ஏற்படுகின்றன.

10. வயதான மனிதனுக்கு காம விகாரங்கள் இல்லை. நீர் வற்றிய ஏரிக்கு ஏரியென்று பெயரில்லை. ஏழைகளுக்குச் சுற்றம் இல்லை. அது போல உண்மை அறிந்தவனுக்கு உலகம் என்று ஒன்று இல்லை.

11. பொருள், சுற்றத்தார், யௌவனம் இவைகளைப் பற்றிய கர்வம் கொள்ளாதே. இமை கொட்டும் நேரத்தில் காலம் இவைகளையெல்லாம் கொள்ளை கொண்டு விடும். மாய உலகத்தைத் துறந்து இறை நிலையை அடைவாயாக.

12. பகலும், இரவும், மாலையும், விடியற்காலமும் ; வசந்த காலமும், இலையுதிர் காலமும், குளிர் காலமும், மழைக் காலமும் திரும்பித் திரும்பி வந்து கொண்டேயிருக்கின்றன. காலமானது விளையாடுகிறது. உனது ஆயுளானது கழிந்து கொண்டே வருகிறது. ஆனால் ஆசை மட்டும் விடுவதில்லை.

13. மனைவி, பணம் இவைகளைப் பற்றிய கவலை உனக்கு எதற்கு ? பித்தம் பிடித்தவனே ! இந்த மூன்று உலகிலும் ஏழை மக்களில் சேர்க்கை ஒன்றே சம்சார சமுத்திரத்தைத் தாண்டுவதில் ஓடமாக ஆகிறது.

14. சடைமுடி தரித்தவனானாலும், முழு மொட்டை யாய் இருந்தாலும், முடியினை அழகாக வாரி முடித்தவனானாலும், காவி உடைகள் அணிந்து பல வேடங்கள் பூண்டவனாக இருந்தாலும் எவன் ஒருவன் இறை தத்துவத்தை அனுபவத்துக்குக் கொண்டு வரவில்லையோ அவனது மேற்கூறிய வேடங்கள் எல்லாம் வயிற்றின் பொருட்டே யாகும்.

15. தேகம் தளர்ந்து விட்டது. தலை வெளுத்து விட்டது. வாய் பல்லற்றும் போய் விட்டது. தடியைப் பிடித்துக் கொண்டு நடக்கிறான் கிழவன். ஆயினும் ஆசை அவனை விடுவதில்லை.

16. முன்புறத்தில் நெருப்பும் பின் புறத்தில் சூரியனும் இருக்கின்றன. இரவில் முழங்காலில் முகத்தை வைத்துத் தூங்குகிறான் ஏழை. கையில் பிச்சை வாங்கி உண்பவனாய் மரத்தடியிலேயே இல்லறம் செய்பவனாய் இருக்கின்றான். அப்படியிருந்தும் ஆசை விலகவில்லை. தவமும், துறத்தலும் ஆசையை அடக்கும் என்பது உண்மையானாலும்

அந்த உண்மையை உணராத வரை ஆசை அழியாது.

17. கங்கையில் நீராடவும், பல யாத்திரைக்கும் போகிறான். விரதங்கள் இருக்கிறான். தானம் செய்கிறான். ஆனால் அவன் ஆத்ம ஞானம் இல்லாதவனாய் இருந்தால் நூறு பிறவிகள் எடுத்தாலும் அவன் முக்தியை அடைய முடியாது.

18. பொருட் செல்வத்தைப் பயனற்றதாக எப்பொழுதும் எண்ணிக் கொள். அந்தப் பொருளாலே சிறிது சுகம் கூட இல்லை. பணம் படைத்தவர்களுக்குப் பிள்ளையிடத்திலும் கூட பயம் இருக்கிறது. பணத்தை ஆட்கொல்லி என்று சொல்லுவார்கள்.

இது ஆதி சங்கரர் எழுதிய பஜகோவிந்தம் எனும் வடமொழி நூலின் சுருக்கத்தின் தமிழாக்கம்.

"உயிரும் கடவுளும் ஒன்றே. அவை வெவ்வேறு அல்ல. கடவுள் ஒருவரே அழிவில்லாதவர். மற்றவையெல்லாம் மாயை" இது சங்கரரின் கொள்கை. இது 'அத்வைதம்' எனப்படும்.

"ஒவ்வொருவரும் தம்மை அறிதல் வேண்டும். உண்மையே பேசி அதன்படி நடக்க வேண்டும். உயிர்களிடத்து அன்பாய் இருத்தல் வேண்டும். உயர்ந்த எண்ணம் கொண்டு ஒழுகல் வேண்டும்."

நமது நாட்டு ஆன்றோர்களிலும் சான்றோர்களிலும் ஆதி சங்கரர் தான் இளம் வயதிலேயே இயற்கை எய்தியவர். அவர் வாழ்ந்த காலம் முப்பத்திரண்டு ஆண்டு காலங்களே !

திரு. இராமாநுஜரின் அறநெறியும் திரு. மத்துவர் அறநெறியும் இவற்றிலிருந்து பெரிய மாற்றங்கள் ஏதுமில்லை. 'விசிஷ்டாத்வைதம்' என்று இராமாநுஜர் சித்தாந்தமும், 'துவைதம்' என்பது மத்துவர் சித்தாந்தமும் ஆகும்.

# 34. தாயுமானவர் அறநெறி

> **என்று உளைநீ அன்று உளம்யாம் என்பது என்னை?**
> **இதுநிற்க, எல்லாம்தாம் இல்லை என்றே**
> **பொன்றிடச் செய் வல்லவன்நீ, எமைப்படைக்கும்**
> **பொற்பு உடையாய் என்னின், அது பொருந்திடாதோ?**

ஜீவாத்மாக்கள் பரமாத்மாவிற்கு அந்நியமானவைகள் அல்ல. பரமாத்மாவே எண்ணிறந்த ஜீவாத்மாக்களாகத் தம்மை விளக்கிக் கொண்டிருக்கிறது. கடல் அலைகளாக வடிவெடுக்கிறது. கடல் இருந்தால் அலைகளும் இருக்கும். கடல் என்று இருந்ததோ அன்று அலைகளும் உண்டு. இங்ஙனம் பரமாத்மா என்று இருந்ததோ அன்று ஜீவாத்மாக்களும் உண்டு. பரமாத்மா இல்லாத காலம் இல்லை. எனவே ஜீவாத்மாக்களும் இல்லாத காலமும் இல்லை. பரமாத்மாவுக்குத் தோற்றமும் ஒடுக்கமும் இல்லை. ஜீவாத்மாக்களுக்குத் தோற்றமும் ஒடுக்கமும் உண்டு. இக்கருத்தே 'என்று உளை நீ அன்று உளம் யாம்' என்பது.

நமக்கு விழிப்பும் உறக்கமும் நாள்தோறும் தேவைப் படுகின்றன. விழிப்பு நிலையில் செயல் புரிகின்றோம். செயல் புரிகின்றபோது உடலுக்கும் உள்ளத்திற்கும் களைப்பு உண்டாகிறது. அக்களைப்பைப் போக்குவதற்கு உறக்கம் தேவைப்படுகிறது. ஜீவர்கள் வினைப் பயனைப் போக்குவதற்காக இவ்வுலகுக்கு வந்திருக்கிறார்கள். கொஞ்ச நாட்கள் வாழ்ந்திருந்தவுடன் இவ்வுடலை இறைவன் அழித்து விடுகிறான். இவ்வுலகில் தோன்றிய பொருள்கள் அனைத்திற்கும் அழிவு உண்டு.

உயிர்களுக்குத் தோற்றத்தையும், அழிவையும் இறைவன் ஏன் தருகின்றார் என்னும் கேள்வி எழுகின்றது. வினைப் பயனை ஒழிப்பதற்காக உயிர்களைத் தோற்றுவிக்கின்றார். வினைப் பயனால் அலுப்புண்டு போன உயிர்களுக்கு ஓய்வு தருவதற்காக அவைகளை ஒடுக்குகின்றார். இங்ஙனம் ஆக்கல், அழித்தல் என்னும் தொழிலை இறைவன் விளையாட்டாகச் செய்து வருகிறார். இக்கருத்தினை தாயுமானவர் 'எல்லாம் தாம் இல்லை என்றே பொன்றிடச் செய் வல்லவன் நீ, எமைப் படைக்கும் பொற்பு உடையாய்' என்பதில் விளக்குகின்றார்.

இறைவன் இருக்கும் காலமெல்லாம் ஜீவர்களும் உண்டு. ஜீவாத்மா தோன்றி மறைந்து இறுதியில் முக்தி என்னும் முடிவை அடைகின்றது. ஜீவன் இறைவனோடு லயமாவதை முக்தி என்கிறோம். அந்நிலையில் ஜீவனுக்குத் தனிச் செயல் இல்லை. உப்பால் செய்த வடிவம் சேரும் போது அது தன் வடிவத்தை இழந்து கடல் மயமாகி விடுகிறது. அங்ஙனம் ஜீவன் முக்தியில் தன் தனி இயல்பை இழந்து பரத்தில் லயமாகி விடுகிறான். அதுதான் ஜீவனுக்கு முடிந்த நிலை. வினை இருக்கும் வரையில் ஜீவன் தோன்றிய நிலையிலும் தோன்றா நிலையிலும் இருந்து வினை முடிந்ததும் பரத்தோடு ஒன்றி விடுகிறான்.

**பெருந்துஜகம் அனைத்தினையும் பொய் பொய் என்று**
**புகன்றபடி, மெய் என்றே போத ரூபத்து**
**இருந்தபடி என்று இருப்பது ? அன்றே அன்றோ**
**எம்பெருமான்! யான் கவலை எய்தாக் காலம்.**

பிரம்மம் சத்தியம் ஜகத்மித்தை என்பது வேதவாக்கு. கடவுள் ஒருவர் தாம் மெய்ப் பொருள். பஞ்ச பூதங்களாலான இப்பிரபஞ்சம் பொய்ப் பொருள் என்பது அவ்வாக்கின் பொருள். உலகம் அநித்திய மென்பது நமக்கு ஓயாது புகட்டப்படுகின்றது. சான்றோர்கள் அனைவரும் இவ்வுண்மையை வலியுறுத்திக் கூறுகின்றனர். பன்முறை

நாம் அதைக் கேட்ட பொழுதிலும் அது நித்தியமென்று எண்ணியே அதனோடு தொடர்பு வைக்கின்றோம். பண்படாத மக்கள் நிலையற்ற உலகத்தை நிலைபெற்ற உலகம் என்று எண்ணி அதில் பற்று வைக்கின்றனர். இயற்கையில் எவ்வுயிரை அல்லது எப்பொருளைப் பார்த்தாலும் அது அழியும் தன்மையுடையது என்ற உண்மையை இயற்கை ஓயாது புகட்டிக் கொண்டிருக்கிறது.

வளரும் வாலிபன் மரணத்தை நோக்கி வேகமாய் ஓடிக் கொண்டிருக்கிறான். நேற்று பச்சிலையாய் இருந்தது இன்று உதிர் சருகு ஆகிவிட்டது. சற்று நேரத்திற்கு முன்பிருந்தவர் இப்பொழுது பிணமாய்க் கிடக்கிறார். இந்நிகழ்ச்சிகளெல்லாம் உலகம் அநித்திய மென்பதை அனுபவ ரீதியில் நமக்குப் புகட்டுகின்றன. இதை உணராத மக்கள் அநித்திய உலகத்திலிருந்து நித்திய சுகத்தைப் பெறமுடியும் என்று எண்ணுகின்றனர்.

உலகம் பொய் என்பதை உணர்ந்து அதிலிருந்து மனத்தை விடுவிப்பதற்குப் பதிலாக அதில் அகப்பட்டுக் கொண்டு தங்களை அறிவாளிகள் என்று எண்ணிக் கொண்டு செயல்படுகின்றனர். அவர்களுடைய அறிவின் மையையே அது காட்டுகிறது.

உண்மையான ஆத்ம சாதகர்கள் உலகம் பொய் என்பதை ஏற்றுக் கொள்ளுகின்றனர். இதனைத் தாயுமானவர் "பொருந்து ஜகம் அனைத்தினையும் பொய் பொய் என்று புகன்றபடி, மெய் என்றே போத ரூபத்து இருந்தபடி" என்பதில் குறிப்பிடுகின்றனர்.

ஆமை தன் அவயங்களை ஓட்டுக்குள்ளே இழுத்துக் கொண்ட பிறகு ஓட்டை எவ்வளவு தான் அடித்தாலும் அது உள்ளே பத்திரமாக இருக்கும். மனம் ஆத்ம சொரூபத்தில் லயித்து விட்ட பிறகு உலக ஆர்பாட்டங்கள் எவ்வளவு கவர்ச்சிகரமானவையாக இருந்தாலும் அவற்றினிடத்து மனம் செல்லாது. உலகம் அநித்தியமானது.

ஆத்மா ஒன்றே நித்தியமானது. அநித்தியமான உலகத்தை உதறித் தள்ளிவிட்டு நித்தியமான ஆத்ம சொரூபத்தில் நிலைத்திருக்கும் ஆன்மீக உணர்வு விழித்தெழும் காலம் வரும். அவ்விழிப்புணர்ச்சியில் யாண்டும் நிலைத்திருக்க தவ வாழ்வு துணைபுரியும்.

ஆன்மீக விழிப்புணர்வில் நிலைத்து நிற்கும் காலம் என்று வருமோ அன்று கவலைகள் துன்பங்கள் அடியோடு ஒழிகின்றன. அக்காலம் விரைவில் தமக்கு வரவேண்டுமென தாயுமானவர் பிரார்த்திக்கிறார். "என்று இருப்பது? அன்றே அன்றோ எம்பெருமான்! யான் கவலை எய்தாக் காலம்" என்பதில் இக்கருத்து புலனாகிறது.

அழிந்து போகும் உடலையும் உலகத்தையும் குறித்து ஏன் கவலைப்பட வேண்டும்? ஆன்மீக விழிப்பு! இது ஒன்றே நமக்கு வேண்டும். அற்ப உடலை அலங்கரிப்பதில் வீண் காலம் போக்காதீர்கள். அழியும் உடலை அழியா ஆத்ம உணர்வைப் பெறுவதற்குப் பயன் படுத்துங்கள்.

— நன்றி : 'தர்ம சக்கரம்'

# 35. யோகி வேமனா அறநெறி

### பிறப்பு

*பிறப்புக்கு மூலம் எது என்றாலும், இறப்புக்குக் காரணம் என்ன என்று இதுவரை நம்மால் உணர முடிவதில்லை. விஞ்ஞான வளர்ச்சியில் என்னதான் நாம் இப்படித்தான் பிறந்தோம் என்று நிர்ணயித்தாலும் இறந்து விடுவதற்கான காரணமோ— இறந்தாரைப் பிழைக்க வைக்கும் விஞ்ஞானமோ வரவில்லை.*

*பிறப்பின் முதலும் இறப்பின் முடிவும் நம்மால் உணர முடியாத இயற்கையாகவே உள்ளது. ஆனால் மனிதன் இடை நாட்களில் அதாவது அவன் வாழ்கின்ற வாழ் நாளில் அவன் ஈட்டிய பொருட்கள், கட்டிய கட்டிடங் கள், பெற்ற செல்வங்கள் அத்தனையும் கண்டு தலை கனத்து கர்வத்தோடு இந்தக் கட்டிடம் என்னுடையது இந்தக் கார் பங்களா என்னுடையது என்று எண்ணி மகிழ்வானேயன்றி வேறறியான். செல்வங்களைப் பற்றிச் சிந்திக்கும் மனிதன் தன்னுடைய முடிவைப் பற்றி சிந்தித் தால் மனித வாழ்வை உணர்ந்தவனாவான்.*

### நிலையான புகழ்

*ஒருவன் தன்னை ஈன்ற தாய் தந்தைக்கு நல்ல பெயர் கிட்டும் வகையில் நல்லவனாக வளர்ந்து வாழ்வதும், தன்னை விட எல்லா வகையிலும் தரத்தால் குறைந்த வராயினும் அவர்களிடம் அன்புடன் இருப்பதும், தன்னை என்றும் நம்பி வாழும் நலிந்த வாழ்வு கொண்டவரிடம் பரிவுடன் இருப்பதும், செல்வத்தில் உயர்ந்தாரிடமும்*

பொறாமையுணர்ச்சி கொள்ளாது அவர்களையும் மதித்து நடப்பதும் மிக நல்ல குணங்களாகும். அப்படிப்பட்ட குணமுள்ளவனை நாடே புகழும். நல்லோரும் புகழ்வர்.

அவன் உயிரோடு இருக்கும் போது புகழப்படுவது போலவே தான் இறந்து பல ஆண்டுகள் ஆயினும் அவன் குணம் மக்களால் போற்றப்படும். எனவே எதைச் செய்தாலும் எப்படிச் செய்தாலும் இருக்கும் போதும், இல்லாதபோதும் புகழப்படுவதற்கு பயன்படுமாறாவது மனிதன் நலம் செய்தல் வேண்டும்.

**நிலையுணர்தல்**

காட்டுக்கே அரசன் எனப் பெயர் பெற்ற சிங்கமே யாயினும் தான் வலிவிழந்த நேரத்தில், நடந்து சென்று உணவருந்த கூட இயலாத நேரத்தில், நோயோடு போராடும் போது, பார்க்கவும் கேவலமான சொரிநாய்க் கூட அந்தக் காட்டரசனான சிங்கத்தைப் பார்த்து குரைக்கும். அந்த குரைச்சலைக் கண்டு சிங்கம் உள்ளத் துள்ளே குமுறும்.

அது போல தான் தன் நிலையில் இருந்து கீழ் நிலைக்கு வந்துற்ற போது, வறுமைக்கு ஆளான போது, அல்லது நோயுற்ற நிலையில் தன்னைப் பார்ப்பவர் ஏதோ அவர் களுக்குத் தெரிந்த முறையில் நீதி கூறுவர், உபதேசம் செய்வர், புத்தி புகட்டுவர், அனுபவத்தின் விளைவுகளை விளக்க முற்படுவர். அந்த நேரத்தில் அவர்கள் மேல் எரிந்து விழுதல் கூடாது. நமது நிலையினை நாம் நன்றாக உணர்ந்து தன்னிலையினை உயர்த்திக் கொள்ள முயல வேண்டுமேயன்றி வீணாக அனைவரிடமும் தன் பகை யுணர்ச்சியினைக் காட்டிக் கொள்ளக் கூடாது. எப்போதும் தன் நிலையுணர்ந்தே இருக்க வேண்டும்.

**நலம் கருதுதல்**

பொதுவாக மக்கள் மனதில் நல்லவற்றின் ஆதிக் கத்தை விட தீய சக்தியின் ஆதிக்கமே அதிகமிருக்கும்.

அதன் விளைவே மனமும் உடலும் மயங்கி அதில் ஒரு இன்பம் காண தன் செல்வத்தை கள்ளுக்கு ம(து) வேண்டு மானாலும் செலவிடுவர்.

பிறருக்குத் தெரியாது தான் சேர்த்து வைத்த பொருள் வைக்கும் இடம் சரியாக பாதுகாக்க முடியாத காரணத் தால் அந்தப் பொருள் கொள்ளையடித்துக் கொண்டு சென்றாலும் அஞ்ச மாட்டார்கள்.

ஆனால் தன் உடல் பாழாகாது நலம் பெற நல்ல வளமான உணவு வகையினை ஏனோ தேர்ந்தெடுத்து உண்ணவும் அறிய மாட்டார்கள். இவைகளை விட இன்பத்தைத் தரும், உடலை விற்கும் விலைமாதர்க்குச் செலவழிப்பர். ஏனெனில் அவர்களிடம் தான் பெறும் இன்பம் இவ்வுலகில் எங்கும் இல்லை என்கின்ற தவறான கருத்தே அவர்கள் உள்ளத்தில் வெகுவாக ஆட்கொண்டு இருக்கும்.

ஆனால் இவர்கள் அனைவருமே பலன்- பயன் இவை களை ஆராய்ந்து பார்ப்பது இல்லை. நல்லவைகள் எல்லாம் புண்ணியம் என்பது, தீயவைகள் எல்லாம் பாபம் என்பது. எனவே தனியாக எந்த முயற்சியும் செய்ய வேண்டியதில்லை. மனிதன் நல்லவைகளையே செய்து வந்தால் புண்ணியம் என்பது அவனைத் தானாகத் தொடர்ந்து வந்துவிடும்.

**ஆசையை அடக்குதல்**

எண்ணிக்கையில் அடங்காத பல எண்ணங்கள் எப் போதும் மனித உள்ளத்தில் தோன்றி மறைந்த வண்ணமே இருக்கும். அதன் விளைவுதான் அடிக்கடி மனித குணம் மாறுகின்ற ஒன்றாகவே உள்ளது. அதிலும் பெரும்பாலும் ஆசையின் காரணமே எண்ணத்தின் பிரதிபலிப்பாக அமையும். போதும் என்கின்ற மனோநிலை எப்பொழு தும் மனிதனுக்கு எழுவதில்லை.

கிடைத்ததைக் கொண்டு நிம்மதியாக இருக்க ஏனோ மனிதன் தயங்குகிறான். மேலும் மேலும் பலவிதத் தேவைகளை மனிதன் தேடுகிறான். அதன் காரணமாகவே எப்போதும் அலைகிறான்.

நாய் எப்போதும் ஓர் இடத்தில் நிற்காது. அங்கும் இங்கும் அலைந்தபடியே இருக்கும். அதன் மன நிலைக்கு எங்கும் அமைதி கிட்டுவதில்லை. அப்படித்தான் மனிதனும் ஓர் இடத்தில் மனதை நிலை நிறுத்தாது அலைய விடுகிறான். ஒரே இடத்தில் நிலையாக தன் மனதைக் கட்டுப்படுத்த வேண்டுமாயின் ஆசையை அடக்க வேண்டும்.

**நெஞ்சின் நிலை**

தீயவை நீக்கி நல்லவைப் பெற வேண்டுமென்பதே பொது நோக்கம். கரும்பு ஒன்று நமக்குக் கிடைத்தால் மிகவும் மகிழ்ச்சியாகப் பெற்று தின்று விடுகிறோம். ஆனால் அதில் சொத்தை எங்கு உள்ளது என்று அறிந்து அந்த பாகத்தை வெட்டி எறிந்து விட்டு பின்பு நாம் விரும்பும் வரை மென்று இனிய சாற்றைப் பெற்றுத் துப்பி விடுகிறோம்.

கரும்பைப் பெற்றதுமே எங்கெல்லாம் சொத்தை யுள்ளது என்று முதலில் அறிந்த பின்பே தின்ன முயல் கிறோம். ஆனால் மனித உள்ளத்தில் நல்லவை எங்கு உள்ளது, தீயவை எங்கு உள்ளது என்று அறிய முடியாத தால், அதிலும் துரோக சிந்தனை எப்படி எங்கே உள்ளது என்பதை அறிய முடியாததால் பலரிடம் பலமுறை ஏமாற வேண்டிய நிலைக்கு ஆளாகிறோம்.

இதுவரை எந்த விஞ்ஞானமும் அறிந்து கொள்ள முடியாதது நெஞ்சின் நிலை தான்! நெஞ்சம் என்ன நினைக்கிறது என்பதை மட்டும் நாம் புரிந்து கொள்ள முடிவதில்லை.

—நன்றி : **'வேமன் சொல்'**

# 36. பட்டினத்தார் அறநெறி

அன்ன விசாரம் அதுவே
விசாரம் அது ஒழிந்தால்
சொன்ன விசாரம் தொலையா
விசாரநல் தோகையரைப்
பன்ன விசாரம் பலகால்
விசாரமிப் பாவி நெஞ்சுக்(கு)
என்ன விசாரம்வைத் தாய்இறை
வாகச்சி ஏகம்பனே.

*பொய்யாகிய தேகத்தை வளர்ப்பதற்காகத் தேடும் அன்ன விசாரமே எனக்குப் பெரு விசாரமாக இருக்கிறது. அவ்விசாரம் ஒருவாறு நீங்கினால் பொருள் தேடி இன்புறச் செய்யும் விசாரம் நீங்காத விசாரமாகும். அது ஒழிந்தால் அழகு வாய்ந்த மயில் போலும் சாயலுடைய பெண்களைப் புகழ்ந்து பேசும் இந்த விசாரம் பல காலத்தும் விசாரமாம். சித்த சாந்தம் அடையாத இப்பாவியின் மனதிற்கு என்ன விசாரத்தினை வைத்தாய் இறைவனே !*

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்
ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ
துங்கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்
லான்பொன்னின் அம்பலவர்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென்
றேயறி வாரில்லையே.

முடிதரித்த அரசர்களும் மற்றும் அநேகமான உயர்ந்த பதவியில் உள்ளவர்களும் இறந்து சுடுகாட்டில் எரிகிற போது ஒரு கைப்பிடி சாம்பலாகி வெந்து, பின்னர் மண்ணாய் ஆவதைக் கண்ணால் பார்த்திருந்தும், மேலும் இவ்வுலகில் வாழ்வதையே நாடுவதல்லாமல் பொன் மய மாகிய அம்பலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமான் திருவடியினையடைந்து நாம் அனைவரும் பிழைக்க வேண்டுமென்று தெரிந்துகொள்வார் இல்லையே !

**அத்தமும் வாழ்வும் அகத்துமட்**
**டேவிழி யம்பொழுக**
**மெத்திய மாதரும் வீதிமட்**
**டேவிம்மி விம்மியிரு**
**கைத்தல மேல்வைத் தழுமைந்**
**தருஞ்சுடு காடுமட்டே**
**பற்றித் தொடரும் இருவினை**
**புண்ணிய பாவமுமே.**

ஒருவன் மறைந்து விட்டால், அவன் சேர்த்து வைத்த செல்வமும் போகமும் வீட்டளவிலேயே நின்று விடும். கண்களில் இருந்து நீர் சிந்தப் புலம்பும் மெல்லிய மாதர் தெருவாயிற் படியளவிலேயே நின்றுவிடும்.தேம்பித் தேம்பி இரண்டு கைகளையும் தலைமேல் வைத்துக் கொண்டு அழும் மக்களும் சுடுகாடு வரையில்தான் வந்து நின்று விடுவர். துணையாக வருவது இரண்டு வினைகளான நல்வினையும் தீவினையும் தான்.

**ஒன்றென் றிருதெய்வம் உண்டென்**
**றிருஉயர் செல்வமெல்லாம்**
**அன்றென் றிருபசித் தோர்முகம்**
**பார்நல் லறமுநட்பும்**
**நன்றென் றிருநடு நீங்காம**
**லேநமக் கிட்டபடி**
**என்றென் றிருமன மேஉனக்**
**கேஉப தேசமிதே.**

மனமே! தெய்வமானது ஒன்றெனவே எண்ணியிரு; அத் தெய்வம் எந்நாளும் உண்டெனவே எண்ணியிரு. மிகுந்த செல்வம் அனைத்தும் நிலையற்றதென எண்ணியிரு. பசித்து வந்தவர் முகத்தைப் பார்த்து அன்னமிடு, நல்ல தருமமும் நட்பும் நன்மையென எண்ணியிரு. நடுவு நிலைமையினின்றும் கோணாமல் நமக்கு முற்பிறவியில் விதித்தபடி கிடைக்கும் என்றிரு, இதுவே உனக்கு உபதேச மாகும்.

**நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியம் தேடி**
**நலமொன்றும் அறியாத நாரியரைக் கூடிப்**
**பூப்பிளக்க எழுகின்ற புற்றீசல் போலப்**
**புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்**
**காப்பதற்கும் வகையறிவீர் கைவிடவும் மாட்டீர்**
**கவட்டு தொல்மரத்திடுக்கில் கால்நுழைத்துக்கொண்டே**
**ஆப்பதனைப் பிடித்தசைத்த பேய்க்குரங்குபோல**
**அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீர்நீரே.**

நாவானது வலி எடுக்கும் அளவுக்குப் பொய்யைக் கூறிப் புதிய செல்வங்களை சேர்த்து நன்மை ஒன்றும்அற்ற மங்கையைக் கூடி பூமியைப் பிளப்பதைப் போல, 'புல புல' என்றும் 'கல கல' என்றும் கூக்குரலிடுமாறு மக்களைப் பெற்று எடுப்பீர் ! அம்மக்களைத் தகுந்த முறையில் காப் பாற்றும் வகையையும் அறிய மாட்டீர்கள். அவர்களைக் கைவிடவும் மாட்டீர்கள். இரண்டு பிளவாகப் பாதிதூரம் பிளக்கப்பட்டு இருந்த பழைய மரத்தின் சந்திலே காலை நுழைத்துக் கொண்டு அந்த பிளவுகளுக்கு மத்தியில் வைக்கப்பட்டிருக்கும் ஆப்பினைப் பிடித்திழுக்கும் குரங்கு போல இல்லறத் தொல்லையில் நீங்கள் கிடந்து வருந்து மாறு அகப்பட்டுக் கொண்டீர்கள்.

இவைகள் பட்டினத்தாரின் பாடல்களில் அவர் குறித்த சில அறநெறிகள். ''காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே'' இது பட்டினத்தாரின் சிறப்பான அறநெறி யாகும்.

# 37. ஔவையார் அறநெறி

''ஈதல் அறம்; தீவினைவிட்டு ஈட்டல்பொருள்; எஞ்ஞான்றும்
காதல் இருவர் கருத்தொருமித்(து)— ஆதரவு
பட்டதே இன்பம்; பரனை நினைந்(து) இம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு''

வறுமையால் வந்து யாசித்தவருக்கு இல்லை எண்ணாமல் ஒரு பொருளைக் கொடுப்பது அறச் செயலாகும்; தீய வழியை விலக்கி நல்ல நெறியில் சேர்ப்பதே நல்ல பொருளாகும். எப்போதும் அன்பால் இணைந்த கணவனும் மனைவியும் ஒருமித்த உள்ளம்கொண்டு ஒருவருக்கொருவர் ஆதரவாக இருப்பதே இன்பமாகும்; இறைவனை எண்ணி மேற் கூறப்பட்ட மூன்றிலும் பற்றை விடுவதே பேரின்பத்தை அளிக்கும் மோட்சத்தை அடைவதற்கு வழியாகும்.

தத்துவ ஞானியாகிய ஔவையார் தமது முடிவான கொள்கைகளாக கொடியது, இனியது, பெரியது, அரியது என்னும் நான்கு தலைப்புகளில் நான்கு பாடல்கள் எழுதியுள்ளார். அதன் பொருள்கள்:

## 1. கொடியது:

இவ்வுலகத்தில் கொடியது எது என்று வினவினால், ஏழ்மையே கொடுமையான அனைத்திலும் கொடியதாகும். அதைவிடக் கொடியது இளமைப் பருவத்திலேயே வரும் ஏழ்மையாகும். அதைவிடக் கொடியது தாங்கிக்கொள்ள இயலாத கொடிய நோயாம். அதைவிடக் கொடியது அன்பு இல்லாத பெண்டிரை மனைவியாகப் பெற்றிருத்தலாகும். அதைவிடக் கொடியது, அந்தப் பெண்டிர் இடும் உணவை உண்பதாகும்.

## 2. இனியது :

ஒப்பில்லாத இனியது யாது எனக் கேட்பின், இனியவற்றுள் இனியது மற்றவர் தொல்லை இல்லாமல் தனியே இருப்பதாகும் : அதைவிட இனியது இறைவனைத் தொழுவது ஆகும். அதைவிட இனியது அறிவுள்ளவரைச் சேர்தலாகும் ; அதைவிட இனியது அறிஞரைக் கனவிலும் நினைவிலும் காண்பதாகும்.

## 3. பெரியது :

எது பெரியது என்று கேட்டால் இவ்வுலகமே பெரியதாகும் ; இந்த உலகமோ நான்முகனால் படைக்கப்பட்டதாகும் ; நான்முகனோ திருமாலின் தொப்புலில் தோன்றியன் ; திருமாலோ அலைகளையுடைய கடலில் பள்ளி கொண்டவன் ; அந்தக் கடலோ அகத்தியரின் உள்ளங்கையில் அடங்குவதாகும். குறுகிய வடிவமுடைய அகத்திய முனிவரோ குடத்தில் தோன்றியவர் ; குடமோ சிறிய அளவுள்ள இவ்வுலக மண்ணால் செய்யப் பெற்றதாகும் ; இவ்வுலகமோ ஆதி சேடனாகிய பாம்புக்குச் சுமையாவதாகும் ; அப்பாம்போ உமையம்மையாரின் விரலில் அணிந்துள்ள கணையாகும் ; உமையம்மையோ சிவபெருமானின் இடப்பக்கத்தில் அடங்கியவள் ; சிவபெருமானோ தொண்டரது உள்ளத்தில் அடங்கியிருப்பவராவார். எனவே சிவத்தொண்டரது பெருமை சொல்லுதற்கு அடங்காத பெரியது ஆகும். இறைவனை விட இறைவனை உண்மையாகத் தொழுகின்ற தொண்டனே உயர்ந்தவன் என்பது இதன் கருத்தாகும்.

## 4. அரியது :

இவ்வுலகத்தில் அரியது என்று கேட்டால் மக்கட் பிறவி எடுப்பது அறியது, அரியது அரியது ; மக்கட் பிறவியை எடுத்தாலும் உடலில் கூனல், குருட்டுத் தன்மை, செவிட்டுத் தன்மை ஆகியவை நீங்கப் பிறப்பது அரிய

தாகும். கூன், குருடு, செவிடு, பேடு ஆகியவை நீங்க ஒருவன் பிறந்தாலும் ஞானத்தையும் கல்வியையும் விரும்புதல் அரியதாகும்; மேற்கண்ட இரண்டையும் விரும்பிய போதும் ஈகை இயல்பையும் நோன்பையும் மேற்கொள்ளுதல் அரிதாகும். அவ்விரண்டையும் மக்கள் செய்வார் எனின் அவர்களை ஏற்றுக் கொள்ள விண்ணுலகமே வழிவிடுமாம். இது ஈதல் இயல்பையும் நோன்பையும் சிறப்பிக்க ஔவையார் காட்டும் உவமை யாகும்.

**''தாயோடு அறுசுவைபோம்; தந்தையோடு கல்விபோம்**
**சேயோடு தான்பெற்ற செல்வம்போம்;—ஆயவாழ்வு**
**உற்றார் உடன்போம்; உடன்பிறப்பாய் தோள்வலிபோம்;**
**பொன்தாலியோடு எவையும்போம்.''**

அன்புடன் உணவை ஊட்டும் தாய் மறைந்ததும் அறுசுவையுடன் கூடிய உணவு கிடைப்பது இல்லை யாகும்; தந்தை மறைந்ததும் பின்னர் மக்கட்குக் கல்விப் பயிற்சி இல்லையாகும்; மக்கள் மறைந்த பின் ஒருவன் பெற்ற செல்வம் நிலை பெறாமல் அழியும்; சிறப்பாக வாழும் வாழ்க்கை சுற்றத்தார் மறைந்தபோது நீங்கி விடும்; உடன் பிறந்தவர் இல்லாதபோது பக்கத் துணை யாலே வருகின்ற தோள் வன்மை இல்லையாகும்; மனைவி கழுத்தில் இருக்கும் பொன்னால் ஆன தாலி போகின் என்றால் தானே போனபின் என்பதே ஆகும். தானே போனபின் என்ன உள்ளது? எல்லாமே போயிற்று அல்லது வாழ்க்கை முடிவுற்றது என்பதே ஆகும். ஔவையார் பல அறநெறிகள் சொல்லியிருப்பினும் சிலவற்றை மேற்கோளாக எடுத்துக் கொண்டோம்.

# 38. இராமலிங்க அடிகள் அறநெறி

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்!
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும்; பொய்மை
பேசா திருக்க வேண்டும்
பெருநெறி பிடித்தொழுகவேண்டும் மதமானபேய்
பிடியா திருக்க வேண்டும்!
மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டும்; உனை
மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும்; நின்கருணை நிதிவேண்டும்; நோயற்ற
வாழ்வில் நான்வாழ வேண்டும்!

இப்பாடலில் இறைவனிடம் நமக்கு என்ன என்ன வேண்டும் என்று கேட்பதில் ஒரு முறையைக் காண்கிறோம். மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று கருவிகளும் செம்மையாய்ச் செயல்பட வேண்டும். நல்லதையே நினைத்து, நல்லதையே பேசி, நல்லதையே செய்வதற்கும் இறையருள் வேண்டும். நாம் மேற்கொண்டுள்ள மதத்தில் அன்பு இருக்க வேண்டும். மதவெறி இருக்கக் கூடாது.

இல்லறத்தில் இருப்போர் மனைவியிடம் அன்போடு இருந்தால்தான் இல்லறம் இனிது நடைபெறும். அதுவே ஆசையாக மாறினால் துன்பம் தரும். இது இறை வழிபாட்டிற்கு இடையூறாக அமையும் என்பது வள்ளலாரின் கருத்து.

வித்து, காய், கனி முதலியவற்றில் தத்துவ விருத்தியும் தாது விருத்தியும் இல்லாதபடியால் இவைகளில் தீமை

யில்லை. இவைகளைப் புசிப்பதால் தீவினை உண்டாக மாட்டாது.

உண்மையே பேசும் உறுதியுள்ளம் படைத்திருக்க வேண்டும். இவ்வித குண நலன்கள் உடையவரே அரசாங்க அதிகாரிகளாக, நல்ல ஊழியர்களாக இருக்கத் தகுதி உடையவர்கள். இவற்றுக்கு மாறான குணங்களைப் பெற்றவர்கள் அரசாங்கத்தில் பங்கு கொண்டால் நாட்டு நலம் பாழாகும். வாழ்க்கையானது அச்சமும் துன்பமு மாய், பசியும் பிணியுமாய், கலகமும் குழப்பமுமாய் முடியும்.

அருள் நயந்த நல்லரசே குடிமக்களுக்கு நலம் பயப்ப தாகும். மக்களின் உயர்வு தாழ்வு ஒழிய வேண்டும். எல் லோரும் சமநிலையுடன் ஒத்த அன்பு கொண்டு சுதந்திர மாய் இணைந்து வாழ்தல் வேண்டும். சமுதாயத்தில் எத்தகைய வேற்றுமையும் இருத்தல் கூடாது. வேற்று மையைத் தவிர்த்து ஒருமைப்பாட்டை வளர்க்கும் நல் லரசே நடைபெற வேண்டும்.

சேர்க்கைக் காலத்தில் வலதுபுறம் சாய்வாகச் சேர்ந் தால் ஆண் குழந்தையும், இடது புறஞ் சாய்வாகச் சேர்ந் தால் பெண் குழந்தையும் உண்டாகும்.

புலால் உண்ணுதல், தெய்வத்திற்கு உயிர்ப்பலி தருதல் ஆகிய தீய பழக்க வழக்கங்களையும் மற்ற மூட நம்பிக்கை களையும் அடியோடு ஒழிக்க வேண்டும்.

மெதுவாகப் பேசு ; அது உன் இரகசியங்களைப் பாது காக்கும். நல்ல எண்ணத்தோடு இரு ; அது உன் நடத்தை யைப் பாதுகாக்கும். உண்மையே சொல் ; அது உன் வார்த்தைகளைப் பாதுகாக்கும். கலந்து யோசனை செய் ; அது உன் சிந்தனையை வளமாக்கும்.

கள்ளுண்பவர்கள் கொடுமையானவர்கள். கள்ளுண் டிருக்கும்போது எதையும் செய்யத் துணிவார்கள். கள்

உண்பவர்கள் பழி பாவத்திற்கு அஞ்சாதவர்கள். அவர்கள் வேசியர் வீட்டு வாசல்கள் தோறும் புகுந்து மயங்கி நிற்பார்கள். பொய் பேசுவார்கள். இவைகளின் இனங்களும் அவர்களிடம் குடிகொள்ளும்.

எப்போதும் பயத்தோடு இருக்கக் கூடாது. அதற்காகப் பயம் இல்லாமலும் இருக்கலாகாது. எப்போதும் மன உற்சாகத்தோடு இருக்க வேண்டும். அஞ்சுவது அஞ்சாமை, கொலை, கோபம், சோம்பல், பொய்மை, பொறாமை, கடுஞ்செயல் முதலிய தீமைகள் ஆகா. உரத்துப் பேசுதல், வேகமாக நடத்தல், ஓடி நடத்தல், வழக்கிடல், சண்டையிடல் கூடா. எந்த விதத்திலும் பிராண வாயு அதிகமாகச் செலவாகாதவாறு கவனத்தோடு பழகுதல் வேண்டும்.

மதம் என்னும் பேயினால் பீடிக்கப்பட்டுப் பேயாட்டம் ஆடுகின்றவர்கள் உள்ளமாகிய மன்றத்தில் அறிவாகிய கடவுள் நடனமிடுவதைக் காணமாட்டார்கள்.

சாதி, சமயம், இனம், நிறம், தேசம், மொழி, நாகரிகம் ஆகிய எந்த வகையிலும் பேதம் பாராட்டக் கூடாது. எல்லா உயிர்களையும் தம்முடைய உயிரைப் போலவே எண்ண வேண்டும். இது வெளி வேடமாக இருந்தால் எவ்வித பயனும் இல்லை.

'மரணமிலாப் பெருவாழ்வு' ஒன்று உண்டென்று நம்பி, அதற்காக முயல்வோமானால் மரணத்தைத் தள்ளி வைக்கும் ஆற்றலையேனும் பெறுவதோடு மீண்டும் பிறவாத பேரின்பத்தை அடைவோம். அதனால் மரணமிலாப் பெருவாழ்வினை நம்பி, அதனை எடுத்துரைக்கும் வள்ளலாரின் அறநெறியினைப் பின்பற்றுவோமாக.

# 39. இராமகிருஷ்ணரின் அறநெறி

ஐம்புலன்களை வெல்வதே வீரம்.

மூடரின் உறவைவிட அறிவாளியின் பகைமை சிறந்தது.

பணத்தைச் செலவிட்டாலும், மனத்தைச் செல விடாதே.

உரிய கூலியைக் கொடுக்காமல் யாரிடமும் வேலை வாங்காதே.

உலகில் நிரந்தர நண்பர்களுமில்லை ; நிரந்தர விரோதிகளுமில்லை.

மனத்தைச் செம்மைப் படுத்துவதற்கு இறைவனை வேண்டிக் கொள்.

இறைவன் தர்மத்தைக் காக்கவும் அதர்மத்தை அழிக் கவும் செய்கிறார்.

குருக்ஷேத்திரம் ஞானபீடமாகவும் இருந்தது. போர்க் களமாகவும் இருந்தது.

தக்க நூல்களைப் படிக்காமலிருப்பது குற்றம், தகாத நூல்களை படிப்பதும் குற்றம்.

அசுர இயல்பை அழிப்பதும், தெய்வீக இயல்பை வளர்ப்பதும் வாழ்வின் குறிக்கோள்.

தர்மத்தை நிலைநாட்டப் போராடு, அதர்மம் அழிய வேண்டும் என்று பிரார்த்தனை செய்.

மனைவி தானம் தருமம் செய்வதாக இருந்தால் கணவனின் அனுமதி பெற்றுச் செய்ய வேண்டும்.

நம்மை பிரம்மமாக உணர்வது ஞானம் ; நம்மை பிரம்மத்துக்கு அந்நியமாக உணர்வது அஞ்ஞானம்.

பிறர் உனக்கு எதைச் செய்ய வேண்டுமென்று விரும்புகிறாயோ, அதைப் பிறருக்கு நீ செய்ய விரும்பு.

தர்மத்தை வளர்ப்பதற்கு ஆதரவாகவும் அதர்மத்தை வளர்ப்பதற்கு எதிராகவும் இறைவன் இருக்கிறார்.

படித்தும், கேட்டும், சிந்தித்தும், தெளிந்தும் செயல்படு ; அனுபவத்தின் மூலம் உண்மையை அறிந்து கொள்.

இறைவனிடம் கஷ்ட நஷ்டங்களைக் கூறி முறையிடலாம். ஞானோபதேசத்தைக் கடைப்பிடிப்பது கடமையாகும்.

வாழ்வை ஒழுங்குபடுத்த வேண்டுமானால் அறிவையும் உணர்வையும் சரியான வழியில் சீர்திருத்திக் கொள்ள வேண்டும்.

தங்களுக்கு அமைந்த கடமைகளை மகிழ்வுடன் சரிவரச் செய்ய வேண்டும். பிறர் கடமைகளில் தலையிட்டுக் குழப்பம் செய்யலாகாது.

தீயை அணைக்க நீர் உண்டு ; வெயிலைத் தடுக்கக் குடை உண்டு ; நோயைத் தீர்க்க மருந்து உண்டு ; விஷத்தைப் போக்க மந்திரம் உண்டு ; மடமைக்கு மாற்று இல்லை.

ஒளியில் இருளுக்கு இடமில்லை ; அங்ஙனம் ஞானக் காட்சியில் அஞ்ஞானத்துக்கு இடமில்லை.

ஆத்மா தான் நீ கற்க வேண்டிய நூல் ; அதைக் கற்றன பிறகு நீ விருப்பம் போல் சாஸ்திரங்களைக் கற்கலாம்.

நீ செய்யும் சாதனையின் மூலம் நாளுக்கு நாள் தேகாத்ம புத்தி தேயவும், ஆத்மபோதம் வளரவும் வேண்டும்.

சிங்கத்தின் பலத்தை மற்றொரு சிங்கம்தான் அறிய முடியும் ; அங்ஙனம் ஞானியை மற்றொரு ஞானி தான் அறிய முடியும்.

மலம் வெளியேறா விட்டால் உடல் கெட்டு விடும் ; தீய எண்ணங்கள் வெளியேறா விட்டால் உள்ளம் கெட்டு விடும்.

குருவினுடைய உபதேசத்தையும், சாஸ்திரத்தினுடைய விதி முறையையும் மனச்சாட்சியின் ஆணையையும் பின் பற்றி நட.

சாதாரண மனிதன் தனக்காக வாழ்கின்றான் ; ஞானியோ பிறருடைய நலனுக்காகவும் தெய்வத்துக்காக வும் வாழ்கின்றான்.

அகிம்சை, சத்தியம், பிரம்மச்சரியம் ஆகியவற்றை வாழ்க்கையில் கடைப்பிடித்து உள்ளத்தைப் பண்பு நிறைந்ததாக்கு.

ஆன்மீக உணர்ச்சியை ஏற்றுக் கொள்ளும் சக்தி நாடி நரம்புகளுக்கும் உண்டாகும் பொழுதுதான் ஆன்மீக வாழ்வு ஆரம்பம் ஆகிறது.

கெட்ட பழக்கத்தை ஒழிப்பதற்கு நல்ல பழக்கத்தை மேற்கொள்ள வேண்டும். ஆசையை ஒழித்து மன அமைதி யைப் பெறு.

காம உணர்ச்சிக்கு மனது இடம் தரும் பொழுது அது தளர்வுறுகிறது ; காம உணர்ச்சி வெல்லப்படும் பொழுது மனம் உறுதி பெறுகின்றது.

அன்பும் நேர்மையும் உள்ள வேலைக்காரன் தன் முதலாளிக்கு மனப்பூர்வமாகப் பணி செய்வது போன்று பக்தியுடனும், சிரத்தையுடனும் கடவுளுக்கு நீ பணி செய்.

இவ்வுலகம் மனத்தின் கற்பனையென்று நீ நினைப் பாயானால் உன் கற்பனையை அழித்து விடு ; உலகம்

கடவுளின் ஏற்பாடு என்று நீ நினைப்பாயானால் அனைத்தையும் கடவுளிடம் ஒப்படைத்து உன்னையும் கடவுளிடம் ஒப்படைத்துவிடு ; உலகத் துயரத்திலிருந்து வில்குவதற்கு அதுதான் உபாயம்.

அறிவை இழந்தவன் நெறி வழுவி விடுகிறான். பக்தியும் பணிவும் கலந்த கல்வியே பண்பட்ட கல்வியாகும்.

சிற்றின்ப வாசனை அகலும் பொழுது சித்தம் தெளிவடைகிறது. பண மோகம், படிப்பு மோகம், மாதர் மோகம் இம் மூன்றும் மனத்தைக் கெடுத்து விடும்.

மனம் இந்திரிய சுகத்துக்கு வசப்படாது இருக்கும் வரையில் நாம் பெருநிலையில் இருக்கின்றோம்.

புதிதாகப் பழகும் நற்பழக்கம் ஆரம்பத்தில் கடினமாக இருக்கும்; நீண்ட நாள் பழகிய பின் அது எளிதாகி விடும்.

புற உலகில் தேடும் இன்பம் தன்னிடத்தே யாண்டும் இருக்கிறது என்று மனம் தெளிபவன் நிறை ஞானி ஆகிறான்.

உலக பந்தத்தை உதறித் தள்ளு ; உலகத்தில் கட்டுப்படாதே ; நலம், தீது இரண்டையும் இறைவனிடத்தில் ஒப்படைத்து விடு.

மனம் மாய்ந்து போகும் வரையில் நாம் விழிப்புடன் இருக்க வேண்டும். இல்லா விட்டால் அது நம்மைக் கீழ்மையின்கண் கொண்டு செலுத்தி விடும்.

வாழ்க்கைக்கு அத்தியாவசியமானப் பொருளைக் கொண்டு திருப்தியடைதல் நிம்மதியைத் தரும். பொருளாசையை வளர்த்துக் கொண்டே போனால் துன்பந்தான் விளையும்.

நாம் இறைவனைப் பார்க்கா விட்டாலும் இறைவன் நம்மைப் பார்த்துக் கொண்டே இருக்கிறார் ; ஆகையால் யார் நம்மைக் கவனித்தாலும் கவனிக்கா விட்டாலும் இறைவன் நம்மைக் கவனித்துக் கொண்டிருக்கிறார்.

உள்ளத்தின் மேல் பகுதிக்கு வருகின்ற அனுபவங்களை அறிவு என்கிறோம் ; உள்ளத்தின் மேல் பகுதிக்கு வராத அனுபவங்களை இயல்பு அல்லது வாசனை என்கிறோம் ; அவ்வாசனைக்கும் அப்பால் இருப்பதுதான் ஆத்ம சொரூபம்.

நம்மை விட்டுப் பிரிந்து போகும் உடலையும் உலகப் பொருள்களையும் பற்றிக் கவலைப்படுகிறோம். நம்மை விட்டு ஒரு பொழுதும் பிரியாத ஆத்மாவை உணராது இருக்கின்றோமே என்று கவலைப்படு.

கடவுளிடம் மனத்தை நிலைநிறுத்திப் பெற்றோர்களுக்கும், மனைவிக்கும், மக்களுக்கும் சேவை செய். வெளித் தோற்றத்தில் அவர்கள் உமக்குரியவர்கள் போன்று காட்டிக் கொள்ளலாம் ; ஆனால் உன் உள்ளத்தின் ஆழ் பகுதியில் அவர்கள் உனக்குரியவர்கள் அல்லர் என்பதை உணர வேண்டும்.

பாலை நீரோடு கலந்தால் நீரில் கலந்து அது தூய்மையை இழந்து விடும் ; ஆனால் பாலிலிருந்து வெண்ணெயை எடுத்து அதை நீரில் வைத்தால் நீரில் கலந்து போகாது, அது மிதக்கும். அங்ஙனம் ஆத்ம சாதனையின் மூலம் மனத்தில் பக்தி உணர்வை உண்டு பண்ணி விட்டால் அதில் உலகப் பற்று உண்டாகாது.

நன்றி : ''தர்ம சக்கரம்''

# 40. சுவாமி விவேகானந்தரின் அறநெறி

ஒரு செடியை நீ வளர்க்க முடியாது. அங்ஙனம் ஒரு குழந்தைக்கு நீ புகட்ட முடியாது. செடி தன் இயல்புக்கேற்ப தானே வளர்ச்சியடைகிறது. அவ்வாறு குழந்தை தனக்குத் தானே கற்றுக் கொள்கிறது. செடியின் வளர்ச்சிக்கு நீ உதவுவது போன்று குழந்தையின் வளர்ச்சிக்கும் நீ உதவலாம். குழந்தை வளர்ச்சியடைவது உன் கைவசம் இல்லாவிட்டாலும் குழந்தையின் வளர்ச்சிக்குத் தடையாக இருப்பதை நீ அகற்றி வைக்கலாம். அவ்வாறே அறிவுக்குத் தடையாக இருப்பதை நீ அகற்றி வை. அறிவு தானாகவே வெளிப்படும். மண்ணை மிருது படுத்தினால் விதை முளைத்து வெளிவரும். பிறகு செடியைச் சுற்றி வேலியமை. பிற உயிர் செடியை அழித்து விடா வண்ணம் அவ்வேலி பாதுகாக்கும். செடியின் வளர்ச்சிக்கு வேண்டி நீர், உரம் முதலியவற்றைக் கொடு. அத்துடன் உன் வேலை முடிந்து விடுகிறது. செடி அதற்குத் தேவை யானதை எடுத்துக் கொண்டு அது தானாகவே வளர்ச்சி யடையும். அவ்வாறே தான் குழந்தை தானாகவே கற்றுக் கொள்கிறது.

அறிவனைத்தும் மனிதனிடத்தில் இருக்கிறது. அதற்கு எழுச்சி தேவைப்படுகிறது. அவ்வேலையைத்தான் ஆசிரியர் செய்ய வேண்டும். மாணாக்கன் தன்னுடைய புத்தி, கை, கால், காது, கண் ஆகியவற்றைச் சரியாகப் பயன்படுத்த அவனுக்கு உதவுவதுதான் ஆசிரியர் செய்ய வேண்டிய போதனையாகும்.

உள்ளத்துக்கு ஊக்கம் தரும் உடன்பாட்டுக் கருத்துக் களே வழங்கப்பட வேண்டும். உள்ளத்தைத் தவிர செய்யும் எதிர்மறைக் கருத்துக்கள் வழங்கப் படலாகாது. படிப்பதற்கும் எழுதுவதற்கும் ஊக்கத்தையும் உற்சாகத் தையும் அளிக்க வேண்டும். படிப்பதிலும் எழுதுவதிலும் வெறுப்பு ஏற்படும் முறையில் மாணாக்கர்களைத் தாழ்வுறுத்திப் பேசலாகாது. அவர்களை உற்சாகப் படுத்தும் முறையில் இனிமையான சொற்களை அவர் களிடம் கூறினால் நாளடைவில் அவர்கள் முன்னேற்றம் அடைவார்கள். சுயமாக அவர்கள் அறிந்து கொள்ளவும், சுயமாக செயல்படவும் தூண்டக்கூடிய உடன்பாட்டுக் கருத்துக்களைத்தான் அவர்களிடம் எடுத்துக் கூற வேண்டும். அவர்கள் மொழிகளைப் பேசுவதிலுள்ள குறைகளைச் சுட்டிக்காட்டாது சரியாகப் பேசும் முறை யைத்தான் அவர்களுக்குக் கூற வேண்டும். அங்ஙனம் செயலில் உள்ள குறைகளைச் சுட்டிக் காட்டாது சரியாகச் செய்யும் முறையைக் காட்டித் தரவேண்டும். யார் யாருக்கு என்ன முறையில் கற்பிக்க வேண்டுமோ அந்த முறையைப் பின்பற்ற வேண்டும். முன்பு வாழ்ந்த வாழ்வு இயல்பாக மாறி மாணாக்கர் இடத்தில் இருக்கிறது. அவ்வியல்புக்கு ஏற்ற முறையில் கற்பித்தல் அமைய வேண்டும்.

ஒவ்வொருவரும் இருக்கின்ற நிலையிலிருந்து இன்னும் மேல் நிலைக்குச் செல்வதற்கு உதவவேண்டும். யாரையும் ஒதுக்கக்கூடாது. ஸ்ரீராமகிருஷ்ணர் சமுதாயத்தால் ஒதுக்கப்பட்ட கீழான மக்களுடைய வாழ்க்கையையும் மாற்றியமைத்து அவர்களை மேலானவர்களாக ஆக்கி இருக்கிறார்.

ஒருவன் எவ்வளவு கீழ் நிலையில் இருந்தாலும் அவனுக்கு ஊக்கம் கொடுத்து அவனை உயர்த்தி இருக் கிறார். கல்வி என்பது நீ மூளையில் எவ்வளவு செய்தி களைத் திணித்து வைத்திருக்கிறாய் என்பதைக் குறிப்ப தன்று. விளங்காத விஷயங்கள் நம் வாழ்க்கைக்குப்

பயன்படா. பண்பை வளர்த்து உயர்ந்த கருத்துக்களை எல்லாம் வாழ்வு மயமாக மாற்றி அமைக்க உதவுவதே கல்வியாகும். ஐந்து கருத்துக்களைச் சரியாகப் புரிந்து கொண்டு அவற்றிற்கு ஏற்ப வாழ்வை அமைத்து அக்கருத்துக்கு ஏற்ற பண்பாளனாக விளங்குபவன் நூலக நூல்கள் முழுவதையும் மனப்பாடம் செய்தவனைவிடக் கற்றவன் ஆவான்.

அந்நிய மொழியில் பிறருடைய கருத்துக்களை மனப்பாடம் செய்து பல்கலைக் கழகப் பட்டங்களைப் பெறுவதே கல்வியென்று இன்றைய உலகம் கருதுகிறது. இதுவா கல்வி? கல்வியின் குறிக்கோள் தான் யாது? ஒரு கணக்கராகவோ, எழுத்தராகவோ, வழக்கறிஞராகவோ, நியாயாதிபதியாகவோ ஆவதுதான் கல்வியின் இலட்சியமா? அவ்வாறு உன்னை ஆக்கிக்கொள்ளுவதன் மூலம் உலகுக்கு என்ன நன்மை வந்து விடப் போகிறது?

மக்களுடைய நிலையையும் வாழ்வைப் பற்றிய உண்மையையும் கண் திறந்து பார்ப்பதற்கு கல்வி உனக்கு உதவி புரிந்திருக்கிறதா? உன் இதயம் மக்களுக்காக உருகவும், நல்வழியில் செல்வதற்கு இடையூறாக இருக்கும் யாவற்றையும் எதிர்த்து நிற்கவும் வேண்டிய உள்ளத்தை உருவாக்கக் கல்வி உனக்கு உதவி புரிந்திருக்கின்றதா? அரசாங்கம் வைக்கும் தேர்வுகளில் தேறிப் பட்டங்களைப் பெறுவதா கல்வியின் நோக்கம்?

வாழ்க்கைப் போராட்டங்களைச் சமாளிப்பதற்கு ஆயத்தப் படுத்தாதக் கல்வியும், பண்பாட்டை வழங்காத கல்வியும், ஆண்மை தராத கல்வியும் கல்வியென்ற பெயருக்குத் தகுதியாகுமா? பிறரைச் சாராது தன்னையே சார்ந்திருந்து வாழ முடியும் என்ற தன்னம்பிக்கையை ஊட்டுகின்ற கல்விதான் உண்மையான கல்வி. இன்று பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் வாழ்க்கைக்குப் பயன்படாத கல்வியைத்தான் பெற்று வருகிறார்கள். அக்கல்வியின் மூலம் ஜடத்தன்மை தான் வளர்ந்து வருகிறது.

பண்டைய கல்வி நமக்குத் தேவை. மனோபலம் கல்வியின் மூலம் அமைய வேண்டும். தன்னையே நம்பியிருக்கும் விசால புத்தி ஏற்பட வேண்டும். ஆங்கிலத்தோடு மேல் நாட்டுப் பௌதிக விஞ்ஞான அறிவும் நமக்

குத் தேவை தொழிற்சாலையை வளர்க்கின்ற தொழில் நுட்ப அறிவும் தேவை. பிறருடைய சேவையை எதிர் பாராது எத்தகைய நெருக்கடியிலும் நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ள நம்மைத் தகுதியுடையவராக ஆக்கும் கல்வி நமக்குத் தேவை.

கல்விப் பயிற்சி அனைத்தும் மனிதனை மனிதனாக்கும் வழிவகைச் செய்ய வேண்டும். நம் இச்சையை ஒழுங்குப் படுத்தி நம் கட்டுப்பாட்டில் வைத்து நமக்குப் பயனுடைய தாகச் செய்வதற்கு உதவுகின்ற கல்வியே உண்மையான கல்வியாகும். இங்ஙனம் நமக்கு கூரிய அறிவினையும், இரும்பு தசையினையும், எஃகு நரம்பினையும் வழங்கக் கூடிய கல்வி வேண்டும்.

பண்டைய குருகுலக் கல்வி முறையில் மாணாக்கர் களும் ஆசிரியர்களும் சேர்ந்து வாழ்ந்திருந்தார்கள். அது இன்றைக்குத் தேவைப்படுகிறது. மேல்நாட்டு விஞ்ஞான மும் வேதாந்தமும் சேர்ந்து அமைந்த கல்வி வேண்டும். பிரம்மச்சரியம் என்ற தூய்மை வாழ்வின் வழிகாட்டியாக அமைய வேண்டும். அத்துடன் தன்னம்பிக்கையும் சிரத்தை யும் சேர்ந்திருக்க வேண்டும். குருவும் சீடனும் ஒன்றாக வாழும் வாழ்விலிருந்துதான் கல்வி அமையும். குருவினு டைய நேரிடைத் தொடர்பு இல்லாத கல்வி கல்வியாகா? பண்பாட்டில் உச்ச நிலையில் இருக்கும் உயர்ந்த கொள் கையை வாழ்வில் கடைபிடிக்கும் ஒருவரோடு இளமை யிலிருந்தே வாழ வேண்டும்.

கல்வி பெறுவதற்கு அடுத்த நிபந்தனை மன ஒருமுகப் பாடே ஆகும். மனம் ஒருமுகப்படாது எக்கலையும் வாய்க் காது. ஒரு கலையைப் பற்றி அறிவைப் பெறுவதற்கு அக் கலையில் மனம் ஒருமுகப் பெற வேண்டும். பரி சோதனைச் சாலையில் ஒரு பொருளின் மீது மனத்தை ஒரு முகப்படுத்தும் பொழுதுதான் அப்பொருளைப் பற்றி இரகசியம் எல்லாம் வெளியாகிறது. வான சாஸ்திரி தூர தர்சனியின் மூலம் வானிலுள்ள நட்சத்திரங்கள் மீது மனத்தை ஒருமுகப்படுத்துகின்றான். அப்பொழுது அவை களைப் பற்றிய உண்மைகள் எல்லாம் அவனுக்கு விளங்கு கின்றன. மாணாக்கனும் ஆசிரியரும் கல்வித்துறையில் மன ஒருமுகப்பாட்டுடன் செயல்பட்டால்தான் உண்மை யான அறிவைப் பெற முடியும்.

நன்றி : 'தர்ம சக்கரம்'

# 41. சுவாமி சிவானந்தரின் அறநெறி

ஒரு சாதகன் கோபத்தை அடக்கி விட்டால் அவனது சாதனையில் பாதி பாகம் முடிந்து விடுகிறது. கோபத்தை அடக்கியவன் தீய செயல்களில் ஈடுபட மாட்டான். அவன் எப்பொழுதும் அமைதியாக இருப்பான். இனிய வார்த்தைகளையே பேசுவான்.

இலேசாக கோபம் வருவதற்குரிய அறிகுறி மனத்தில் தோன்றும் போதே அதை அடக்கி விடுங்கள். சிறிதளவு சினம் தோன்றும் போதே பேச்சை நிறுத்தி விட்டு மௌனத்தை மேற்கொள்ளுங்கள். தினமும் ஒன்று அல்லது இரண்டு மணிநேரம் மௌன விரதம் அனுஷ்டிப்பதானது கோபத்தை அடக்கப் பெரிதும் உதவும். கோபத்தை அடக்குவது இயலாவிட்டால் உடனே அந்த இடத்தை விட்டு அகன்று சுறுசுறுப்பாகக் கொஞ்ச தூரம் நடந்து விட்டு வாருங்கள். கொஞ்சம் குளிர்ந்த நீரைப் பருகுங்கள். சினம் அகலும் சீற்றம் தணியும். உங்களிடம் அமைதியும் அடக்கமும் உண்டாகும்.

தோன்றி மறையும் இன்பம் தருபவை துன்பத்தின் பிறப்பிடம் என்பதை நினைவில் வையுங்கள். காபி உங்களுக்கு இன்பத்தைத் தருவதாக நீங்கள் கருதுகிறீர்கள். ஆனால் காபி கிடைக்கவில்லையானால் உங்களது மனம் துன்பப்படுகிறது. விவேகம் உள்ளவனுக்கு எல்லாம் துக்க மயம். சில நாட்களுக்கு காபி குடிக்கும் பழக்கத்தை நிறுத்திப் பழகுங்கள். உங்களை நீங்களே அடக்கி ஆளுங்கள். உங்களது இச்சா சக்தியை வளர்த்துக் கொண்ட

பிறகு எப்பொழுதாவது உங்கள் நண்பர் உங்களுக்கு காபி தந்தால் அதைக் குடிப்பதில் தவறில்லை. உங்களுக்கு மயக்கமோ சோர்வோ ஏற்படாது.

புலனின்பத்திற்காக உங்கள் மனமானது ஒரு பொருளின் பின்னே ஓடுமேயாகில் "ஏ மனமே! தியானத்தினால் ஏற்படும் இன்பத்தை நான் உனக்குத் தருகிறேன். என்னை இப்போது மயக்கத்தில் ஆழ்த்தாதே, விட்டு விடு" என்று கூறி இறையருளை நாடி நில்லுங்கள் இறைவன் உங்களுக்குத் துணை நிற்பார். இதில் எவ்வித ஐயமுமில்லை.

இவ்வுலகில் பெரும்பான்மையோர் அற்ப மனம் படைத்தவர்களாக உள்ளனர். நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர் ஏதாவது ஒருவகையில் அற்பபுத்திக்காரர்களாகவே இருக்கின்றனர். மற்றவர்கள் நல்ல நிலைமையில் இருப்பதைக் கண்டால் அற்ப புத்திக்காரர்களின் இதயம் தகிக்க ஆரம்பிக்கிறது. மற்றவர்களின் வெற்றியையும் நற்பண்புகளையும் குறித்துக் கேள்விப்படுகையில் அவர்களது மனம் வெந்து புழுங்குகிறது. அவன் அவர்களைத் தூற்ற ஆரம்பிக்கிறான். எந்தவிதக் காரணமுமின்றி அவர்களிடம் பகைமையை உருவாக்கிக் கொள்ளுகிறான். அதன் விளைவாக தனக்குத் தானே துன்பத்தை உண்டாக்கிக் கொண்டு இவ்வுலகிலேயே நரக வேதனையை அவன் அனுபவிக்கின்றான்.

பரந்து விரிந்த மனத்தைப் பெற்று விளங்குங்கள். பிறரது வெற்றியில் நீங்கள் மகிழ்ச்சி அடையுங்கள். பிறரது இன்பத்தில் நீங்கள் இன்புறுங்கள். உங்களது வாழ்க்கை அமைதியும் இன்பமும் நிறைந்ததாக அமையும்.

பகலில் தூங்குவது ஒரு தீய பழக்கமாகும். இது வாழ்நாளைக் குறைக்கிறது. இதனால் பொன்னான நேரம் பெருமளவில் வீணாக்கப்படுகிறது. இது சோம்பேறித் தனத்தையும், மந்த குணத்தையும் உண்டாக்குகிறது.

பகலில் தூங்குவதால் பித்தம், அஜீரணம் மற்றும் பலவிதமான நோய்கள் உண்டாகின்றன. நீங்கள் விரைவில் சரீர, மன வளர்ச்சி பெற விரும்பினால் இந்த வழக்கத்தை விட்டொழியுங்கள் ஒவ்வொரு வினாடியும் சரிவர பயன்படுத்துங்கள். வாழ்க்கை குறுகியது. காலம் பறந்தோடுகின்றது. மரணம் நம்மைக் கவ்விப் பிடிக்கக் காத்துக் கொண்டு இருக்கிறது. நேரத்தை நன்கு பயன் படுத்தி வாழ்க்கையில் வெற்றியையும் ஆனந்தத்தையும் அடையுங்கள்.

நற் கருமங்களிலிருந்து இன்பமும், தீய கருமங்களி லிருந்து துன்பமும் தோன்றுகின்றன. செயல்கள் எப்பொழுதும் விளைவைக் கொடுத்தேயாக வேண்டும். செயலின்றிப் பயனுண்டாகாது. நற்செயலே இறைவனி டத்து நம்மை இட்டுச் செல்ல வல்லது.

உங்கள் சிந்தனை, சொல், செயல் மூன்றிலும் எந்த உயிருக்கும் துன்பம் தராதீர்கள். பரந்த மனப்பான்மை யைக் கொண்டு விளங்குங்கள். சினம், பொறாமை ஆகிய தீய குணங்களிலிருந்து விடுபட்டிருக்க முயலுங்கள். உங்கள் ஆசிரியர்களையும், பெரியோர்களையும் மதித்து வணங்குங்கள். சிரத்தை பக்தியுடன் இறைவழிபாட்டில் ஈடுபடுங்கள். இன்னா செய்தார்க்கும் இனியதே செய்யுங் கள்.

நன்றி : 'சமய ஜோதி'

## 42. மகாத்மா காந்தியின் அறநெறி

"முற்றிலும் அறியாமையால் ஆழ்ந்துள்ள மக்களுக்கு ஆசைகள் காட்டி அவர்கள் மதம் மாறும்படி செய்வதை நான் பலமாகக் கண்டிக்கிறேன். என்னிடமும் அவ்வித முயற்சிகள் நடைபெறுகின்றன. அத்தகைய முயற்சிகளை நான் அறிந்துகொள்ள முடியும். ஏனெனில் அவ்விஷயமாக அவர்கள் என்னிடம் வாதிக்க முடியும். நானும் அவர்களுடன் வாதிக்க முடியும். ஆனால் ஹரிஜனங்களிடம் செய்யப்படும் அம்முயற்சிகள் எனக்கு நிச்சயமாக கோபத்தையே உண்டாக்குகின்றன. ஒரு கிறிஸ்துவப் பிரச்சாரகர் ஓர் ஹரிஜனிடம் சென்று ஏசுநாதர் ஒருவர் தான் கடவுளுக்குப் பிறந்த புதல்வர் என்று கூறினால் அந்த ஹரிஜன் ஒன்றும் புரியாமல் அவரை வெறித்துப் பார்ப்பார். பின்னர் பிரச்சாரகர் அவரை மயக்குவதற்காகப் பலவிதமான ஆசைகள் காட்டுவார். இவையெல்லாம் கிறிஸ்துவ சமயத்தையே இழிவு படுத்துவதாக இருக்கின்றன.

ஏசுநாதர் ஒருவர்தான் கடவுளின் புதல்வர் என்பதை நான் அப்படியே உண்மையென்று ஏற்றுக் கொள்ள முடியாது. பிரத்தியேகமாக ஒருவருக்கு மாத்திரம் தந்தையாக இறைவன் இருக்க முடியாது என்பது என் எண்ணம்.

கண்ணன், இராமன், முகமது, முதலியவர்களைப் போலவே ஏசுநாதரும் தெய்வத் தன்மை பொருந்தியவர் என்பதே எனது அபிப்ராயமாகும்.

பிறப்பும் இறப்பும் மனிதரால் தவிர்க்க முடியாதவை. மிருகத்திலிருந்து மனிதனை வேறுபடுத்துவது, உள்ளே யுள்ள ஆன்மாவை உணரவேண்டும் என்கின்ற அவனது நெஞ்சார்ந்த முயற்சியேயாகும். பிரார்த்தனையில் கூறப்படும் கீதையின் இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள கடைசி பதினெட்டு பாடல்களும் வாழ்க்கைக் கலையின் ரகசியத்தைச் சாரமாகக் கற்றுக் கொடுக்கின்றன.

வாழும் கலையிலிருந்து அதற்கு அனுசரணையாக இறக்கும் கலையும் தொடருகிறது. மரணம் எல்லோருக்கும் வந்துதான் தீரவேண்டும். ஒரு மனிதன் இடி விழுந்தோ, மாரடைப்பு காரணமாகவோ அல்லது மூச்சு நின்றோ சாகலாம். ஆனால் சத்தியாக்கிரகி தான் அடைய விரும்பும் அல்லது பிரார்த்திக்கும் மரணம் அது அல்ல. தமது கடமையைச் செய்வதில் மகிழ்ச்சியுடன் மரணத்தை வரவேற்பதே ஒரு சத்தியாகிரகிக்கு இறக்கும் கலையாகும். விரோதிக்குக் காயத்தை உண்டாக்கவோ அல்லது அவரது உயிரைப் போக்கவோ விரும்பாமல் இருப்பது மாத்திரம் போதாது. உங்கள் விரோதி கொலை செய்யப்படும் போது, நீங்கள் மௌனமாகவோ, செயலற்றோ பார்த்துக் கொண்டிருந்தால் நீங்கள் சத்தியாக்கிரகிகள் அல்ல. உங்கள் உயிரைக் கொடுத்தாவது உங்களுடைய விரோதியை நீங்கள் காப்பாற்ற வேண்டும். ஆயிரக்கணக்கான இந்தியர்கள் அந்தக் கலையைக் கொண்டு விட்டால், பின்னர் இந்தியாவின் நிலைமையே மாறிவிடும். பின்னர் இந்தியாவின் அகிம்சைக் கொள்கை பலவீனத்தை மறைக்கும் ஒரு போர்வையாக இருக்கிறதென யாரும் இழிவாகச் சுட்டிக் காட்ட முடியாது."

"இன்று உருவாகி வரும் நான் காணும் இந்தியாவில் எனக்கு இடமில்லை. எனவே 125 வயது வரையில் வாழும் நம்பிக்கையை நான் கைவிட்டு விட்டேன். நான் இன்னும் ஒன்று அல்லது இரண்டு வருடங்கள் இருக்கலாம். அது

வேறு விஷயமாகும். இன்றுள்ள நிலைமையைப் பார்த்தால் பலாத்காரமாகிற பிரளயத்தில் இந்தியா மூழ்கி விடும்போல் தோன்றுகிறது. அவ்விதமாயின் இந்தியாவில் உயிர் வாழ நான் விரும்பவில்லை. இங்கே வகுப்பு வெறி தாண்டவமாடி வருகிறது. ராணுவ மயமாக்குவது பற்றியும், தொழில் மயமாக்குவது பற்றியும் பேசி வருகிறார்கள். இந்தியா முதல் தரமான ராணுவ வல்லரசாகவும் தொழில் துறைகளில் மிக மிக முன்னேற்றம் அடைந்துள்ள நாடாகவும் விளங்கலாம். எனினும் அத்தகைய இந்தியாவில் அகிம்சையின் அறிகுறிகளான கிராமக் கைத்தொழில்களுக்கோ அல்லது கதருக்கோ எங்கே இடம் இருக்கிறது?"

இது 1947 ஜூன் எட்டாம் தேதி மகாத்மா காந்தி சொன்ன கருத்து வெளியாயிற்று. மகாத்மா அறநெறியிலும், அகிம்சை நெறியிலும் எவ்வளவு உறுதியாக இருந்தார் என்பதை மிகத் தெளிவாக நமக்குப் புரியவைக்கிறது. அவருடைய வாழ்நாளையும் அவர் கணக்கிட்டு வைத்திருந்தார் என்பது கூட புரிந்துகொள்ள முடிகிறது.

காந்தி என்றும் அறநெறியையும், அன்பு வழியையுமே கடைபிடித்தார். எனவேதான் அவர் 'மகாத்மா' என அழைக்கப்படுகிறார். உலகில் இருந்த, இருக்கும் மகாத்மாக்கள் யாருமே அறநெறியையும் அன்பு வழியினையும் கலந்த இறை நெறியினை கடைபிடிக்காது இருப்பவர்கள் அல்ல.

மகாத்மா காந்தி அவர்கள் அரசியல் காரணமாகவே முதலில் அனைவருக்கும் அறிமுகமானவர். ஆனால் அவர்கள் கொள்கை, விடுதலைப் பெற எடுத்துக்கொண்ட முறை இவைகளே அவரை ஒரு ஞானியாக வெளிப்படுத்தியது. அவர் எதற்கும் அஞ்சாதவர் என்பது மட்டும் இல்லை, அவர் எதையும் அற்புதம் என்று கூட எண்ணாதவர். எனவேதான் மகாத்மாவானார். அத்தோடு அவரின் இறை பக்தியே தனி வழியாகும்.

காந்தி ஒருமுறை ஷிமோகாவுக்குச் சென்றிருந்தார். அவருடன் காகா காலேல்கர் போன்றவர்களும் உடன் சென்று இருந்தனர். காலேல்கர் காந்தியடிகளிடம் "இங்கே கெரசப்பா நீர்வீழ்ச்சியை நாம் பார்க்க வேண்டாமா? இவ்வளவு தூரம் வந்துவிட்டு இதைப் பார்க்காமல் போகலாமா?" என்றார்.

"எனக்கு நிறைய வேலைகள் இருக்கின்றன. மனம் போன போக்கில் சுற்றிக் கொண்டிருக்க நேரமில்லை. வேண்டுமானால் நீங்கள் போய்ப் பார்த்து விட்டு வாருங்கள்" என்றார் காந்தியடிகள்.

"உலகச் சிறப்புமிக்க நயாகரா நீர்வீழ்ச்சியை விட இது மிக உயரத்திலிருந்து வீழ்கிறதாம். இதை நீங்கள் அவசியம் பார்க்க வேண்டும்" என்று வற்புறுத்தினார் காலேல்கர்.

"இதிலென்ன அதிசயம்! ஆகாயத்திலிருந்து விழும் மழைத் தண்ணீரை விடவா இது உயரத்திலிருந்து கொட்டுகிறது?" என்று பதிலளித்தாராம் காந்தியடிகள்.

ஒரு சமயம் காந்தியடிகள் அவருடைய நண்பர் தாதா தர்மாதிகாரியுடன் பேசிக்கொண்டிருந்தார்.

"பாபுஜி! கடவுள் கொசுக்களை ஏன் படைத்தார்" என்றார்.

"உங்களைப் படைத்தது யார்?" என்றார் காந்தியடிகள்.

"ஏன்? கடவுள்தான்" என்றார் அவர்.

"உங்களை ஏன் படைத்தார்?" என்று கேட்டார் காந்தியடிகள்.

பதில் சொல்ல முடியாது மௌனம் சாதித்தார் தாதா.

"கடவுள் என்ன நோக்கத்தில் ஒவ்வொரு ஜீவனையும் படைத்தார் என்பது யாருக்கும் தெரியாது. அதுதான் இறைவனின் படைப்பு இரகசியம் என்றார் காந்தியடிகள்.

# 43. டாக்டர் இராதாகிருஷ்ணனின் அறநெறி

அதிகம் படித்தவன் மட்டும் நல்ல மாணவனாகிவிட முடியாது. நல்ல முறையில் அறிவு புகட்டப் பெறுபவனே நல்ல மாணவன். அவன் நூல்களிலிருந்து பெறும் அறிவைக் காட்டிலும் ஆசிரியர்களிடமிருந்து அதிகம் பெறுவான். ஆகவே நம் ஆசிரியர்கள் நல்ல தகுதியுடைய வர்களாய் புலமையோடு, மாணவர்களிடம் அனுதாபமும் கொண்டவர்களாய் இருப்பது அவசியம்.

உலகாயுத விவகாரங்களிலும் நிலையற்ற கவர்ச்சி களிலும் நாம் ஆழ்ந்துள்ள நிலையிலும் நம் முயற்சிகளை வெறுமையிலிருந்து காத்து, மீட்சியடைய வழிகாட்டும் நிலையான பண்பியல்புகள் சில உண்டு. அவற்றில் தலை யாயது ஆன்மீகப் பண்புகளில் ஆழ்ந்த நம்பிக்கை. தூய்மையும், கட்டுப்பாடும் நிறைந்த வாழ்க்கையைக் கடைபிடிப்பதற்கு மனைவியையும் குடும்பத்தையும் துறக்க வேண்டுமென்ற அவசியமில்லை. மிகச் சாதாரண மனிதனின் வாழ்வையும் புனிதத் தன்மை ஆட்கொள்ள இயலும். நமது அன்றாடக் கடமைகளையும் சோதனை களையும் மனமுவந்து ஏற்றுக் கொள்வதில் புனிதத்தன்மை வெளிப்படுகிறது. தன்னை அறியாமல் தோன்றும் பண்பு, தூய்மை ஒரு ஞானி தன்னுடைய புனிதத் தன்மையை உலகுக்கு பறை சாற்றிச் சொல்வதில்லை.

சமூக மாறுதல்கள் மிக வேகமாக ஏற்பட்டு வரும் உலகில் நாம் வாழ்ந்து வருகிறோம். இந்த வேகமே

மனிதனின் ஆன்மாவுக்கு ஆபத்தில் முடியும் போல் தோன்றுகிறது. நம்பிக்கை, ஏமாற்றம், இலட்சிய அபிலாசை, அமைதியின்மை ஆகிய பல நிலைகளையும் நாம் கடக்கின்றோம்.

சிலர் மாறுதல்களை விரும்புகின்றனர். வேறு சிலர் அந்த மாறுதல்களை எதிர்க்கின்றனர். நம்முடைய பண்பாட்டில் போற்றுதற்குரிய அம்சங்களை வளர்த்து, வீணான நன்மை பயக்காத அட் சங்களை ஒதுக்கி அகற்றும் முறையே கல்வி யெனப்படும். உறுதி ஊட்டி நிலைப் படுத்தும் சக்தியாக அது இயங்குகின்ற அதே சமயத்தில், புதுமையையும் மாறுதல்களையும் புகுத்தும் சக்தியாகவும் அது செயலாற்றுகின்றது. அதன்மூலம் இளைஞர்கள் நாட்டின் நற்குடி மக்களாவதற்கு நாம் உதவுகின்றோம். இன்றுள்ளது போன்ற சிக்கல் இல்லாமல் எளிய முறையில் அமைந்திருந்த சமுதாயங்களில் குடும்பம், சமய, சமூக, அரசியல், அமைப்புகள் ஆகியவற்றால் சாதிக்க முடிந்தவற்றை இன்று கல்வி நிலையங்கள்தான் சாதிக்க வேண்டியுள்ளன. மனிதன் உள்ளத்திலும் இதயத்திலும் மாறுதல் ஏற்படுத்தும் பொறுப்பு அவற்றைச் சார்ந்தது அறிவினால் மனம் பண்பட்டு, அறத் தூய்மையால் இதயம் கனிந்து விட்டால் மட்டும் மனிதன் சரியான நெறியைக் கடைபிடித்தொழுகுவான் என்று நம்புவது தவறு.

விஞ்ஞானத் தொழில் நுட்பம் வளர்ந்துள்ள சகாப்தத்தில் தேசிய நீதிப் பிரச்சனைகளைச் சமாளிக்கவும் அவை மட்டும் போதா. மனிதன் உள்ளத்தில் குமுறும் ஆத்திரங்களும், வெறியுணர்ச்சிகளும் இயற்கையின் கொந்தளிப்புகளைவிட ஆபத்தானவை. நம்முடைய வெறிகளையும் இச்சைகளையும் அதிகார ஆதிக்க மோகத்தையும் கட்டுப் படுத்த நம்மால் இயன்றது அனைத்தையும் நாம் செய்ய வேண்டும். கல்வியும் தியானமும் மட்டும் பிரம்மச்சரியம் ஆகிவிடாது. உடலும் உள்ளமும் கற்போடு ஒழுகுவதே பிரம்மச்சரியம். பிரம்மச்சரிய விரதத்தைக் கடைபிடிப்

பவன் பிரம்மச்சாரி. அவன் ஆசிரியருடன் வாழ்ந்து அவர் உதாரணத்தால் பயன் அடைபவன். உலகத்தையும் உலக ஈடுபாடுகள் பற்றுதல் அனைத்தையும் மனமுவந்து துறந்த வர்களுடன் நாம் வாழும்போது அவர்கள் அறிந்து ஆட் கொண்டுள்ள இரகசியங்களில் நாமும் பங்கு கொள்ளலாம் என்று எதிர்பார்க்கலாம். இந்த உலகத்துக்கு அப்பாற் பட்ட அமைதியை அனுபவித்துப் பிறருக்கும் அளிக் கின்றனர் உண்மை ஞானிகள்.

நமது மாணவர்களிடையே கட்டுப்பாடு உணர்வு மிகக் குறைந்து உள்ளது என்பது அனைவரும் அறிந்ததே. சுதந்திரப் போராட்ட காலத்தில் நாம் சாத்வீக ஒத்துழை யாமையைப் பின்பற்றினோம். சுதந்திரப் போராட்டக் கட்டத்தில் அது நியாயமானது. ஆனால் இன்று நாம் சுதந்திரத்தைப் போராடிப் பெற்றபின் அச்சுதந்திரம் நிலைத்து நிறைவு பெற வேண்டுமானால் கட்டுப் பாட்டுணர்வும் ஒத்துழைக்கும் மனப்பான்மையும் நமக்குத் தேவை.

தான் விரும்பும் வழியில் மாணவன் மனத்தைத் திருப்பிப் பக்குவப்படுத்துவது ஆசிரியருடைய பொறுப்பா? அல்லது மாணவன் மனம் தன் இயல்புக்கிணங்க இயற்கை யான வளர்ச்சியடையச் சுதந்திரம் தந்து ஒதுங்கி நிற்பது ஆசிரியருடைய கடமையா? என்ற கேள்வி சில சமயங்களில் எழுப்பப்படுகிறது. இந்த இரு கருத்துக்களுக்கும் ஆதரவு கிடைத்துள்ளது என்பதைக் கல்வி தத்துவ வரலாற்றில் காணலாம். இதில் பகவத்கீதை நமக்குச் சரியான நெறியை வகுத்துக் காட்டுகிறது.

ஒரு பொருள் பற்றிக் கூறப்பட்டுள்ளதில் சிறந்ததை மாணவன் முன் படைத்து அதைக் கொண்டு மாணவன் சுயமாக ஆலோசனை செய்து முடிவைத் தேர்ந்தெடுக்க சுதந்திரம் அளிக்க வேண்டும். வானொலி, திரைப்படம், செய்தித்தாள் போன்ற பிரச்சார சாதனங்களின் தாக்குதல் களிலிருந்து மனத்தில் சுதந்திரத்தையும் கண்ணியத்தையும்

காக்குமாறு இக்கொள்கை நம்மை அழைக்கின்றது. காட்சியின் பயனாக தோன்றும் எண்ணங்களை அவ்வாறே ஏற்றுக் கொள்ளாமல் பரிசீலனை செய்து ஆராய்ந்து மதிப்பிட வேண்டும். எந்த மாணவனும் விசையால் இயங்கும் இயந்திரமாகவோ பிறர் ஆக்கினைப் படி ஆடும் பொம்மையாகவோ ஆகக் கூடாது.

அரசியலில் மட்டுமல்ல ; சமயங்களிலும் ஏதேச்சாதி காரக் கொள்கைகள் நிலவுகின்றன. நிலையான இறுதி யான உண்மை தங்களால் கண்டுபிடிக்கப்பட்டதா என்றும், நம் போதனைப் பயிற்சி அனைத்தும் இந்த உண்மையைப் பின்பற்றி அமைய வேண்டுமென்றும் வற்புறுத்துவது இக் கொள்கை.

இவ்வாறு கட்டாயத்திற்குப் பணிந்து, வகுக்கப்பட்ட கொள்கைக்குக் கட்டுப்பட்டு அனைவரும் நடக்க வேண்டு மென்ற கண்மூடித்தனமான போக்கு கல்லூரியில் புக இடந்தரக் கூடாது. மனிதனைப் பூரணமாக பொது வுடைமையாக்க முடியாது. மனிதர்களை இயந்திரங் களாக்கி அவர்கள் இயல்பு சிதறிச் சின்னாபின்னமாகச் செய்து அவர்கள் முழுமையைத் தகர்க்கக் கூடாது.

அறிவின் கண்ணியத்தைக் காப்பதன் சிறந்த வழி ஒரு சில நிமிடங்களாயினும் நம் பழமையான இலக்கியச் செல்வங்களைப் பயின்று தியானத்தில் ஈடுபடுவதாகும். பிரச்சாரக் கருவிகளின் தாக்குதல்களிலிருந்து நம்மைக் காத்துக் கொள்ள இவையே சிறந்த துணையாகும். நம் அறிவு விரிவடைந்து, செயல் பல்வேறு வகைகளில் சாத்விக முறையிலும், பலாத்கார முறையிலும்வெளிப்படும் வேளை யில் அமைதியான ஆலோசனையை நாம் 'தியானம்' என்று அழைப்பது மிகவும் அவசியமான தேவையாகும். வாழ்வின் இறுதிக் குறிக்கோளை நாம் மறக்கும் போதெல் லாம், நம் செயலுக்கும் சிந்தனைக்கும் உணர்வுக்கும் ஆன்மீக எழுச்சி ஆதாரமாக இல்லாத போதெல்லாம், மனித வேதனையும் துன்பமும் பெருகியுள்ளன என்பதை

வரலாற்றின் ஏடுகள் நன்கு உணர்த்தும். கண்ணியமும் அறப்பண்பும் வாய்ந்த குடிமக்களை அளிக்கக் கல்வி உதவும்.

இயற்கையின் போக்கில் நாம் குறுக்கிடக் கூடாதென்று எண்ணுவது தவறு. காலம் விடிந்தது முதற் கொண்டே இயற்கையின் போக்கில் குறுக்கிட நாம் தயங்கியது இல்லை. ஏக்கமுற்றுக் கலங்கி, இதைத் தவிர நமக்கு வேறு விதியில்லை என்றெண்ணும் கொள்கையை அவ்வளவு எளிதாக நாம் ஏற்றுக் கொள்ளவில்லை. மனிதன் ஒவ்வொருவனுக்கும் உள்ளாக தன் எதிர்காலத்தைத் தானே உருவாக்க உழைக்கத் தூண்டும் சக்தி ஒன்று ஆழப் பதிந்துள்ளது.

நமது மக்கள் படிக்காதவர்களாய் இருக்கலாம். ஆனால் அவர்கள் அறிவற்றவர்கள் அல்ல. அவர்களுக்கு பகுத்தறிவு உண்டு. சரியானபடி சொன்னால் அவர்கள் அதை ஏற்றுக் கொள்வார்கள்.

# முடிவுரை

அறநெறியினை நன்றாகப் புரிந்து கொண்டு அதன் படி நாம் நமது வாழ்வில் நாளும் வாழ முயலவேண்டும். நாம் வாழும்போது அடுத்தவர்களும் நலமுடன் வாழ துணைபுரிதல் வேண்டும். பொதுவாக இந்நூலில் குறிப் பிட்டுள்ள மனித குணங்களை நன்கு ஆராய்ந்து அதன்படி மெல்ல மெல்ல அதே நேரத்தில் உறுதியாக முன்னேற வேண்டும்.

அமைதியான வாழ்விற்கு அறநெறியினை அறியும் போது தானாக இறைநெறியும் நமக்கு வந்தடையும். இறைவன் என்று நாம் எண்ணும்போது நமது உள்ளத்தில் எந்தவித குழப்பமோ, மனத் தளர்ச்சியோ பெறுதல் கூடாது.

நாம் விரும்பும் எல்லாப் பொருள்களும் நம்மை வந்தடைவதில்லை. அதன் காரணமாக இறைவன் படைப் பில் நமக்கு இந்தக் குறை வந்துள்ளதே என்கிற ஏக்கம் வருகிறது. எப்படிப்பட்ட சூழ்நிலைக்கும் காரணம் என்று ஒன்று உண்டு. எனவே அந்தக் காரணத்தைக் கண்டு அறிந்து செயல்படவே நாம் எப்போதும் துணிய வேண்டும். தானாக வரும் என்பது கையாளாகாதவன் வாதம். 'செடி வைத்தவன் நீர் ஊற்றுவான்' என்பது சோம்பேறி குணம்.

இருப்பவர்களுக்கு உள்ள குறைகளை விட இல்லாதவர் களுக்கு உள்ள குறைகளே அதிகம். ஏழைகள் அதிகம் உள்ள நாடு நமது நாடு. எனவே ஒழுக்கம், அறநெறி, இறைநெறி இவர்களுக்கு அதிகம் தேவைப்படுகிறது.

அறநெறியே இறைநெறியைப் புகுத்தும். இதற்காக தனியே சென்று எங்கும் பயிற்சி பெறத் தேவையில்லை. மகிழ்ச்சி கலந்த வாழ்க்கை அனைவரும் பெற வேண்டும் என்பதே பொது நோக்கம். ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண விழைவோர்க்கு இந்நூல் பயன் படுமாக.

"அறநெறியே இறைநெறி" எனும் இந்நூல் எழுத பல நூல்களில் இருந்து குறிப்புகள் எடுக்க வேண்டியிருந்தது. மேலும் சில நூல்களில் இருந்து ஆன்றோர்கள் அறநெறியினை எடுத்துள்ளோம். அந்நூல்களின் பெயர்கள் நன்றியுடன் ;

1. **"தத்துவ ஞானிகளும் அவர்தம் கோட்பாடுகளும்"**
—வித்துவான் M. நாராயண வேலுப்பிள்ளை.
2. **"வெற்றிக்கு நிச்சயமான வழிகள்"**
—சுவாமி சிவானந்தா.
3. **"தர்ம சக்கரம்"** —மாத இதழ்.
4. **"இமய கீதம்"** —மாத இதழ்.

